ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பட்டர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த

# ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தில்

# உத்தர சதகம்

[ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய வியாக்கியானத்தோடு கூடியது]

श्रीपराशरभट्टार्यः श्रीरङ्गेशपुरोहितः । श्रीवत्साङ्कसुतः श्रीमान् श्रेयसे मेऽस्तु भूयसे ॥

ஸ்ரீபராசரபட்டார்ய: ஸ்ரீரங்கேசபுரோஹித:,
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ச்ரேயஸே மேஸ்து பூயஸே.

உரையவதாரிகை:—நம் ஆசார்யர்கள் அருளிச்செய்யும் ஸ்தோத்ரங்கள் ரஹஸ்யத்ரயார்த்த விவரணங்களாக அவதரிப்பனவேயன்றி ஸ்வதந்த்ரமானவையல்லவென்றும், இந்த ஸ்ரீரங்கராஜஸ்தவம் மந்த்ரரத்நமென்னும் த்வயத்திற்கு விவரணமாகப் பிறந்ததென்றும், இதுதன்னில், பூர்வசதகத்தாலே த்வயத்தின் பூர்வவாக்யப் பொருளையும் உத்தர சதகத்தாலே உத்தரவாக்யப் பொருளையும் விவரிப்பதாகப் பெரியோர் நிர்வஹிப்பர்களென்றும் உபக்ரமத்திலே உரைத்தோம்.

கீழ்ப் பூர்வ சதகத்தில், ஆசார்ய பரம்பராஸ்துதி முன்னுகை விழிந்து மங்களாசரணம் செய்து அவையடக்கம் கூறி, திருக்காவிரியில் நீராடினமையைப்பேசி அங்குள்ள சோலைகளின் வாய்ப்பை வருணித்து, திருவரங்கமாநகரின் சிறப்பைப் பாடி நகரபரிபாலகர்களை வணங்கி அவர்களிடத்து அநுமதிபெற்று உள்ளே புகுந்து அங்குள்ள ஸகல ஸ்தாவர ஜங்கமங்களையும் நித்ய முக்தர்களின் திருவுருவமாக பாவித்து வணங்கி, கோபுர ப்ராகாரங்களோடு கூடின பெரிய கோயிலின் நிலைமையை வருணித்து திருமங்கையாழ்வார் எடுப்பியருளப்பண்ணின திருமண்டபங்களையும் திருமதில்களையும் தொழுது, ஸந்நிதித்வாரபாலகர்களை ஸேவித்து, ஆயிரக்கால மண்டபத்தை மங்களாசாஸநஞ்செய்து, சந்த்ரபுஷ்கரிணியிற் குடைந்தாடினமைகூறி, ஆழ்வார்கள் பதின்மரையும் இறைஞ்சி, ப்ரணவாகாரவிமாநத்தைக் கைதொழுது, மேட்டழகியசிங்கரை மேவிவணங்கித் திருப்புன்னை மரத்தைத் தாழ்ந்து தொழுது, ஸேநை முதலியாரையும் பெரிய திருவடியையும் பரிவாரங்களுடன் போற்றி, பஞ்சாயுதாழ்வார்கள் சிறிய திருவடி விபீஷணாழ்வான் என்னுமிவர்களையும் வாழ்த்தி, திருப்பிரம்பையும் திருமணத்தூணையும் வழிபட்டு, கர்ப்பக்ருஹத்தை யநுபவித்து, திருவடி வருடும் பிராட்டிமார்களையும் சாமரம் பணிமாறும் மங்கைமார்களையும் துதித்து, ஆக இவ்வளவு அநுபவங்களையும் அறுபத்திரண்டு ச்லோகங்களாலே வரிசைக்ரமமாக வகுத்துரைத்து, இவ்வளவாலே த்வயத்திலுள்ள நாராயணபதத்தின் அவயவமான நாரபதத்தின் பொருளை விரித்துரைத்தநுபவித்து, இப்படிப்பட்ட நாரங்களுக்கு அயநமாகவுள்ள ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளைச் சரணம் புகுகின்றேனென்பதாக மேலுள்ள பதங்களை விவரிக்கும் முகமாக அறுபத்து மூன்றாம் ச்லோகந் தொடங்கி, சரணபதோபலக்ஷிதமான திவ்யாவயவங்களெல்லாவற்றிலும் மண்டியநுபவித்துப் பூர்வசதகத்தைத்

தலைக்கட்டிப் பூர்வவாக்யார்த்த விவரணமும் செய்தருளினாராயிற்று. இனி உத்தர சதகத்தாலே உத்தரவாக்யார்த்த விவரணம் பண்ணுகிறாராய்ச் செல்லுகிறார்.

த்வயத்தின் பூர்வவாக்யத்தாலே பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளை உபாயமாகப்பற்றுகிறதென்றும், உத்தரவாக்யத்தாலே அச்சேர்த்தியிலே அடிமை இரக்கிறதென்றும் ஆகையால், 'பூர்வவாக்யத்தாலே ப்ராபகம் சொல்லுகிறது, உத்தரவாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லுகிறது' என்றுமிறே நம் ஆசார்யர்கள் அருளிச்செய்து போருவது. உத்தரவாக்யத்திலுள்ள நாராயண சப்தத்துக்கு சேஷித்வத்திலேயிறே நோக்கு. எம்பெருமானே நமக்கு ப்ராப்த சேஷியென்னுமிடம் முதலிக்க வேணும்.

ப்ரமாதாவானவன் ப்ரமாணத்தைக் கொண்டிறே ப்ரமேயத்தை நிச்சயிக்க வேண்டுவது. அந்த ப்ரமாணந்தான் ப்ரத்யக்ஷாதிரூபேண அஷ்டவிதமென்பர்கள் :— சார்வாகனுக்கு ப்ரத்யக்ஷமொன்றே ப்ரமாணம் ; வைசேஷிகனுக்கும் பௌத்தனுக்கும் ப்ரத்யக்ஷ அநுமாநங்கள் ; ஸாங்க்யனுக்கு ப்ரத்யக்ஷ அநுமாந ஆகமங்கள் ; நையாயிகரில் பூஷணம்தாவலம்பிக்கும் இம்மூன்றுமே ப்ரமாணம். உதயநபக்ஷத்தில் ப்ரத்யக்ஷ அநுமான உபமாந சப்தங்கள். ப்ராபாகரனுக்கு இந்நான்கும் அர்த்தாபத்தியுமாக ஐந்து. பாட்டனுக்கும் மாயாவாதிக்கும் இவ்வைந்தும் அநுபலப்தியுமாக ஆறு. பௌராணிகருக்கு இவ்வாறுடனே ஸம்பவம் ஐதிஹ்யம் என்கிற இரண்டும் சேர்ந்து எட்டு ப்ரமாணங்கள். प्रत्यक्षमेकं चार्वाकः कणादसुगतौ पुनः । अनुमानं च तथाहुः सांख्याश्शब्दं च ते अपि ॥ न्यायैकदेशिनोऽप्येवमुपमानं च केचन । अर्थापत्त्या सहैतानि चत्वार्याह प्रभाकरः ॥ अभावषष्ठान्येतानि भाट्टा वेदान्तिनस्तथा । संभवैतिह्ययुक्तानि तानि पौराणिका विदुः ॥ என்னக்கடவதிறே.-இங்ஙனே அங்கீகரிக்கிற பாஹ்யகுத்ருஷ்டிகளைப்போலன்றியே ப்ரத்யக்ஷ அநுமான ஆகமங்கள் மூன்றையும் ப்ரமாணமாக அங்கீகரித்து உபமாநாதிபஞ்சகத்தையும் அவற்றிலே யதாயோகம்-அந்தர்ப்பவிப்பித்து, அவற்றில் ப்ரத்யக்ஷம் சக்ஷுராதிகளான இந்த்ரியங்களின் ஸந்நிகர்ஷத்துக்கு யோக்யங்களான கடபடாதிகளிலும், அநுமாநம் ப்ரத்யக்ஷ ஸித்தவ்யாப்திக்ரஹணாநுரூபமாக கதிபய பரோக்ஷார்த்தங்களிலும் ப்ரமாணமாகவும் ; பாஹ்யேந்த்ரியங்களுக்கு அவ்வருகான அதீந்த்ரிய விஷயங்களில் சாஸ்த்ரமே ப்ரமாணமாகவும் நிஷ்கர்ஷித்திருக்கும் பரம வைதிகரான நம் ஆசார்யர்கள், ஸ்வப்ராமாண்யத்துக்கு மூலஸாபேக்ஷமான பௌருஷேய சாஸ்த்ரங்களிற் காட்டிலும் ஸ்வதஃப்ராமாண்ய முடைய வேதமாகிற ப்ரபலப்ரமாணத்தினாலே ப்ரமேய நிகஷ செய்தருளுமவர்களாகையாலே இந்தவழிக்கு இசையாத பாஹ்யர்களையும், இந்த வழிக்கு இசைந்தாற்போலே யிருந்து வைத்து குதர்க்கங்களாலே அபார்த்தங்கள் பண்ணுகிற குத்ருஷ்டிகளையும் கண்டித்து ப்ரமேயத்தில் தலையான எம்பெருமானை ஸமஸ்த கல்யாணகுணாகரனாகவும் அகிலஹேயப்ரத்யநீகனாகவும் ஸகல ஜகத்காரண பூதனாகவும் பரம ப்ராப்யனாகவும் அறுதியிட்டு அநுபவிக்க ஆசை கொண்ட இவ்வாசிரியர் அங்ஙனமே விலக்ஷணமாக அநுபவிக்கிறாராயிற்று.

த்வயத்தில் உத்தரகண்டத்தின் பொருளான ப்ராப்யத்வம் ஸர்வ சேஷியானவனுக்கே உரித்தாகையாலே 'ஸ்ரீமந் நாராயணனே ஸர்வசேஷி' என்னுமிடத்தை முதலிற் சில ச்லோகங்களாலே ஸ்தாபித்து, அநந்தரம் ஸ்வரூபநிரூபகங்களாகவும் நிரூபித ஸ்வரூப விசேஷணங்களாகவும் உள்ள திருக்குணங்களையும் அவதார சேஷ்டிதங்களையும் அநுபவித்து இனியராகிறார்.

इदं समसदसती च विवेक्तुमीशो मानं प्रदीपमिव कारुणिको ददाति ।
तेनावलोक्य कृतिनः परिभुञ्जते तं तत्रैव केऽपि चपलाश्शलभीभवन्ति ॥१॥

ஹார்த்தம் தமஸ்ஸதஸதீச விவேக்துமீசஃ
மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி
தேநாவலோக்ய க்ருதிநஃபரிபுஞ்ஜதே தம்
தத்ரைவ கேபி சபலாஃ சலபீபவந்தி. (1)

| | | | |
|---|---|---|---|
| காருணிக: | அருளாளனான | ததாதி | கொடுத்தருளினார் ; |
| ஸஹ | எம்பெருமான் | க்ருதிந: | பாக்யசாலிகள் |
| தம: | அஜ்ஞாநமாகிற இருளை | தேந | அந்தத்திருவிளக்கைக்கொண்டு |
| ஹார்த்தம் | நீக்கிக்கொள்ளவும் | தம் | அந்த எம்பெருமானை |
| ஸத் அஸத் | (உள்ளது இல்லது என்னும் படியான) நன்மை தீமைகளை | அவலோக்ய | கண்டறிந்து |
| விவேக்தும் ச | ஆராய்ந்துணர்வதற்கும் | பரிபுஞ்ஜதே | அநுபவிக்கப்பெறுகிறார்கள் ; |
| ப்ரதீபம் இவ | திருவிளக்குப்போன்ற | கேபி சபலா: | சில அவிவேகிகளோ வென்றால் |
| மாநம் | சாஸ்த்ரப்ரமாணத்தை | தத்ர ஏவ | அந்தத்திருவிளக்கிலேயே |
| | | சலபீபவந்தி | விட்டில் என்னும் பூச்சிகள் போல விழுந்து சாகிறார்கள். |

* * *— அநாதியான அஜ்ஞாநாந்தகாரத்தாலே ஆவிஷ்டராய் ப்ரக்ருத்யாத்ம விவேகம் முதலான ஒரு விவேகமுமின்றிக்கே யிருக்கிற ஸம்ஸாரி சேதநர்கள் அந்த அஜ்ஞாநாந்தகாரத்தை அகற்றிக்கொண்டு ‘இது நன்று, இது தீது’ என்று ஸதஸத் விவேகமும் பண்ணி, தீயதை விட்டு நல்லதைப் பரிக்ரஹித்து உஜ்ஜீவிப்பதற்குறுப்பாகப் பரமகாருணிகனான ஸர்வேச்வரன் திருவிளக்கை ஏற்றிக்கொடுக்குமாபோலே *கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள்தானும், மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும நீர்மையினாலருள் செய்து* என்கிறபடியே ஸகலார்த்த ப்ரகாசகமான ஸாங்கோபாங்க வேத சாஸ்த்ரத்தைக் கொடுத்தருளினான் ; அப்படிப்பட்ட சாஸ்த்ரத்தைப் பெற்று, தீபத்தினால் ஸகலார்த்த தர்சநம் பண்ணி வாழுமாபோலே எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை ஆராய்ந்தறிந்து அநுபவித்து வாழ்ந்து போகிறார்கள் பாக்யசாலிகள். ‘கருவிலே திருவிலாத மற்றையோர்கள் அப்படி வாழகில்லாதே, ‘விட்டில்’ என்கிற சில ஜந்துக்கள் விளக்கிலே விழுந்து உயிர் மாயுமாபோலே அபார்த்தங்கள் பண்ணி அநர்த்தப்பட்டுப் போகிறார்கள் என்கிறார்.

இந்த ச்லோகத்தின் முன்னடிகளையே பெரும்பாலும் திருவுள்ளம் பற்றி “காருணிகனான ஸர்வேச்வரன் அறிவிலா மனிசர் உணர்வென்னும் சுடர்விளக்கேற்றிப் பிறங்கிருள் நீங்கி மேலிருந்த நந்தாவேத விளக்கைக்கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின ப்ரதீபமான கலைகளை நீர்மையினாலருள் செய்தான்.” என்று ஆசார்யஹ்ருதய ப்ரதம சூர்ணிகை திருவவதரித்தது.

[ஹார்த்தம் தமஃ] “அந்தம் தமஇவாஜ்ஞாநம்” என்று அஜ்ஞாநத்தை அந்தகாரமாகச் சொல்லிற்றிறே. “மாநம் ப்ரதீபமிவ” என்ற உபமானத்துக்கு இணங்க அருளிச் செய்கிறார் ; திருவிளக்கானது புறவிருளாகிற தமஸ்ஸை அகற்றும் ; சாஸ்த்ரமானது அகவிருளாகிய தமஸ்ஸை அகற்றும்.

[ஸதஸதீச விவேக்தும்] இதுவும் உபமானத்துக்கு இணங்க அருளிச்செய்கிறபடி. ஸத்—இருப்பது, அஸத்—இல்லாதது ; ஸத்—நல்லது, அஸத்—தீயது ; என்று உபயவிதமான அர்த்தமும் இங்கே விவக்ஷிதம். விளக்கு இல்லாதவளவிலே ‘இன்ன இடத்தில் இன்னது இருக்கிறது, இன்னது இல்லை’ என்று அறிதல் முடியாது : அத்ர இதமஸ்தி, அத்ர இதம் நாஸ்தி, என்று ஸதஸத்விவேசநம் பண்ணுகைக்கு விளக்கு உறுப்பாகும் ; அதுபோலவே சாஸ்த்ரமும் *இவையன்றே நல்ல இவையன்றே தீய* என்று நன்று தீதுகளை நன்குணர்வதற்குறுப்பாகும்.

[காருணிக: ஈச:] க்ருபா விசிஷ்டனான ஸ்வதந்த்ரனென்றபடி. க்ருபாளுவானாலும் ஸ்வதந்த்ரனன்றாகில் தான் நினைத்தபடி கார்யம் செய்ய அரிது; கேவல ஸ்வதந்த்ரனானாலும் ஸம்ஸார மோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவான ஸ்வாதந்த்ரியம் சேதநோஜ்ஜீவநார்த்தமான க்ருஷிக்கு உறுப்பாகமாட்டாது. ஆனபின்பு க்ருபையும் ஸ்வாதந்திரியமும் கூடின வேஷமேயிறே ஸம்ஸாரி சேதநோஜ்ஜீவந விஷயமாக அவன் பண்ணும் க்ருஷிக்கு ஹேதுவாவது.

அன்றிக்கே 'ஈச:' என்று *சேஷித்வ ஸம்பந்தத்தைச் சொல்லுகிறதாகவுமாம். *कृपायोगाच्च शाश्वतात्* என்ற வுடனே *ईशेशितव्यसम्बन्धादनिदंप्रथमादपि* என்கையாலே க்ருபையும் ஸம்பந்தமுமாகிற இரண்டும் ஸம்ஸாரி சேதந ஸம்ரக்ஷணார்த்த ப்ரவ்ருத்திக்கு ஹேதுவிறே. இத்தால், 'இவை நம்முடையவையன்றோ' என்கிற அபிமானத்தோடே பரதுக்காஸஹிஷ்ணுத்வரூபையான க்ருபையும் கூடுகையாலே மேன்மேலும் சேதநோஜ்ஜீவநத்துக்கு க்ருஷி பண்ணிப் போருமவனென்றதாயிற்று.

[மாநம்] ப்ரமாணமென்றபடி. வேதத்தைச் சொல்லுகிறது. मानो वेदाः प्रमाणम् என்கிறாரிறே மேலும். [ப்ரதீபமிவ] 'தீபமிவ' என்னாதே 'ப்ரதீபமிவ' என்றதற்குக் கருத்துண்டு. தீபத்தில் நின்று முண்டானது ப்ரதீப மெனப்படும். *மறையாய் விரிந்த விளக்கு* என்றும், *துளக்கமில் விளக்கு* என்றும் சொல்லுகிறபடியே *अकारो वै सर्वा वाक्* என்கையாலே வேதரூபேண விரிந்தது தான் என்னும்படி ஸகல வேதமூலமாய், தனக்கொரு காரணமில்லாமையாலே சலநமின்றிக்கே ஸதவார்த்த ப்ரகாசமாயிருக்கிற அகாரத்தில் நின்றும் உத்பந்நமிறே வேதம். ஆகவே இங்கு தீபஸ்தாநத்தில் அகாரமும் ப்ரதீபஸ்தாநத்தில் வேதமுமாம். *மறையாய் விரிந்த விளக்கை* என்றும், *துளக்கமில் விளக்கமாய்* என்றும் அகாரத்தை எம்பெருமானோடே ஸமாநாதிகரித்தது "अइति ब्रह्म" என்கிறபடியே வாச்யவாசகபாவஸம்பந்தத்தாலே.

[க்ருதிந: தேந தம் அவலோக்ய பரிபுஞ்ஜதே] "कृती स्यात्पण्डिते योग्ये" என்றும் 'वैज्ञानिकः कृतमुखः कृती कुशल इत्यपि" என்றுமுள்ள கோசத்தின்படியே க்ருதிந: என்பதற்கு வித்வான்கள் என்றும் சிஷ்டர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். ஸுக்ருதிகள் [பாக்யசாலிகள்] என்னவுமாம். எம்பெருமான் தந்தருளின ப்ரமாண ப்ரதீபத்தைக் கொண்டு பகவத் ஸ்வரூப ஸ்வபாவாதிகளை ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கப்பெறுகின்றார்கள் ஸ்ரீமந் நாத யாமுந யதிவராதிகளான நம் பூருவர்கள் என்கை.

[கேபி சபலா: தத்ரைவ சலபீபவந்தி] "चपलस्तस्करो धूर्तः" என்பர் கோசகாரர். சில பாபிகள் அந்தத் திருவிளக்கைக்கொண்டு உபஜீவிக்கமாட்டாதே விட்டில் போலே விருத்த ப்ரதிபத்தி பண்ணி நசித்துப்போகிறார்கள். வேத பாஹ்யர்களான ஜைந பௌத்த சார்வாகாதிகள் வேதம் ப்ரமாணமல்ல வென்றுகொண்டு நசித்தொழிவர்கள்; சாங்கராதி குத்ருஷ்டிகள் அது தன்னிலே அபார்த்தம்பண்ணி நசித்தொழிவர்கள்.

[விவேக்தும் நநாத] விவேசகர்த்ருத்வம் மனிசர்களிடத்திலும் தானகர்த்ருத்வம் எம்பெருமானிடத்திலுமாகையாலே ஸமாநகர்த்ருகத்வமில்லையே யென்னில்; இது குற்றமாகாது. "कर्तुं न कश्चिदन्यैरपि वसुमतीं क्षिणस्ससन्तु:" என்று முராரி ப்ரயோகித்தான். "श्रीरङ्गचन्द्रमसमिन्दिरया विहर्तुं विन्यस्य" என்று பூர்வசதகத்திலே இவர்தாமும் ப்ரயோகித்தருளினார். இப்ப்ரயோகத்திற்கு மஹாபாஷ்ய ஸம்மதியுமுண்டு. (1)

ப்ரத்யக்ஷ ப்ரமதந பச்யதோஹரத்வாத்
நிர்த்தோஷ ச்ருதிவிமதேச்ச பாஹ்யவர்த்ம,
துஸ்தர்க்கப்ரபவதயாச வக்த்ருதோஷ
ஸ்ப்ருஷ்ட்யாச, ப்ரஜஹதி ரங்கவிந்த! வ்ருத்தா:. (3)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கவிந்த! | கோயில் வாழும் பெருமானே! | நிர்த்தோஷ ச்ருதி விமதே: ச | குற்றமற்ற ப்ரமாணமான வேதங்களுக்கு மாறுபட்டிருப்பதாலும் |
| வ்ருத்தா: | வைதிகவ்ருத்தர்கள் | துர்ஸ்தர்க்க ப்ரபவதயா ச | குதர்க்க ஸித்தமாகையாலும், |
| பாஹ்யவர்த்ம ப்ரஜஹதி | வேத பாஹ்யர்களின் வழியை விட்டொழிகின்றனர். (எனென்றால்).. | வக்த்ரு தோஷ ஸ்ப்ருஷ்ட்யா ச | வக்தாக்களின் ப்ரமாதம் முதலிய தோஷ ஸம்பந்தத்தாலும் |
| ப்ரத்யக்ஷ ப்ரமதந | கண்ணாலே கண்ட விஷயத்தை இல்லை செய்வதாகிற | | |
| பச்யதோஹரத்வாத் | ப்ரத்யக்ஷ சௌர்யத்தாலும் | | |

[बाह्यवर्त्म प्रजहतीत्यन्वयः.]

* * *—மேற்சொன்ன பாஹ்ய குத்ருஷ்டி ஸம்ருதிகளுள் ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களை இல்லை செய்கிற ஸௌகதாதிகளின் மதம் மிகவும் அஸங்கதமென்று எட்டு ச்லோகங்களால் அருளிச் செய்யக்கோலி, இந்த ச்லோகத்தில்—பாஹ்ய மதம் ப்ரத்யக்ஷ விருத்தமாகையாலும் நிர்தோஷ ப்ரமாணமான ச்ருதியோடு விரோதிக்கையாலும் குதர்க்க ஸித்தமாகையாலும் வக்த்ருதோஷத்தாலுமாக த்ரைவித்ய வ்ருத்தர்களாலே பரித்யஜிக்கப்படாநின்றதென்று பொதுப்படையாக அருளிச்செய்கிறார்.

[ப்ரத்யக்ஷப்ரமதநபச்யதோஹரத்வாத்] ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தை அபலாபம் செய்கையாகிற பச்யதோஹரத்வமுள்ளதனால் என்றபடி. கண்ணைத் திறந்துகொண்டிருக்கச்செய்தேயும் அவலீலையாகக் கொள்ளையடிப்பவன் பச்யதோஹரன் எனப்படுவான்: பாஹ்யர்களில் சிலர் ப்ரத்யக்ஷ ப்ரதீதிஸித்தமான விஷயத்திற்கு விபரீதமாகச் சில கொள்கைகள் கொள்வதனால் ‘ப்ரத்யக்ஷ ப்ரமதந பச்யதோஹரத்வாத்’ எனப்பட்டது. உலகத்திலுள்ள ஸகல வஸ்துக்களும் க்ஷணிகமென்று கொள்ளுகிறவர்கள் ‘यदहमा पूर्वमनुभूतं तदेवेदम्—முன்பு எந்த வஸ்துவை நான் அனுபவித்தேனோ அதுவே இது’ என்கிற ப்ரத்யபிஜ்ஞாரூபமான ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தை இல்லை செய்தார்களென்பது உணரத்தக்கது.

[நிர்தோஷ ச்ருதி விமதேச்ச] உலகத்தில் மனிதர் ஒரு அர்த்தத்தைக் காட்டுவதற்காகப் பல பதங்களை வேண்டியபடி சேர்த்து வாக்யமாக ப்ரயோகிக்கும் சப்தங்களில் ப்ரமம் ப்ரமாதம் விப்ரலிப்ஸை முதலிய தோஷங்கள் இடம்பெற்றிருக்கும்; வேதமென்கிற சப்தராசியானது எந்தப் புருஷனாலும் தன்னிஷ்டப்படி முன்பின்னாகப் பிணைக்கப்பட்டதல்லவென்றும் நித்யமென்றும் ஸித்தமாதலால் பௌருஷேயத்வ ப்ரயுக்தமான தோஷங்களால் துஷ்டமாகக்கூடிய நிலைமை வேதத்துக்கில்லை; ஆகவே வேதம் நிர்த்தோஷ ப்ரமாணம்; அதற்கு விருத்தமான அர்த்தங்களை ப்ரதிபாதிக்கிறபடியாலும் என்கை. வேத ப்ராமாண்யத்தையே இசையாத பாவிகளிறே.

[துஸ்தர்க்க ப்ரபவதயாச] தர்க்கமாவது நியாயம்; நியாயங்களைக் கொண்டிறே அர்த்தசிக்ஷை பண்ணுவது; அவைதான் ஸமீசீநந்யாயங்களாயிருக்க வேணுமே. “आर्षं धर्मोपदेशं च वेदशास्त्राविरोधिना। यस्तर्केणानुसन्धत्ते स धर्मं वेद नेतरः” என்று வேதாநுகூலமான தர்க்கத்தைக் கொண்டு நிரூபிப்பார்க்கன்றி மற்றையோர்க்கு தர்மம் அறியப்போகாதென்னாநின்றதிறே. இங்ஙனன்றிக்கே பாஹ்யர்களின் மதங்கள் துஸ்தர்க்கதூஷிதங்களாயிறே யிருப்பது. “यत् सत् तत् क्षणिकं—यथा जलधरपटलम्” என்றிவை போல்வன துஸ்தர்க்கங்கள் பல காணலாம்.

[வக்த்ருதோஷஸ்ப்ருஷ்ட்யாச] கீழ்ச்சொன்ன தோஷங்களுக்கெல்லாம் மூல மாயிற்று இது. ப்ரமம், ப்ரமாதம், விப்ரலிப்ஸை என்று சில தோஷங்கள் மனிதர் கட்கு உண்டு; ப்ரமம் இரண்டு விதம்; ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாகத் தெரிந்து கொள்வது ஒன்று; ஒரு வஸ்துவைத் தெரிந்து கொள்ளும்போது அதன் ஸ்வபாவமான குணங்களை மாறுடி வேறு குணங்களோடு கூடினதாகத் தெரிந்து கொள்ளுதல் மற்றொன்று. இவற்றுள் முதலாவதற்கு விபரீதஜ்ஞாநமென்றும் இரண்டாவதற்கு அந்யதாஜ்ஞாநமென்றும் பெயர். முத்துச் சிப்பியைப் பார்த்து வெள்ளி யென்று க்ரஹிப்பது விபரீதஜ்ஞாநம். சங்கு மஞ்சள் நிறமுள்ளதென்று க்ர ஹிப்பது அந்யதாஜ்ஞாநம். ப்ரமாதமாவது பிசகிப்போகை. விப்ரலிப்ஸையாவது பிறரை வஞ்சிக்கவேணுமென்கிற எண்ணம். மனிதர் பக்கலுள்ள இப்படிப்பட்ட தோஷங்களானவை பௌருஷேயங்களான சப்தங்களை தோஷமுடையனவாகச் செய் கின்றன. இப்படிப்பட்ட தோஷங்கள் நிரம்பியிருக்குமிறே பாஹ்யர்களின் நூல்களில். ஆகவே இவை வைதிகர்களால் வெறுக்கப்பட்டனவாயின. ... ... (3)

अवयवितयेदङ्कुर्वाणैर्बहिष्करणैर्वपुर्निरवयवकोऽहङ्कारार्हः पुमान् करणातिगः ।
स्फुरति हि जनाः प्रत्यासत्तेरिमौ न विविञ्चते तदधिकुरुतां शास्त्रं रङ्गेश ! ते परलोकिनि ॥४॥

அவயவிதயேதங்குர்வாணைர் பஹிஷ்கரணைர் வபுஃ
நிரவயவகோஹங்காரார்ஹஃ புமாந் கரணாதிகஃ,
ஸ்புரதி ஹி ஜநாஃ ப்ரத்யாஸத்தேரிமௌ நவிவிஞ்சதே
தததிகுருதாம் சாஸ்த்ரம் ரங்கேச! தே பரலோகினி. (4)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கேச! | ஸ்ரீரங்கநாதனே! | ஸ்புரதி | விளங்குகிறான், |
| வபு: | தேஹமானது | இமௌ | இந்த தேஹத்தையும் ஆத்மாவையும் |
| அவயவிதயா | அவயவங்களோடு கூடியதாகையாலே | ப்ரத்யாஸத்தே: | (பிரிக்க வொண்ணாதபடி பொருந்தியிருக்கையாகிற) சேர்க்கையின் உறுதியினால் |
| இதம் குர்வாணை: | 'இதம்' என்று விஷயீகரிக்கின்ற | ஜநா: | அவிவேகிகளான ஜனங்கள் |
| பஹி: கரணை: | பாஹ்ய இந்திரியங்களினால் | ந விவிஞ்சதே | பகுத்தறிவதில்லை; |
| ஸ்புரதி | (ஜீவாத்மாவுக்கு ஆதேயமாயும் ப்ரகாரமாயும்) தோன்றுகின்றது; | தத் | ஆகையினாலே |
| | | தே | தேவரீருடைய (ஆஜ்ஞாரூபமான) |
| நிரவயவக: | அவயவமற்றவனான | சாஸ்த்ரம் | வேத சாஸ்த்ரமானது |
| புமாந் | ஜீவாத்மாவானவன் | பரலோகினி | தேஹம்போவே இந்த லோகத்தோடு உருமாய்ந்து போவதன்றிப் பரலோக ப்ராப்தியோக்யனான, ஜீவாத்மாவினிடத்தில் |
| கரண அதிக: | (பாஹ்ய) இந்திரியங்களுக்கு விஷயமல்லாதவனாய்க் கொண்டு | | |
| அஹங்கார அர்ஹ: | அஹமென்கிற ப்ரதீதிக்கு அர்ஹனாக | அதிகுருதாம் | ப்ரமாணமாயிடுக. |

* * *—கீழ் ச்லோகத்தில் வேத பாஹ்யர்களின் வழி வைதிகர்களுக்குப் பரித் யாஜ்ய மென்று ஸாமாந்யமாக அருளிச் செய்து, இனி விசேஷித்துச் சில சாஸ்த்ரார்த் தங்களை நிரூபிக்கப் புகுகிறார். "प्रत्यक्षमेकं चार्वाकः" என்கிறபடியே ப்ரத்யக்ஷ ப்ரமாண மொன்றையே கைப்பற்றி நிற்கும் சார்வாகன் கட்புலனுக்கு இலக்காகிற பாஹ்ய பதார்த்தங்களை மாத்திரம் அங்கீகரித்து, தேஹத்திற்காட்டில் வேறுபட்ட ஜீவாத்மா வின் உண்மையை இசையாதொழிகையாலே அவ்விஷயமாக அருளிச்செய்வதாகும் இந்த ச்லோகம்.

தேஹம் பல அவயவங்களோடு கூடியதாகையாலே கண்ணெதிரிலுள்ள வஸ்துவை விஷயீகரிக்கிற பாஹ்யகரணங்களாலே அது ப்ரகாசிக்கிறது. அவயவசூந்யனை ஆத்மா பாஹ்யகரணங்களுக்கு விஷயமன்றிக்கே 'அஹம்' என்று ஆந்தரகரணத்தாலே பிரகாசிக்கிறான். ஆகவே, தேஹம் வேறு ஆத்மா வேறு. இரண்டும் ஒன்றேயாயிருந்தால் இரண்டையும் க்ரஹிக்கிற இந்த்ரியமும் ஒன்றேயாயிருக்கும்; அங்ஙனில்லாமையாலே தேஹத்திற்காட்டில் ஆத்மா வேறுபட்டவனே. அப்படியிருந்தும் 'தேஹமே ஆத்மா' என்றே ஜடஜநங்கள் மயங்குகின்றன. இதற்குக் காரணமென்னென்னில்; இரண்டுக்குமுள்ள ஸம்பந்தத்தின் உறைப்பேயாம். ஆத்மா ப்ரகாரியாய் தேஹம் ப்ரகாரமாயிருக்கும்; ஆத்மா நியாமகனாய் தேஹம் நியாம்யமாயிருக்கும்; ஆத்மா தாரகனாய் தேஹம் தார்யமாயிருக்கும். ஆக இப்படிப்பட்ட ப்ரகார ப்ரகாரிபாவாதி ரூபங்களான ஸம்பந்தங்கள் இவற்றுக்கு உறைத்திருப்பதனால் பேதத்தைப் பகுத்தறிய மாட்டுகின்றிலர். சாஸ்த்ரத்தைக்கொண்டு நன்கு பகுத்தறியலாம். எங்ஙனே யென்னில்—"ज्योतिष्टोमेन स्वर्गकामो यजेत" என்றும், "[illegible]स्वाप्नोति परम्" என்றும் இங்ஙனே சாஸ்த்ரங்கள் சொல்லிவைத்தன. ஸ்வர்க்கலோகத்துக்குப்போக விருப்பமுடையவன் ஜ்யோதிஷ்டோமயாகம் பண்ணக்கடவன் என்றும், ப்ரஹ்மவித்தானவன் அந்த பரப்ரஹ்மத்தையடைகிறான் என்றும் சொல்லிவைத்தன; தேஹத்திற்கு மேற்பட வேறொன்று இல்லையாகில் அந்த தேஹந்தானும் இங்கே நசித்தொழியக் காண்கையாலே கீழ்ச்சொன்ன வேதவாக்கியங்கள் அர்த்த சூந்யமாகும்; ஸ்வர்க்கத்துக்குப்போகிறவன் யாவன்? ப்ரஹ்மத்தை அடைகிறவன் யாவன்? என்று கேட்கில் மறுமாற்றமுரைக்கவிரகில்லையாம். ஆகவே, இந்த லோகத்தோடு அழியக்கடவதான தேஹத்திற்காட்டிலும் பரலோக ப்ராப்திக்கு அர்ஹனான ஜீவாத்மா ஒருவன் வேறுபட்டுள்ளான் என்பது அவச்யம் அங்கீகரிக்கத்தக்கதாயிறே யிருப்பது. ஆகையாலே [பரலோகிநி தே சாஸ்த்ரமதிகுருதாம்] இங்கே ஜீவாத்மாவை பரலோகீ என்னும் சப்தத்தால் குறிப்பிட்டது மிகப் பொருந்தும்; கீழ் உதாஹரித்த ச்ருதிவாக்யங்களில் நோக்காக அருளிச்செய்தபடி. தேஹத்தில் நின்றும் உத்க்ரமித்து உபரிதநலோகங்களை அடைவான் ஆத்மாவிறே. ஆத்மஸத்பாவமில்லையென்றால் ஸ்வர்க்காதி லோகாந்தர ப்ராப்தியையும் ததுபாயங்களையும் போதிக்கிற சாஸ்த்ரங்கள் பாதிதார்த்தங்களாயொழியுமே. [शास्त्रं परलोकिनि अधिकुरुताम्] ज्योतिष्टोमेनेत्यादिशास्त्रं देहव्यतिरिक्ततया अन्तःकरणप्रत्यक्षितं, तत उत्क्रम्य कर्मानुसारेण स्वर्गादिभाजं जीवमधिकृत्य अबाधितविषयं प्रमाणं भवत्वित्यर्थः ॥ (4)

प्रत्यक्षा श्रुतिरर्थधीश्च न तथा दोषास्तदर्थः पुनः धर्माधर्मपरावरेश्वरमुखः प्रत्यक्षबाध्यो न च ।
तच्चार्वाकमतेऽपि रङ्गरमण ! प्रत्यक्षवत् सा प्रमा योगोन्मीलितधीस्तदर्थमथवा प्रत्यक्षमीक्षेत सः ॥५॥

ப்ரத்யக்ஷா ச்ருதிரர்த்ததீச் ச ந ததா தோஷாஸ் ததர்த்தஃ புநஃ
தர்மாதர்மபராவரேச்வரமுகஃ ப்ரத்யக்ஷபாத்யோ ந ச,
தச்சார்வாகமதேऽபி ரங்கரமண ! ப்ரத்யக்ஷவத் ஸா ப்ரமா
யோகோந்மீலிததீஸ் ததர்த்தமதவா ப்ரத்யக்ஷமீக்ஷேத ஸஃ. (5)

| | | | |
|---|---|---|---|
| ச்ருதிஃ | வேதமானது | தோஷாஃ | (பௌருஷேயத்வமடியாக வரக்கூடிய ப்ரமம், விப்ரலம்பம், ப்ரமாதம் முதலிய) தோஷங்களோவென்னில்; |
| ப்ரத்யக்ஷா | (செவிக்குப்) பிரத்யக்ஷமாயிராநின்றது; | | |
| அர்த்ததீஃ ச | (அந்த வேதத்தின்) அர்த்தஜ்ஞானமும் | ந ததா | அப்படி பிரத்யக்ஷமாக இல்லை; |
| (ப்ரத்யக்ஷா) | (அந்தஃகரணத்திற்குப்) பிரத்யக்ஷமாயிருக்கின்றது; | தத் அர்த்தஃ | அந்த வேதத்தின் பொருளான |

| | | | |
|---|---|---|---|
| தர்ம அதர்ம பர அவர ஈச்வராச்ச | தர்மமென்ன அதர்மமென்ன பரமேச்வரனென்ன அவரேச்வரர்களான ப்ரஹ்மாதிகளென்ன இவை முதலானதும் | ப்ரத்யக்ஷவத் | ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தோடொப்ப |
| ந ச ப்ரத்யக்ஷ பாத்ய: | ப்ரத்யக்ஷத்தாலே பாதிக்கக் கூடியதல்ல; | ப்ரமா | ப்ரமாணமேயாம்; |
| ஹே ரங்கரமண! | திருவரங்கநாதரே!, | அதவா | அன்றிக்கே, |
| தத் | ஆகையினாலே | ஸ: | அந்த சார்வாகன் |
| சார்வாகமதே அபி | சார்வாகமதத்திலும் | யோக உன்மீலித தீ: ஸன் | யோகத்தினால் விகஸித்த புத்தியையுடையனாய்க் கொண்டு |
| ஸா | அந்த ச்ருதியானது | தத் அர்த்தம் | கீழ்ச்சொன்ன அந்த வேதத்தின் அர்த்தங்களை |
| | | ப்ரத்யக்ஷம் | ப்ரத்யக்ஷமாகவே |
| | | ஈக்ஷேத | காணக்கடவன். |

* * *—தேஹத்திற்காட்டில் விலக்ஷணனான ஆத்மாவின் உண்மையில் சாஸ்திரம் ப்ரமாணமாகிறதென்றார் கீழ்ச்லோகத்தில். ப்ரத்யக்ஷமொன்றையே ப்ரமாணமாக இசைந்து மற்றவையெல்லாம் அப்ரமாணமென்னும் சார்வாகனுக்கு இது கொண்டு ப்ரயோஜநமில்லையேயென்ன. சார்வாகமதத்திலும் வேதமும் ப்ரத்யக்ஷம் போலே ப்ரமாணமாகக் குறையில்லையென்கிறாரிதில்.

[ப்ரத்யக்ஷா ச்ருதி:] வேதமும் ப்ரத்யக்ஷந்தானே யென்கிறார். இந்த்ரியங்களாலுண்டாகிற ஞானமேயிறே ப்ரத்யக்ஷமாவது. கண்போலே காதும் ஒரு பாஹ்யேந்த்ரியமேயாதலாலும் சாக்ஷுஷ ப்ரத்யக்ஷம்போலே ச்ராவணப்ரத்யக்ஷமும் மாதலாலும், ச்ராவணப்ரத்யக்ஷவிஷயமான வேதமும் ப்ரமாணமேயென்று இசைவிக்கிறபடி.

[அர்த்ததீச்ச ப்ரத்யக்ஷா.] வேதப் பொருள்களின் உணர்ச்சியும் ப்ரத்யக்ஷமே. மாநஸப்ரத்யக்ஷவிஷயமென்றபடி. "अग्निना सिञ्चति, एष वन्ध्यासुतो याति" இத்யாதி வாக்யங்களும் ச்ராவணப்ரத்யக்ஷ விஷயமாகின்றன; அவற்றின் பொருள்களும் மாநஸ ப்ரத்யக்ஷ விஷயமாகின்றன; அவ்வளவாலே அவற்றுக்கு ப்ராமாண்யம் விளங்கிடுமோ? அதுபோலவே வேதங்களுமாகின்றன என்று ஒரு ப்ரஸங்கமுண்டாக, மேல் அருளிச்செய்கிறார்—ந தத் தத்யரதி. [தோஷா: ந ததா] பௌருஷேயத்வ மடியாக வரக்கூடிய ப்ரமப்ரமாதவிப்ரலிப்ஸாதிதோஷங்கள் ப்ரத்யக்ஷங்களல்ல என்கை. வேதமென்பது ஒருவகையான சப்தராசி; தப்பான அர்த்தத்தைத் தெரிவிப்பதே சப்தத்திற்கு தோஷமாம். தனிப்பட ஒரு பதம் தப்பான அர்த்தத்தை தெரிவிக்கமாட்டாது. பல பதங்கள் சேர்ந்த வாக்கியம் தப்பான அர்த்தத்தைத் தெரிவிக்கும். 'இது—வெள்ளி' என்ற இவ்விரண்டு பதங்கள் தனித்தனி எவ்விதமான தப்புப்பொருளையும் தெரிவிக்கமாட்டா; ஆனால் இவ்விரண்டு பதங்களையும் ஒன்றுசேர்த்து ஈயத்தைச் சுட்டிக்காட்டி 'இதுவெள்ளி' என்று ப்ரயோகிக்கப்பட்டால் வெள்ளியல்லாததை வெள்ளியென்று போதிப்பதால் இவ்வாக்கியம் தோஷமுடையதென்று கொள்ளப்படும். இவ்வாக்கியம் இங்ஙனே பிசகான பொருளைப் போதிக்கக் காரணமென்ன? இரண்டு பதங்களுள்ள இவ்வாக்கியத்தில் என்ன தோஷமிருக்கிறது? இப்பதங்கள் தனித்தனியாக ப்ரயோகிக்கப்பட்டபோது எப்படியிருந்தனவோ அப்படியேதானே கூட்டிச்சொல்லும்போதும் இருக்கின்றன; சப்தத்தில் எவ்விதமான தோஷமும் காண முடியாதே; ஆனபின்பு இவ்வாக்கியம் தப்பான அர்த்தத்தைப் போதிப்பதேன்? என்னில்; இதைப் ப்ரயோகித்த புருஷன் இப்பதங்களைச் செவ்வனே உபயோகியாமல் தப்பாக உபயோகித்ததே இப்பதங்கள் தப்பான அர்த்தத்தைக் காட்டுவதற்குக் காரணமாகின்றன. ப்ரம ப்ரமாத விப்ரலிப்ஸாதிதோஷங்கள் ஜநிதர்மாக்களுக்கு அவர்ஜநீயங்கள். அந்த தோஷங்கள் பௌருஷேய சப்தங்களில் ப்ரகாசித்துக்கொண்டு அவற்றை துஷ்டமாக்குகின்றன. அபௌருஷேயமான வேதத்திலே அப்படிப்பட்ட

தோஷங்கள் எந்த இந்த்ரியத்துக்கும் விஷயமாகமாட்டா என்றதாயிற்று. இனித்தான் இத்தனை சொல்லியும் பயனில்லை; 'தோஷங்கள் ப்ரத்யக்ஷமல்ல' என்பது ஒரு வார்த்தையோ? வாக்யத்தினால் போதிக்கப்படுகிற அர்த்தம் பாதிதமானால் அதற்கடியான தோஷம் தன்னடையே கல்பிதமாகக் குறையுண்டோ?

'अग्निना सिञ्चति' என்னும் வாக்யத்தில் என்னதோஷம் ப்ரத்யக்ஷமாயிருக்கிறது? வ்யாகரண தோஷாதிகள் ஒன்றுங்காணோம். 'நெருப்பினால் நனைக்கிறான்' என்பது அவ்வாக்யத்தின் பொருளாதலால் அதுதான் ப்ரத்யக்ஷபாதிதமாகையாலே அது அடியாகவிறே அந்த வாக்யம் துஷ்டமெனப் படுகிறது. அப்படியே வேதங்களாலே போதிக்கப்படுகிற அர்த்தங்கள் பாதிதங்களாகில் அவ்வழியாலே தோஷங்கள் ஏற்பட்டுவிடாதோவென்ன; அதற்கருளிச்செய்கிறார்—[ததர்த்த: தர்மாதர்மபராவரேச்வரமுகச்ச ந ப்ரத்யக்ஷபாத்ய:] புண்ணியம் பாவம் பரதேவதை அவரதேவதை என்று இத்யாதி விஷயங்களிறே வேதத்தில் ப்ரதிபாதிக்கப்படுவன; இவைதாம் ப்ரத்யக்ஷத்தாலே ஒருபடியாலும் பாதிக்கப்படுகின்றனவன்றே. தர்மாதர்மாதிகளின் அபாவம் ப்ரத்யக்ஷவிஷயமானாலன்றோ அவை ப்ரத்யக்ஷபாதிதங்களாகும். தர்மாதிகள் அப்ரத்யக்ஷமாகையாலே ததபாவமும் அப்ரத்யக்ஷமிறே. प्रतियोगिप्रत्यक्षत्वकल्प्यत्वादभावप्रत्यक्षस्येति भावः ।

ஆகையாலே ப்ரத்யக்ஷத்தை ப்ரமாணமாக அங்கீகரிக்கிற சார்வாகனது மதத்திலும் வேதம் அத்தோடொக்க ப்ரமாணமாகக் குறையில்லையென்கிறார் மூன்றாமடியால்.

வேதார்த்தங்களான தர்மாதர்மாதிகளுக்கு ப்ரத்யக்ஷபாத்யத்வமில்லை யென்கிற வளவு போராது: அவை ஸாக்ஷாத் ப்ரத்யக்ஷ விஷயமானாலன்றி தத்ப்ரதிபாதகவேதங்களுக்கு ப்ராமாண்யம் வாராது என்று நிர்ப்பந்தம் கொள்ளில், அதற்கு அருளிச்செய்கிறார்—(யோகோந்மீலிததீரித்யாதி.) யோகாப்யாஸத்தாலே அகக்கண் மலரப்பெறில் அந்த சார்வாகனுக்கும் இவையெல்லாம் ப்ரத்யக்ஷிக்கலாங்காணும் என்றாராயிற்று. (5)

न सदसदुभयं वा नोभयस्माद्बहिर्वा जगदिति न किलैकां कोटिमाटीकते तत् ।
इति निरुपधि सर्वंसर्विकातो निषेधन् वरद ! सुगतपाशश्चोरलावं विलाव्यः ॥६॥

ந ஸதஸதுபயம் வா நோபயஸ்மாத் பஹிர் வா
ஜகதிதி ந கிலைகாம் கோடிமாடீகதே தத்,
இதி நிருபதி ஸர்வம்ஸர்விகாதோ நிஷேதந்
வரத ! ஸௌகதபாசச் சோரலாவம் விலாவ்ய:. (6)

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத ! | வரந்தரு மாதவனே !; | தத் | அந்த ஜகத்தானது |
| ஜகத் | (காண்கின்ற இந்த) ஜகத்தானது | ந ஆடீகதே | அடைகின்றதில்லை; |
| ந ஸத் | ஸத்தும் அல்ல, | இதி | என்கிறவனே |
| அஸத் ந | அஸத்துமல்ல, | நிருபதி ([illegible]) | ஓர் அதிஷ்டான மின்றிக்கே |
| உபயம் வா ந | இருபடிப்பட்டதுமல்ல, | ஸர்வம்ஸர்விகாத: நிஷேதந் | 'ஸர்வம் நாஸ்தி, ஸர்வம் நாஸ்தி' என்றே சொல்லிக்கொண்டு ஸர்வசூந்யவாதம் பண்ணுகிற |
| உபயஸ்மாத் பஹிர் வா ந | இருபடிப்பட்டவதனிற் புறம்பானதுமல்ல; | ஸௌகதபாச: | குத்ஸிதனான புத்தன் |
| இதி | இவ்விதமாக | சோரலாவம் | திருடனை வெட்டுமாபோலே |
| ஏகாம் கோடிம் | (கீழ்ச் சொன்ன நான்கு கோடிகளுள்) ஒருவகையான கோடியையும் | விலாவ்ய: | வெட்டத்தக்கவன். |

* * * — ஸர்வசூந்யவாதியைக் கண்டிக்கிறார். [ஜகத் ந ஸத்] இந்த ஜகத்துக்கு உத்பத்திவிநாசங்கள் காண்கையாலே இது ஸத்து என்ன வொண்ணாது. எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கும் வஸ்துவாயிலன்றோ ஸத்து என்னலாவது. [ந அஸத்] இந்த சராசரம் கண்கொண்டு காணப்படா நின்றமையால் முயற்கொம்பு, மலடி மகன் முதலியனபோல் அஸத்து என்னவு மொண்ணாது. [ந உபயாத்மா] ஸத்தாயும் அஸத் தாயு மிருக்கிறதென்னவு மொண்ணாது; ஒரேவஸ்துவானது விருத்தங்களான இரண்டு தன்மைகளையுடைத்தாயிருக்கக் கூடாமையாலே. [உபயஸ்மாத் பஹிர் ந] ஸத்து அஸத்து என்கிற இரண்டு வகுப்புக்கு [அவ்வகுப்பட்டிருப்பதொரு வஸ்து அஸம்பா விதமாகையாலே ஸதஸத்துக்களிற் காட்டில் பஹிர்ப்பூதமென்னவு மொண்ணாது. [இதி (ஹேதோ:) தத் ஏகாம் கோடிம் நாமுகதே] ஆனபின்பு இவ்வுலகமானது ஸத்கோடியி லும் சேராது. அஸத்கோடியிலும் சேராது. ஸதஸத் கோடியிலும் சேராது, உபய பஹிர்ப் பூத கோடியிலும் சேராது. "नसन्नासन्नसदसन्नचाप्यनुभयात्मकम् । चतुष्कोटिविनिर्मुक्तं तत्त्वं माध्यमिका विदुः ॥" என்று யாதவப்ரகாச விரசிதமான தத்வவிசாரணையிலும் சொல்லப்பட்டது. திருவாய்மொழி ஈடு நாலாம்பத்தாறாயிரப்படி மஹாப்ரவேசத்தில் "பௌத்த மதங்களில் வைத்துக்கொண்டு" என்று தொடங்கியருளிச்செய்துள்ளவிடத்து ப்ரமாணத்திரட்டில் விரிவுகண்டுகொள்க.

[இதி நிருபதி ஸர்வம்ஸர்விகாதோ நிஷேதந் ஸௌகதபாச: சோரலாவம் விலாவ்ய:] இவ்விதமாக நிரதிஷ்டாநநிஷேதமுகத்தாலே ஸர்வசூந்யவாதம் பண்ணு கிறானையிற்று ஸௌகதன். நிரதிஷ்டாந நிஷேதமாவது என்னென்னில்; 'இவ்விடத் தில் இது இல்லை' 'இப்போது இது இல்லை' என்றிப்படி காலதேசங்களை முன்னிட்டு நிஷேதிக்குமது ஸாதிஷ்டாநநிஷேதமெனப்படும். இங்ஙனன்றிக்கே 'நஸத் நாஸத்' என்றிப்புடைகளிலே நிஷேதிக்குமது நிரதிஷ்டாந நிஷேதமெனப்படும். இவ்வண்ண மாக ஸர்வசூந்யவாதம் பண்ணுகிற பௌத்தன். "यथा हि चोरस्स तथा हि बुद्धः" என்று கள்ளனோடொப்பக் கூறப்பட்டனாதலால் கள்ளனைப்போலவே இவனையும் வாள் முனையிலே வதைக்கவேணுங்கிடீர் என்கிறார்.

ஸர்வசூந்யவாதி பக்கலிலுள்ள சீற்றத்தின் மிகுதியாலே மெய்மறந்து 'சோர லாவம் விலாவ்ய:' என்று அதிமாத்ரமாக நிக்ரஹித்தருளிச் செய்தார். "कोपस्य वशमेयिवान्" என்னுமாபோலே சீற்றமிட்டவழக்காணும்.

सर्वस्वमिति यस्यां क्रियायां सा सर्वसर्विका; ततः—सर्वप्रकारत इत्यर्थः । [ஸௌகதபாச:] हेयस्सुगतः—सुगतपाशः । பரமநீசனான ஸௌகதன் என்றபடி. "याप्ये पाशप्" என்பது வியா கரணம். [சோரலாவம் விலாவ்ய:] 'चोरवत् छेदनीयः । उपमाने कर्मणि च' इति णमुल् । (6)

प्रतीतिश्चेदिष्टा न निखिलनिषेधो यदि न को निषेद्धाऽतो नेष्टो निरुपधिनिषेधस्सदुपधौ ।
निषेधेऽन्यत्सिध्येत् वरद ! घटभङ्गे शकलवत् प्रमाशून्ये पक्षे श्रुतिरपि मतेऽस्मिन्विजयताम् ॥७॥

ப்ரதீதிச்சேதிஷ்டா ந நிகிலநிஷேதோ, யதி ந க:
நிஷேத்தாதோ நேஷ்டோ நிருபதிநிஷேதஸ் ஸதுபதௌ,
நிஷேதேந்யத் ஸித்த்யேத் வரத! கடபங்கே சகலவத்
ப்ரமாசூந்யே பக்ஷே ச்ருதிரபி மதேஸ்மிந் விஜயதாம். (7)

| | |
|---|---|
| ஹே வரத! | வரந்தருமரசனே! |
| ப்ரதீதி: | 'ஸர்வம் நாஸ்தி' என்னும் ப்ரதீதியானது |
| இஷ்டா சேத் | உண்மையென்று கொள்ளப்படில் |
| நிகில நிஷேதந: | ஸமஸ்த வஸ்துக்களுக்கும் நிஷேதமானது |
| ந | ஸித்திக்க மாட்டாது; |
| ந யதி | அந்த ப்ரதீதியானது உண்மை யென்று கொள்ளப்படவில்லையாகில் |
| நிஷேத்தா க: | ஜகத்தை இல்லை செய்பவர் யார்? (ஒருவருமில்லை) |
| அத: | ஆகையினாலே |
| நிருபாதி நிஷேத: | வெறுமனே 'நாஸ்தி' என்கிற நிஷேதமானது |
| ந இஷ்ட: | கொள்ளத்தக்கதன்று; |
| ஸதுபதேச நிஷேதே | ஒரு உபாதியை முன்னிட்டு நிஷேதிக்குமளவில் |
| அந்யத் ஸித்த்யேத் | வேறொரு பொருளானது ஸித்தித்துவிடும்; (எப்படிபோல வென்றால்) |
| கட பங்கே சகலவத் | குடம் உடைந்து போனாலும் அதன் கண்டங்கள் ஸித்திப்பதுபோல. |
| ஹே வரத | வரந்தரும் பெருமானே! |
| அஸ்மிந் மதேபி | இந்த பௌத்தமதத்திலும் |
| ப்ரமா சூந்யே பதே | ஸர்வ சூந்யத்வ ப்ரமையையும் கொள்ளாத பக்ஷத்திலே |
| ச்ருதி: | வேதப்ரமாணமானது |
| விஜயதாம் | சிறப்புற்றோங்குக. |

* * *—ஸர்வசூந்யவாதம் பண்ணுகிற ஸௌகதனை வெட்டிப்போடவேணுமென்று இச்லோகத்தில்; விஷயங்களைச் சொல்லியன்றோ கண்டிக்கவேண்டுமென்ன, அப்படியே விஷயமருளிச் செய்கிறாரிதில். [ப்ரதீதிரிஷ்டா சேத் ந நிகிலநிஷேத:] 'ஸர்வம் சூந்யம்' என்பவனைக் கேட்போம்; "ஸர்வம் சூந்யம்" என்கிறாயே, இந்த ப்ரதீதி உண்மையா அல்லவா? சொல்லு; உண்மைதான் என்கிறாயோ, தோற்றாய் காண்; 'ஸர்வம் சூந்யம்' என்கிற இந்த ப்ரதீதி உண்மையாகில் ஸர்வபதார்த்தத்துக்குள்ளே இதுவும் ஒன்றாகையாலே இது உள்ளதென்று ஸித்திக்கும்போது ஸர்வசூந்யவாதம் தொலைந்ததாகும். ஏதோவொன்றையாகிலும் உண்மையென்று கொள்ளுமளவில் ஸர்வம் சூந்யமென்று எங்ஙனே சொல்லுவாய்?

இந்த ஆபத்தில் நின்றும் தப்பவேண்டி அந்த ப்ரதீதிதானும் சூந்யமென்ன வேணும்; [யதி ந, கோ நிஷேத்தா] 'ஸர்வம் சூந்யம்' என்கிற ப்ரதீதி உண்மையன்றென்னில்; ஸர்வசூந்யவாதம் போயிற்றுக் காண்; 'ஸர்வம் நாஸ்தி' என்று நிஷேதிப்பவன் இன்னானென்று தெரிய விரகில்லை யென்கை.

[அதோ நேஷ்டோ நிருபதிர் நிஷேத:] 'ஸர்வம் சூந்யம்' என்கிற ப்ரதீதி உள்ளதென்றாலும் இல்லையென்றாலும் இரண்டு வழியிலும் உன் அபிமதம் ஸித்திக்க விரகில்லாமையால் நிரதிஷ்டாநநிஷேதத்தை நீ விட்டுத் தொலைக்கவேணும்: अत्रेदं नास्ति என்றோ, इदानीमिदं नास्ति என்றோ தேசகாலங்களை முன்னிட்டு (இவ்விடத்தில் இது இல்லை—இப்போது இதுஇல்லை என்று) நிஷேதிப்பது ஸாதிஷ்டாநநிஷேதமாகையாலே அப்படி நிஷேதிக்கலாமத்தனையன்றி, தேசகாலங்களைக் குறிப்பிடாமல் 'ஸர்வம் சூந்யம்' என்றாற்போலே நிருபாதிகநிஷேதம் பண்ண வொண்ணாதென்கை.

[ஸதுபதௌ நிஷேதே அந்யத் ஸித்த்யேத்] நிரதிஷ்டாந நிஷேதம் ஸம்பவிக்க மாட்டாமையாலே ஸாதிஷ்டாந நிஷேதந்தான் பண்ணுகிறேன் என்றாயாகில் இதுவும் உனக்கு உபயோகமற்றதேயாகும்; 'இங்கு இது இல்லை' என்றாயாகில் 'வேறோரிடத்தில் இது உண்டு' என்றதாகத் தேறும்; 'இப்போது இது இல்லை' என்றாயாகில் 'வேறொருஸமயத்தில் இது உண்டு' என்றதாகத்தேறும். எப்படிபோலவென்னில் [கடபங்கே சகலவத்] பானை உடைந்தால் ஒன்றுமில்லாமற் போய்விடாதிறே: மண் சக்கைகள் தேறுமன்றோ; துணி கிழிந்தால் நூல் திரள்கள் தேறுமன்றோ, அதுபோலே. ஆகையாலே நிருபாதிகநிஷேதம்போலே ஸோபாதிகநிஷேதமும் ஸர்வசூந்யவாதிக்கு விபரீதஸாதகமென்றதாயிற்று.

இப்படி ஸர்வசூந்யவாதம் வேரறுக்கப்பட் டொழிகையாலே வேதப்ராமாண்யம் குறையற்றதே யென்கிறார் இத்தடியால். ... ... ... (7)

योगाचारो जगदपलपत्यत्र सौत्रान्तिकस्तद्वैचित्र्यादनुमितिपदं वक्ति वैभाषिकस्तु ।
प्रत्यक्षं तत्क्षणिकयति ते रङ्गनाथ ! त्रयोऽपि ज्ञानात्मत्वक्षणभिदुरते चक्षते तान् क्षिपामः ॥८॥

யோகாசாரோ ஜகதபலபத்யத்ர ஸௌத்ராந்திகஸ் தத்
தீவைசித்ர்யாதநுமிதிபதம் வக்தி வைபாஷிகஸ்து,
ப்ரத்யக்ஷம் தத் க்ஷணிகயதி தே ரங்கநாத / த்ரயோபி
ஜ்ஞாநாத்மத்வக்ஷணபிதுரதே சக்ஷதே தாந் க்ஷிபாமஃ. (8)

| | | | |
|---|---|---|---|
| ரங்கநாத | பெரிய பெருமாளே ! | வைபாஷிகஸ்து | வைபாஷிகனென்னும்பௌத்த வகுப்பினனோ வென்றால் |
| அத்ர | இந்த பௌத்த ஸமயத்தினுள் | ப்ரத்யக்ஷம் | ப்ரத்யக்ஷமான |
| யோகாசாரஃ | யோகாசாரனென்கிற பௌத்த வகுப்பினன் | தத் | அந்த ஜகத்தை |
| ஜகத் | ஜகத்தை | க்ஷணிகயதி | க்ஷணிகமென்கிறான் ; |
| அபலபதி | இல்லை செய்கிறான் ; | தே த்ரயஃ அபி | ஆகக் கீழ்ச் சொன்ன மூன்று வகுப்பினரும் |
| ஸௌத்ராந்திகஃ | ஸௌத்ராந்திகனென்னும் பௌத்தவகுப்பினன் | ஜ்ஞாநஆத்மத்வ-க்ஷண பிதுரதே | ஜ்ஞாநமே ஆத்மா என்றும் எல்லாம் க்ஷணபங்குரமென்றும் |
| தத் | அந்த ஜகத்தை | சக்ஷதே | சொல்லுகிறார்கள் ; |
| தீ வைசித்ர்யாத் | பலவகைப்பட்ட ப்ரதீதிகள் உண்டாவது காரணமாக | தாந் | அவர்களை |
| அநுமிதி பதம் வக்தி | அநுமாந கோசரமென்கிறான் ; | க்ஷிபாமஃ | நிரஸிக்கிறோம். |

*****—ஸௌகதர்களில் யோகாசாரன் ஸௌத்ராந்திகன் வைபாஷிகன் என்கிற மூன்று வகுப்பினருடைய கொள்கைகளை யெடுத்துக்கூறிக் கண்டிக்க வொருப்படுகிறார். இவர்களெல்லாரும் புத்தசிஷ்யர்களாம். ஒவ்வொருவனும் ஒவ்வொருவகையாகப் பேசுகிறானயிற்று. யோகாசாரனென்பவன் ஜகத்து அடியோடே இல்லை: ஞானமேயுள்ளது என்கிறான். ஸௌத்ராந்திகன் ஜகத்து அநுமேயமென்கிறான் ; அநுமாநமெல்லாம் ஒரு ஹேதுவைமுன்னிட்டு ப்ரவர்த்திக்குமாகையாலே (தீ) தீவைசித்ர்யத்தை ஹேதுவாகக் கொள்ளுகிறான் ; கடபடாதி விஷயகஜ்ஞாநங்களிலே ஒவ்வொரு விஷயபேதத்தாலும் பலவகையான வேறுபாடுகளுண்டாகையாலே இப்படிப்பட்ட ஹேதுவைக் கொண்டு கடபடாதிஸமுதாயரூபமான ஜகத்தை அநுமிப்போமென்கிறான் என்றபடி. வைபாஷிகனோவென்னில் ; யோகாசாரனைப் போலே ஜகத்தை இல்லை செய்வானுமல்லன் ; ஸௌத்ராந்திகனைப் போலே அநுமேய மென்பானுமல்லன் ; ப்ரத்யக்ஷமென்றே கொள்ளுகிறான் ; கொண்டாலும் க்ஷணந்தோறும் நசித்துப் போகிறதென்கிறான். ஆக, மூவருடையவும் அஸாதாரணங்களான கொள்கைகளை மூன்று பாதங்களாலே அருளிச்செய்து, மூவர்க்கும் ஸாதாரணமான கொள்கையை மேல் அருளிச்செய்கிறார்—[த்ரயோபி ஜ்ஞாநாத்மத்வக்ஷணபிதுரதே சக்ஷதே] என்று. அதாவது—ஜ்ஞாநத்திற்காட்டில் வேறுபட்டு 'ஜ்ஞாதா' என்கிற ஆத்மா இல்லை ; ஜ்ஞாநமே ஆத்மா என்பதும், ப்ரபஞ்சம் க்ஷணத்வம்ஸி என்பதும். இம்மூவர்க்கும் பொதுவான கொள்கை என்றவாறு. [தாந் க்ஷிபாமஃ] மேல் ச்லோகத்திலே இவர்களைக் கண்டிக்கிறோ மென்கை. ... ... ... (8)

जगन्नश्वरं मधुरा बुद्धिरात्मेत्यसद्वेल्लभावे तथा वेषविश्वौ ।
क्षणध्वंसतस्य स्मृतिप्रत्यभिज्ञावरिद्धं जगत्स्यादिदं रङ्गचन्द्र ! ॥९॥

ஜகத் பங்குரம் பங்குரா புத்திராத்மேதி
அஸத், வேத்த்ரபாவே ததா வேத்யவித்த்யோ:,
க்ஷணத்வம்ஸதச்ச ஸ்ம்ருதிப்ரத்யபிஜ்ஞா-
தரித்ரம் ஜகத் ஸ்யாதிதம் ரங்கசந்த்ர!. (9)

| | | | |
|---|---|---|---|
| ரங்கசந்த்ர | ஸ்ரீரங்கநாதனே! | வேத்த்ரு அபாவே | ஜ்ஞானத்திற்காட்டில் வேறு பட்ட ஜ்ஞாதா இல்லையாகில் |
| ஜகத் | "ஜகத்தானது | ததா | அப்படியே |
| பங்குரம் | க்ஷணிகமானது; | வேத்ய வித்த்யோ: க்ஷணத்வம்ஸதச்ச | அறியப்படும் பொருளென்ன அறிவென்ன இவை க்ஷணிகமானால் |
| பங்குரா புத்தி: ஆத்மா | க்ஷணிகமான ஞானமே ஆத்மா" | இதம் ஜகத் | இந்த ஜகத்தானது |
| இதி | என்கிறவிது | ஸ்ம்ருதி ப்ரத்யபிஜ்ஞா தரித்ரம் ஸ்யாத் | ஸ்மிருதியும் ப்ரத்யபிஜ்ஞையும் அற்றதாகும். |
| அஸத் | பிசகு; (ஏனென்றால்) | | |

* * *—கீழ்ச்லோகத்தில் "த்ரயோபி ஜ்ஞாநாத்மத்வ் க்ஷணபிதுரதே சக்ஷதே தாந் க்ஷிபாம:" என்றாரே; அப்படியே அவர்களை க்ஷேபிக்கிறாரிதில். [ஜகத் பங்குரம் பங்குரா புத்திராத்மேத்யஸத்] ஜகத்து க்ஷணிகமென்றும், அந்த ஜகத்தைப்பற்றின ஞானமும் க்ஷணிகமென்றும், அப்படி க்ஷணிகமான ஞானமே ஆத்மாவென்றும் சொல்லுவதுசேராது என்கை. ஏனென்னில்; [வேத்த்ரபாவே இத்யாதி] ஞானத்திற்காட்டிலும் வேறுபட்ட ஜ்ஞாதாவொருவன் ஆத்மாவாக இல்லாவிடில், அறியப்படுகின்ற ஜகத்தும் அதனையறிகின்ற அறிவும் க்ஷணிகமுமாய்விடில், அந்தோ! ஸர்வஜநாநுபவஸாக்ஷிகமாகவுண்டாகிற ஸ்ம்ருதி ப்ரத்யபிஜ்ஞைகள் அவகாசமற்றுப்போமென்கிறார். நித்யனான ஆத்மாவொருவனில்லாதே ஜ்ஞாநமும் ஜ்ஞேயமும் க்ஷணிகமாகில், ஜகத்தில் ஒரு காலத்தில் கடாதிகளின் அனுபவமுண்டானால் அது அப்போதே நசிக்கையாலும், தஜ்ஜந்யஸம்ஸ்காரமும் க்ஷணத்வம்ஸியாயொழிகையாலும் வேறொருகாலத்திலே 'ஸ: घट:' என்று ஸ்மரணமுண்டாக ஹேதுவில்லாமையாலே ஸ்மரணமுண்டாகாதொழியவேணும்.; இப்படியே, ஒருகாலத்தில் ஒருதேசத்திலிருந்த வஸ்துவை வேறொரு தேச காலங்களிலிருப்பதாக வநுஸந்திக்கையாகிற 'सोऽयं देवदत्तः' என்றாற்போலுண்டாகும் ப்ரத்யபிஜ்ஞையும் பிறவாதொழியலாகும்; முன் சொன்னபடியே இதற்கும் ஹேதுவில்லாமையாலே. ஜ்ஞாநமும் ஜ்ஞேயமும் க்ஷணத்வம்ஸியானவில் ஸ்ம்ருதி ப்ரத்யபிஜ்ஞைகள் எங்ஙனேயுண்டாகும்? ஸர்வஜநஸாக்ஷிகமான அநுபவத்தை உபமர்த்திக்கப் போகாமையாலே தத்விருத்தமாக ஜ்ஞாநாத்மத்வக்ஷணபிதுரதாகதநம் அஸங்கதமென்றதாயிற்று. ... ... ... (9)

अहमिदमविवेदमीत्यात्मवित्त्योर्विभेदे स्फुरति यदि तदैक्यं बाधमप्येकमस्तु ।
प्रमितिरपि मृषा स्यान्मेयमिथ्यात्ववादे यदि तदपि सहेरन् दीर्घसन्मतायुः ॥१०॥

அஹமிதமவிவேத்மீத்யாத்மவித்த்யோர் விபேதே
ஸ்புரதி யதி ததைக்யம் பாத்யமப்யேகமஸ்து,
ப்ரமிதிரபி ம்ருஷா ஸ்யாத் மேயமித்த்யாத்வவாதே
யதி ததபி ஸஹேரந் தீர்க்கமஸ்மந்மதாயு:. (10)

| | |
|---|---|
| அஹம் இதம் அபிவேத்மி இதி | 'நான் இதை அறிகிறேன்' என்று |
| ஆத்ம வித்த்யோ:... | ஆத்மாவுக்கும் ஜ்ஞானத்துக்கும் |
| விபேத வ்யுதி | வேற்றுமைதோற்ருநிற்க, |
| தததைக்யம் யதி | அவற்றுக்கு ஒற்றுமை சொல்லுவதானால் |
| பாஹ்யம் அபி | (அவ்விரண்டினும் வேறுபட்டதாய் ஜ்ஞான விஷயமாகின்ற கடபடாதி பஹிர் விஷயமும் |
| ஏகம் அஸ்து | ஜ்ஞானத்திற் காட்டில் வேறு படாதிருக்கட்டும், |
| மேய மித்யாத்வ வாதே | ப்ரமேய மெல்லாம் பொய் யென்னும் பக்ஷத்தில் |
| ப்ரமிதி: அபி | ("ப்ரமேய மெல்லாம்பொய்" என்கிற அந்த) ப்ரதீதியும் |
| ம்ருஷா ஸ்யாத் | பொய்யாகும்; |
| தத் அபி | அதனையும் |
| ஸஹேரக் யதி | அங்கீகரிப்பர்களாகில் |
| அஸ்மத் மத ஆயு: | எமது மதத்தின் ஆயுள் |
| தீர்க்கம் | நீண்டதாம். |

[எமது மதம் ஜீவித்துவிட்டது.]

* * *—'ஜ்ஞானத்திற்காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவில்லை; ஜ்ஞானமே ஆத்மா' என்கிற வாதத்தை நன்கு நிராகரித்தருளுகிருர். "अहमिदं जानामि" [நான் இதை அறிகின்றேன்] என்று ஒவ்வொருவரும் வ்யவஹரிக்கக் காண்கிறேம். ஆத்மாவே ஜ்ஞானமாகில் 'நான் அறிவு' என்னவேணுமேயன்றி 'நான் அறிகின்றேன்' என்னவொண்ணுது; 'அறிகின்றேன்' என்பதற்கு 'அறிவையுடையேன்' என்று பொருளாதலால் 'அறிவுவேறு' 'அறிவையுடைய ஆத்மாவேறு' என்று நன்கு புலப்படவில்லையா? 'நான் செல்வமுடையேன்' என்ருல், செல்வம் வேறு, செல்வமுடைய மனிதன் வேறு என்று ஸ்பஷ்டமாக விளங்குவது போல 'अहमिदमभिवेद्मि' என்னும் வ்யவஹாரத்தினுல் ஜ்ஞாதாவுக்கும் ஜ்ஞானத்துக்கும் வேற்றுமை விளங்காதிருக்கச் செய்தேயும் 'அவ்விரண்டும் ஒன்றே' என்னும்பக்ஷத்தில், [பாஹ்யமப்யேகமஸ்து] நான் இதை அறிகிறேன்' என்னும் வ்யவஹாரத்தில் மூன்று அம்சங்கள் தோன்றுகின்றன; அவையாவன—'நான்' என்பதில் ஜ்ஞாதாவான ஆத்மாதோற்றுகிருன்; 'இதை' என்பதில் ஜ்ஞேயமான வஸ்து தோன்றுகிறது; 'அறிகிறேன்' என்பதில் அறிவு தோன்றுகிறது. ஆகவிப்படிதோன்றுகிற மூன்று அம்சங்களில் ப்ரதமசரமங்களான ஜ்ஞாத்ருஜ்ஞானங்களை ஒன்றேயாகக்கொள்வதானுல் இரண்டாவதான ஜ்ஞேயவஸ்துவையும் வேருகக் கொள்ளாதே அதையும் இவற்ருேடே ஐக்கியப்பட்டதாகவே கொள்ளலாமே என்று ஆபத்திகொடுக்கிறபடி. ஜ்ஞானமும் ஜ்ஞாதாவும் வேற்றுமையற்று ஒன்ருகும்போது ஜ்ஞேயம் மாத்திரம் அவற்றில் வேறுபட்டிருப்பதேன்? மூன்றும் ஒன்றுதான் என்று சொல்லிவிடலாமே யென்கை.

'பாஹ்யம்' என்றது—ஜ்ஞாதா, ஜ்ஞானம் என்ற இரண்டினும் புறம்புபட்டதான ஜ்ஞேயவிஷய மென்றபடி. சிலர் 'க்ராஹ்யமப்யேகமஸ்து' என்று பாடத்தைத் திருத்தப்பார்த்தார்கள்; அது வேண்டா. ஜ்ஞேயவஸ்துவை பாஹ்யமென்ற சொல்லாலேயே சாஸ்த்ரஜ்ஞர் வ்யவஹரிப்பர்கள்.

[ப்ரதீதிரபீத்யாதி.] "யோகாசாரோ ஜகதபலபதி" என்று கீழ்ச்சொன்னபடியே யோகாசாரமதத்தில் பாஹ்யவஸ்துவெல்லாம் பொய்யேயாதலால், இந்த ப்ரஸங்கம் பழுதாம் என்னில்; அதற்கு அருளிச்செய்கிருர், ஸர்வசூந்யவாதிக்குச் சொன்னது போலவே ஸர்வமித்த்யாத்வவாதிக்கும் சொல்லுகிருர்; "सर्वं प्रमेयं मिथ्या" என்கிருனே, இந்த ப்ரதீதி பொய்யா மெய்யா? மெய்யென்னில், ஸர்வபதார்த்தத்துக்குள்ளே இதுவும் ஒன்ருகையாலே இது மெய்யென்று ஸித்திக்கும்போது ஸர்வமித்த்யாத்வவாதம் தொலைந்ததாகும். ஏதோ வொன்றையாகிலும் மெய்யெனக் கொள்ளுமளவில் 'எல்லாம் பொய்' என்று எங்ஙனே சொல்லலாகும்! இந்த ஆபத்தில் நின்றும்

தப்பவேண்டி இந்த ப்ரதீதிதானும் பொய்யே என்னில், 'ஸர்வம் ஸத்யம்' என்றே வைதிகஸித்தாந்தமே சிரஞ்ஜீவியாயிற்றும். ஸர்வமித்யாத்வப்ரதீதி மித்யையாய் விட்டால் ஸர்வஸத்யத்வப்ரதீதி ஸத்யமென்று தேறக் குறையில்லையிறே.

ஆக இந்த ச்லோகத்தால், ஆத்மாவுக்கும் அறிவுக்கும் அபேதம் சொன்னவாறு தென்று நிஷ்கர்ஷித்தருளினாராயிற்று. ... ... ... (10)

एतद्रामास्त्रं दलयतु कलिब्रह्ममीमांसकांश्च ज्ञप्तिर्ब्रह्मैतज्ज्वलदपि निजाविद्यया बम्भ्रमीति ।
तस्य भ्रान्तिं तां श्लथयति जिताद्वैतविद्यस्तु जीवो यद्यद् दृश्यं तद्वितथमिति ये ज्ञापयाञ्चक्रुरज्ञाः ॥११॥

ஏதத் ராமாஸ்த்ரம் தளயது கலிப்ரஹ்மமீமாம்ஸகாம்ச்ச
ஜ்ஞப்திர் ப்ரஹ்மைதஜ் ஜ்வலதபி நிஜாவித்யயா பம்ப்ரமீதி,
தஸ்ய ப்ராந்திம் தாம் ச்லதயதி ஜிதாத்வைதவித்யஸ்து ஜீவ:
யத் யத் த்ருச்யம் தத் விததமிதி யே ஜ்ஞாபயாஞ்சக்ருரஜ்ஞா:. (11)

| | | | |
|---|---|---|---|
| ப்ரஹ்ம | "பரப்ரஹ்மமானது | யத் யத் த்ருச்யம் | எதேது கண்ணிற் காணக்கூடியதோ |
| ஜ்ஞப்தி: | நிர்விசேஷ சின்மாத்ர ஸ்வரூபமானது ; | தத் | அதுவெல்லாம் |
| | | விததம் | பொய்யானது" |
| ஏதத் | இப்படிப்பட்ட ப்ரஹ்மமானது | இதி | என்று இவ்வண்ணமாக |
| ஜ்வலத் அபி | ஸ்வயம் ப்ரகாசமாயிருந்தாலும் | யே அஜ்ஞா: | எந்த மூடர்கள் |
| நிஜ அவித்யயா | தனது அவித்யையினாலே | ஜ்ஞாபயாஞ் சக்ரு: | வெளியிட்டார்களோ |
| பம்ப்ரமீதி | ப்ரமிக்கின்றது ; | | |
| ஜீவஸ்து | ஜீவாத்மாவோவென்றால் | (தாந்) | அந்த |
| ஜித அத்வைத வித்ய: ஸந் | ('தத் த்வமஸி' இத்யாதி வாக்யத்தினால்) அத்வைதஜ்ஞானத்தை அப்யஸிக்கப்பெற்றவனாய்க்கொண்டு | கலிப்ரஹ்ம மீமாம்ஸகாம்ச | கலிபுருஷப்ராயராய் ப்ரஹ்மவிசாரம் பண்ணப் புகுந்த சாங்கராதிகளையும் |
| | | ஏதத் ராமாஸ்த்ரம் | ராமாஸ்த்ரம்போல் தப்பவொண்ணாத தூஷணமாயிங்கீழ்ச்சொன்ன ப்ரஸங்கமானது |
| தஸ்ய | அந்த பரப்ரஹ்மத்தினுடைய | | |
| தாம் ப்ராந்திம் | அந்த ப்ரமத்தை | | |
| ச்லதயதி | நீக்குகின்றான் ; | தளயது | கண்டிக்கக் கடவது. |

* * *—கீழ்ச்லோகத்தில் "ப்ரமிதிரபி ம்ருஷாஸ்யாந்மேய மித்யாத்வவாதே." என்றருளிச்செய்தாரிறே ; அது பௌத்தர்களைக் குறித்து அருளிச்செய்தது : ப்ரச்சந்ந பௌத்தரெனப்படுகிற சாங்கராதிகளும் 'எல்லாம் பொய்' என்கிற வாதத்திலே ஊன்றினவர்களாதலால் அந்த குத்ருஷ்டிகளையும் ஸ்மரித்து, கீழ்ச்லோகத்திற்சொன்ன தூஷணமே அவர்களையும் கண்டிக்கப் போருமென்கிறார் இதில்.

[ஏதத் ராமாஸ்த்ரம்] இராமபிரான் தொடுத்துவிடும் அஸ்த்ரம் கண்ணழிவற்றதாய் [அமோகமாய்] இருக்குமாபோலே தாம் அருளிச்செய்யும் தூஷணமும் ஒருபடியாலும் எதிரிகளால் பரிஹரிக்க வொண்ணாததென்னுங் கருத்தாலே 'ஏதத் ராமாஸ்த்ரம்' என்கிறார். அதாவது "ப்ரமிதிரபி ம்ருஷா ஸ்யாந்மேயமித்யாத்வவாதே யதி ததபி ஸஹேரந் தீர்க்கமஸ்மந்மதாயு:" என்று கீழ்ச்லோகத்திலருளிச்செய்த விஷயத்தையே இங்கு ராமாஸ்த்ரமாகத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறபடி. 'எல்லாம்பொய்' என்று சொல்லுகிற அத்வைதிகளே! உங்களை ஒன்று கேட்போம் : எல்லாம் பொய்யானால் ஆயிடுக ; 'ஸர்வம் மித்யா' என்கிற இந்த ப்ரதீதியாவது உண்மையா? சொல்லுங்கள். உண்மையென்னில் ; ஸர்வபதார்த்தத்திற்குள் அந்தர்க்கதமான இந்த ப்ரதீதியொன்று உண்மையாகச் சொல்லப்படுகையாலே ஸர்வமித்யாத்வப்ரதிஜ்ஞை

பழுதேயாம். இந்த ஆபத்தில் நின்றும் தப்பவேண்டி 'ஸர்வம் மித்யா' என்கிற இந்த ப்ரதீதியும் பொய் என்னில் 'எல்லாம் மெய்' என்று இசைந்து கொள்ளப்பட்டதாகத் தேறும்—என்று நாம் தொடுக்கும் தூஷணமாகிற இந்த ராமாஸ்த்ரமானது ப்ரஹ்ம மீமாம்ஸகர்களென்று பேர்சுமக்கும் பாவிகளையும் தொலைத்திடுக என்கிறார் முதலடியால். இந்த தூஷணம் அத்வைதிகளுக்கும் அபரிஹார்யம் என்றவாறு. கலிப்ரஹ்ம மீமாம்ஸகாந் என்றது—கலிபுருஷனே வடிவெடுத்து வந்தானென்னலாம்படி மஹா பாபிகளாயுள்ள ப்ரஹ்மவிசாரகம் மந்யரான சாங்கரர்களைச் சொன்னபடி. அவர்கள் இன்னதென்னுமிடத்தை மூதலிக்க வேண்டி அவர்களுடைய கோட்பாடுகளை மற்ற மூன்றுபாதங்களாலருளிச்செய்கிறார்.

[ஜ்ஞப்திர் ப்ரஹ்மைதத்] "निर्विशेषचिन्मात्रं ब्रह्म" என்றிரே அத்வைதிகள் சொல்லுவது: அதைச் சொன்னபடி. ஏதத் ப்ரஹ்ம ஜ்ஞப்தி:—"सत्यं ज्ञानमनन्तं ब्रह्म" என்று உபநிஷத்து ஓதுகையாலே ஜ்ஞாநமாத்ர ஸ்வரூபமாகும் அந்த பரப்ரஹ்மம் என்கிறார்கள்.

பின்னையும் என்ன சொல்லுகிறார்களென்னில்; [ஏதத் ஜ்வலதபி நிஜாவித்யயா பம்ப்ரமீதி] இந்த பரப்ரஹ்மந்தான் ஸ்வயம்ப்ரகாசமாகஸ்வபாவமானாலும் தனது அநாதியான அவித்யையினாலே அபரமார்த்தமான ஜ்ஞாத்ரு ஜ்ஞேயாதிபேதத்தை அநுபவிக்கின்றது,—வஸ்துத: ஜ்ஞாத்ருஜ்ஞேயாதி ரூபங்களான நாநாவஸ்துக்கள் இல்லையாயிருக்கச் செய்தேயும் அவையுள்ளனவாக மயக்கங் கொள்ளுகிறதென் கிறார்கள்.

இன்னமும் அவர்கள் என்ன சொல்லுகிறார்களென்னில்; [தஸ்ய ப்ராந்திம் தாம் ச்வதயதி ஜிதாத்வைதவித்யஸ்து ஜீவ:] அவித்யா பரிணமபூதனான ஜீவாத்மாவானவன் *தத்த்வமஸியாதி வாக்யஜந்யஜ்ஞாநத்தாலே அத்வைதவித்யை கைபுகுரப்பெற்றவனாய் அவ்வளவிலே அந்த பரப்ரஹ்மத்தினுடைய அந்தப்ரமத்தைப் போக்கடிக்கிறானென்கிறார்கள். அதாவது—"तत्त्वमसि श्वेतकेतो" என்ற வேதாந்த வாக்யத்தின் உண்மைப் பொருளான அத்வைதம் எப்போது ஜீவாத்மாவுக்கு ஜ்ஞானகோசரமாகிறதோ, அப்போதுதான் பந்தமோக்ஷம் என்கிறார்கள்.

இன்னமும் என்ன சொல்லுகிறார்களென்னில்; [யத்யத் த்ருச்யம் தத் விததம்] கண்ணிற் காண்பதெல்லாம் பொய் என்கிறார்கள். இத்யேவம் யே அஜ்ஞா: ஜ்ஞாபயாஞ்சக்ரு:, தாந் கலிப்ரஹ்மமீமாம்ஸகாம்ச்ச ஏதத் ராமாஸ்த்ரம் தலயது என்று அந்வயிப்பது. .... .... ... ... ... (11)

अङ्गीकृत्य तु सप्तभङ्गिकुसृतिं स्यादस्तिनास्त्यात्मिकां विश्वं त्वद्विभवं जगज्जिनमते नैकान्तमाचक्षते ।
भिन्नाभिन्नमिदं तथा जगदुभे वन्ध्या ममाम्बेतिवत्तत्त्वब्रह्मविदे रहः परमिदं रङ्गेन्द्र ! ते चक्षताम् ॥१२॥

அங்கீக்ருத்ய து ஸப்தபங்கிகுஸ்ருதிம் ஸ்யாதஸ்திநாஸ்த்யாத்மிகாம்
விச்வம் த்வத் விபவம் ஜகஜ் ஜிநமதே நைகாந்தமாசக்ஷதே.
பிந்நாபிந்நமிதம் ததா ஜகதுபே வந்த்யா மமாம்பேதிவத்
தத்த்வப்ரஹ்மவிதே ரஹ: பரமிதம் ரங்கேந்த்ர ! தே சக்ஷதாம். (12)

ஹே ரங்கேந்த்ர — வாரீர் ஸ்ரீரங்கநாதரே !,
ஸ்யாத் அஸ்தி நாஸ்தி ஆத்மிகாம் — 'ஸ்யாதஸ்தி, ஸ்யாந்நாஸ்தி' இத்யாதிரூபமான
ஸப்த பங்கி குஸ்ருதிம் — ஸப்தபங்கியென்னும் துர்மார்க்கத்தை
அங்கீக்ருத்ய — அங்கீகரித்து
த்வத் விபவம் — தேவரீருடைய விபூதியான

| | |
|---|---|
| விச்வம் ஜகத் | ஸகல ஜகத்தையும் |
| ஜிநமதே | ஜைநமதத்தில் |
| நைகாந்தம் | அநேகாந்தமாக |
| ஆசக்ஷதே | சொல்லுகின்றனர்; |
| தே | அந்த ஜைநர்கள், |
| ததா | அப்படியே |
| மம அம்பா வந்த்யா இதிவத் | 'என்தாய் மலடி' என்பது போல் (வ்யாஹதமாக) |

| | |
|---|---|
| இதம் | இவ்வுலகை |
| பிந்நாபிந்நம் ஜகதே | (ப்ரஹ்மத்தோடு) பிந்நமாகவும் அபிந்நமாகவும் சொன்ன |
| ஜாத்த ப்ரஹ்ம விதே | ஜாதப்ரஹ்ம வித்தான ம்ருஷாவாதி ஏகதேசியின் பொருட்டு |
| இதம் பரம் ரஹஸ்ய | இந்த சிறந்த ரஹஸ்யார்த்தத்தை |
| சக்ஷதாம் | உபதேசிக்கட்டும். |

***—ஸப்தபங்கிவாதிகளான ஜைநர்களும் பேதாபேதவாதிகளான ம்ருஷாவாதியேகதேசிகளும் துல்யயோக க்ஷேமர்களென்கிறாரிதில். 1. ஸ்யாதஸ்தி, 2. ஸ்யாந்நாஸ்தி, 3. ஸ்யாதஸ்தி ச நாஸ்தி ச, 4, ஸ்யாதவக்தவ்யம், 5. ஸ்யாதஸ்தி சாவக்தவ்யம் ச, 6. ஸ்யாந்நாஸ்தி சாவக்தவ்யம் ச, 7. ஸ்யாதஸ்தி ஸ்யாந்நாஸ்தி சாவக்தவ்யம் ச. என்று ஜைநர் ஏழுபடியாகச்சொல்லுமது ஸப்தபங்கி யெனப்படும். [अस्यार्थः—घटोऽस्तीति प्रतीयमानत्वात् अस्तीति स्यात्। घटो नास्ति पटो नास्तीति अभावप्रतियोगितया प्रतीयमानत्वात् नास्तीति स्यात्। एवमुभयप्रतीत्या अस्ति नास्तीति स्यात्। अत एव अवक्तव्यम्—अनिर्वचनीयं स्यात्। एवम् सत् अनिर्वचनीयम्, असत् अनिर्वचनीयम्, सदसत् अनिर्वचनीयं च स्यात्—इति। இருக்கும், இல்லாமலிருக்கும், இருக்கவுமிருக்குமில்லாமலுமிருக்கும் என்றிப்படி மனம்போன போக்கெல்லாம் ஸப்தபங்கியென்று சிலவற்றைப்பேசி ஒரு வ்யவஸ்தையில் நிற்காதே ஸர்வமநைகாந்திகமென்று தலைக்கட்டுவர் ஜைநர். மற்றும் சிலர் பேதாபேதவாதம் பண்ணுகிறார்கள்: காண்கின்ற வுலகமானது பரப்ரஹ்மத்திற் காட்டில் அபிந்நமேயாயினும் உபாதியினால் பிந்நமாயுமிருக்குமென்று பேதாபேதவாதம் பண்ணுகிறார்கள். இதுதான் 'என் தாய் மலடி' என்னுமாபோலே வ்யாஹத பாஷணமாயிராநின்றது; ஸப்தபங்கிவாதியானவன் தான் சொல்லும் பரம ரஹஸ்யப் பொருளை இந்த பிந்நாபிந்நவாதிக்கு உபதேசிக்கட்டும்; இவன் அவனுக்கு உபதேசிக்கட்டும். இவையெல்லாம் நாம் செவியேற்கத் தக்கவையல்ல என்கை.

*'ஜகதிவாந்' என்கிற க்வஸுப்ரத்யயாந்தமான பதம் சதுர்த்தீ விபக்தியில் 'ஜகதுஷே' என்று ரூபம் பெறுகிறது. उक्तवते इत्यर्थः। ஜாதந மென்றாலும் ஜாத்ந மென்றாலும் ஒன்றே. அபூர்வ ப்ரஹ்மஜ்ஞானி யென்று பரிஹஸிக்கிறபடி.

இந்த துர்வாதங்களை நம்மிடத்தில் சொல்வதும் நாம் அவர்கட்கு மறுமாற்றம் சொல்வதும் ஊமையரோடு செவிடர் வார்த்தையாம். ஆகவே அந்த வ்யவஹாரங்கள் நமக்கு வேண்டா; அவர்களே பரஸ்பரம் பேசிக்கொள்ளட்டு மென்றாராயிற்று. (12)

कणचरचरणाक्षौ भिक्षमाणौ कुतर्कैः श्रुतिशिरसि सुभिक्षं त्वज्जगत्कारणत्वम्।
अणुषु विपरिणाम्य व्योमपूर्वं च कार्यं तव भवदनपेक्षं रङ्गभर्तर्ब्रुवाते ॥१३॥

கணசரசரணாக்ஷௌ பிக்ஷமாணௌ குதர்க்கை:
ச்ருதிசிரஸி ஸுபிக்ஷம் த்வஜ்ஜகத்காரணத்வம்,
அணுஷு விபரிணாம்ய வ்யோமபூர்வஞ்ச கார்யம்
தவ பவதநபேக்ஷம் ரங்கபர்த்தர் ப்ருவாதே. (13)

| | |
|---|---|
| ஹேரங்கபர்த்த: | திருவரங்கநாதரே! |
| கணசர சரணௌ | கணாதரும் கௌதமரும் |
| ச்ருதிசிரஸி | வேதாந்தத்தில் |
| [illegible] | குறைவின்றி விளக்குவதான |
| த்வத் ஜகத்காரணத்வம் | 'தேவரீரே எல்லாவற்றுக்கும் உபாதானகாரணம்' என்பதை |
| குதர்க்கை: | குத்ஸித தர்க்கங்களாலே |
| பிக்ஷமாணௌ | பிச்சையெடுத்துப் பறித்தவர்களாய்க் கொண்டு |
| அணுஷு | பரமாணுக்களிலே |
| விபரிணம்ய | மாறுபடியிட்டு |
| தவ கார்யம் | தேவரீருடைய காரியமான [உம்மிடத்தில் நின்று முண்டானதான] |
| வ்யோமபூர்வம் | ஆகாசாதிகளையும் |
| பவத் அபேக்ஷம் | உம்முடைய அபேக்ஷையற்றதாக |
| ப்ருவாதே | சொல்லுகின்றனர். |

***—சார்வாகர் ஜைநர் பௌத்தர் முதலானோருடைய கொள்கைகளைக் கண்டிதார் கீழ்; அவர்களைப்போலன்றிக்கே வைதிகர்களென்று அபிமயிப்பவர்களுள் சிலரான நையாயிகர் வைசேஷிகர் என்பவர்களைக் கண்டிக்கிறார் இந்த ச்லோகத்தில்.

தர்க்க சாஸ்த்ரமென்று உலகில் வழங்கப்பட்டு வருகின்றதன்றோ; அது ந்யாய வைசேஷிக தர்சநங்களின் ஸித்தாந்தங்களைச் சிறிது கொண்டு அவதரித்ததாகும். கௌதம மஹர்ஷியானவர் ந்யாய தர்சநத்தை இயற்றியவர்; கணாத மஹர்ஷியானவர் வைசேஷிக தர்சநப்ரதிஷ்டாபகர்; இவ்விரண்டு மஹர்ஷிகளும் தார்க்கிகர்களெனப்படுவர். இவர்களையே இந்த ச்லோகத்தில் 'கணசர சரணாக்ஷௌ' என்கிறது. कणं चरति-मश्नातीति कणचरः, कणाद इत्यर्थः। கௌதமர் காலிலே கண்ணையுடையவராதலால் சரணாக்ஷரெனப்படுவர். (அக்ஷபாதரென்பதும் இவரையே.) இவ்விருவரும் வேதாந்த ஸித்தமான அர்த்தத்தை விட்டு குதர்க்க ஸித்தமான அர்த்தத்தைப் பரிக்ரஹிக்கிறார்கள். அதாவதென்னென்னில்; ஜகத்காரணத்வ விஷயத்திலே வந்தால் வேதாந்தத்திலே எம்பெருமானுக்கே ஜகத்காரணத்வம் கொள்ளை கொள்ளையாகச் சொல்லப்பட்டிருக்கச் செய்தேயும் குதர்க்கங்களாலே அதனை இல்லை செய்து பரமாணுக்களுக்கே அஃது உண்டென்கிறார்கள். இங்கு விவக்ஷிதமான காரணத்வமாவது உபாதாநகாரணத்வம். "सदेव सोम्येदमग्र आसीत्" என்றும் "एको ह वै नारायण आसीत्" என்று முள்ள வேதாந்த வாக்கியங்கள் ஸ்ருஷ்டிக்கு முன்னே எம்பெருமானொருவன் தவிர வேறொன்றுமில்லையென்கையாலே உபாதாந காரணமும் எம்பெருமானேயாகச் சொல்லா நின்றன. இவ்விஷயத்தை விரித்துரைப்போமிங்கு;—

உலகத்தில் ஒரு காரியம் பிறக்கவேணுமானால் நிமித்தகாரணம், உபாதாநகாரணம், ஸஹகாரிகாரணம் என மூவகைக் காரணங்கள் வேண்டியிருக்கும்; இவற்றுள் நிமித்தகாரணமாவது-உபாதாநமான வஸ்துவைக் கார்யரூபேண விகரிக்கச்செய்கிற கர்த்ருவஸ்து. உபாதாந காரணமாவது—கார்யரூபேண விகாரப்படுகைக்கு யோக்யமான வஸ்து. ஸஹகாரி காரணமாவது—காரியம் பிறப்பதற்கு உபகரணமான வஸ்து. பானை துணி முதலிய காரியங்கள் உற்பத்தியாக வேணுமாகில் குயவன் சேணியன் முதலான கர்த்தாக்கள் நிமித்தகாரணம். மண் நூல் முதலானவை உபாதாந காரணம். தடி, சக்கரம், தறிப்பலகை முதலானவை ஸஹகாரி காரணம். இஃது இப்படியிருக்க, ஜகத்தாகிற காரியத்தின் உற்பத்தியில் கீழ்ச்சொன்ன மூவகைக்காரணமும் ஈச்வரனேயாவன். எங்ஙனேயென்னில்; 'बहु स्याम्' என்கிற ஸங்கல்பத்தோடு கூடினவனைக் கொண்டு நிமித்த காரணனையும், நாமரூபங்களையிட்டுப் பிரிக்க வொண்ணாதபடி தன்னுடனே கூடிக்கிடக்கிற ஸூக்ஷ்ம சிதசித்துக்களோடே விசிஷ்டனைக்கொண்டு உபாதாந காரணனையும், ஜ்ஞாநசக்த்யாதி விசிஷ்டனைக்கொண்டு ஸஹகாரிகாரணனையுமிருப்பன். இதில் ஈச்வரனுக்குச் சொல்லும் உபாதாநகாரணத்வத்தில் குதர்க்கிகள் விப்ரதிபத்தி பண்ணுவர்கள்; காரணவஸ்துவின் குணமும் கார்யவஸ்துவின் குணமும்

த்திருக்க வேணுமென்றும், இவ்வாதிருந்தால் காரணத்வம் சொல்லப்பேடாதென்றும் குதர்க்கவாதம் பண்ணுகிறார்கள்.

“प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात्” என்று ப்ரஹ்மஸூத்ரகாரர் உபாதாநகாரணமும் ஈச்வரனே யென்றார். “येनाश्रुतं श्रुतं भवत्यमतं मतमविज्ञातं विज्ञातं स्यात्” என்று ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநப்ரதிஜ்ஞையாலும், “यथा सोम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृन्मयं विज्ञातं स्यात्” என்கிற ததுபபாதகமான த்ருஷ்டாந்தத்தாலும் ஏகவஸ்துபரிணாமம் ஜகத்து என்று சொல்லிற்று, அந்த ஏகவஸ்துவாகிறது ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்டமான ப்ரஹ்மம். 1. “एकमेवाद्वितीयम्, 2. तदात्मानं स्वयमकुरुत, 3. स्रष्टा सृजति चात्मानं विष्णुः पाल्यं च पाति च। उपसंह्रियते चान्ते संहर्ता च स्वयं प्रभुः॥ 4. स एव सृज्यः स च सर्गकर्ता स एव पात्यत्ति च पाल्यते च। ब्रह्माद्यवस्थाभिरशेषमूर्तिः विष्णुर्वरिष्ठो वरदो वरेण्यः॥” இத்யாதிகளாலே இந்த நிமித்தோபாதாநயோரைக்யத்தை ச்ருதிஸ்ம்ருதிகள் ஸ்பஷ்டமாகச் சொல்லிவைத்தன.

இப்படி ஈச்வரன்தானே ஜகத்தாய்ப் பரிணமிக்குமாகில் “अविकाराय शुद्धाय” என்று இவனை விகார மற்றவனாகச் சொல்லும்படி யெங்ஙனே யென்னில்; சித்து அசித்து ஆகிற விசேஷணங்களோடு கூடின தானே ஜகத்தாய்ப் பரிணமிக்குமளவில் விசேஷ்யமான ஸ்வரூபத்துக்கு விகார மில்லாமையாலே விகாரமற்றவனென்னக் குறையில்லை. ஸ்வரூபத்துக்கு விகார மில்லையாகில் இவன்றானே ஜகத்தாய்ப் பரிணமிக்கிறானென்ற பரிணாமம் இவனுக்குண்டாம்படி யெங்ஙனே யென்னில்; விசேஷண த்வாரா உண்டாகிறது. அல்பசக்தியையுடைய ஒரு சிலந்திப் பூச்சிக்கு ஸ்வரூப விகாரமின்றியே யிருக்கச்செய்தே ஸ்வசரீரபூதவிசேஷணமுகத்தாலே தந்துஜாலமான கார்ய ஜாதத்துக்குத் தான் உபாதாநமாம்படி யுண்டான ஸ்வபாவம் ஸர்வசக்தி யுக்தனான ஈச்வரனுக்குக் கூடாதொழியாதிறே.

வேதாந்தத்திலே “सदेव सोम्येदमग्र आसीत्” என்று சாந்தோக்யத்திலும் “ब्रह्म वा इदमेकमेवाग्र आसीत्” என்று வாஜஸநேயகத்திலும் “आत्मा वा इदमेक एवाग्र आसीत्” என்று ஐதரேயகத்திலும் ஸத்ப்ரஹ்மாத்மசப்தஸாமாந்ய சப்தங்களாலே சொல்லப்பட்ட காரணவஸ்து ஏதென்னு மாகாங்க்ஷையிலே கதிஸாமாந்ய ந்யாயத்தாலே “एको ह वै नारायण आसीत्” என்று மஹோபநிஷத்திலே விசேஷிக்கப்பட்ட நாராயணனே ஜகத்காரணபூதனாக நிச்சயித்திருப்பர்கள் பரம வைதிகர்கள்.

இந்த ச்லோகத்தில் கணாத கௌதமர்களிருவரையுமே எடுத்துக் கண்டிக்கிறது. இவர்களைப்போலே பௌத்த ஆர்ஹதர்களும்பரமாணுகாரணவாதிகளேயாயினும் வாசியுண்டு; கேவல பரமாணுக்களே ஜகத்காரணமாக பௌத்தர்க்கும் ஆர்ஹதர்க்கும் மதமாயிருக்கும். வைசேஷிகாதிகளுக்கோ வென்னில், பரமாணுக்கள் உபாதாந காரணமாய் ஆநுமாநிகனான ஈச்வரன் நிமித்த காரணமாக மதமாயிருக்கும். இந்த பரமாணுகாரணவாதம் பொருந்தாது; ஜகத்காரணமாக அங்கீகரிக்கப்படுகிற பரமாணுக்கள் ப்ரத்யக்ஷஸித்தமுமன்றியே ஆகமஸித்தமுமன்றியே, அநுமாநத்தாலே ஸாதிக்கப்பார்க்கில் அது ஆகமவிருத்தமான அர்த்தத்தை ஸாதிக்கமாட்டாமையாலே அநுமாநஸித்தமு

1. சாந்தோக்ய உபநிஷத் 6. 2. 1. 2. தைத்திரீய உபநிஷத்.
3. ஸ்ரீவிஷ்ணு புராணம் 1. 3. 66. 4. ஸ்ரீவிஷ்ணு. 1. 3. 17.

மன்றியே யிருக்கையாலே பரமாணுஸத்பாவத்தில் ஒரு ப்ரமாணமுமில்லாமையாலும் 'ஈச்வரனே ஜகத்காரணம்' என்கிற ச்ருதிக்கு விரோதமாகையாலும்.

எம்பெருமானே ஜகத்காரணனென்னும் விஷயம் வேதாந்தங்களில் பலவிடங்களிலே முறையிடப்பட்டிருக்கையாலே "ச்ருதி சிரஸி ஸுபிக்ஷம்" என்றார். இங்கள் மும்மாரி பெய்து நல்லடிக்காலத்திலே *வரப்புற்றகதிர்ச்செந்நெல் தாள்சாய்ந்துத் தல்வணக்கிக் கொள்ளக் குறைவில்லாதே யிருக்குமாபோலே எம்பெருமானுடைய ஜகத் காரணத்வம் மறைமுடிகளிலெங்கும் அநாயாஸமாகக் கொள்ளக்கூடியதாய்ச் செழித்திருக்கின்றமையைச் சொன்னவாறு. ஸுபிக்ஷகாலத்திலும் ச்ரமமின்றி வாழகில்லாத தௌர்ப்பாக்யசாலிகள் பிச்சைபுக்கு வருந்துமாபோலே நையாயிக வைசேஷிகர்களும் தௌர்ப்பாக்யசாலிகளா யொழிந்தார்களென்று காட்டுதற்கு 'பிக்ஷமாணௌ' எனப்பட்டது.

அவர்கள் எம்பெருமானுடைய ஜகத்காரணத்வத்தைப் பரமாணுக்களிலே யேறிட்டுச் சொன்னது மன்றிக்கே, "आत्मन आकाशस्संभूत:" இத்யாதி ச்ருதிகளின்படியே எம்பெருமானுடைய காரியங்களான ஆகாசாதி பதார்த்தங்களையும் அப்படி ஈச்வர கார்யங்களாகக் கொள்ளாதே ஸ்வதந்த்ரங்களாகவும் நித்யங்களாகவுங் கொள்வராகையாலே அக்கொள்கையை யெடுத்துரைக்கிறார் "வ்யோமபூர்வஞ்ச" என்று தொடங்கி.

ஆக, "தேவரீர் பக்கலிலுள்ள ஜகதுபாதாந காரணத்வத்தைப் பரமாணுக்களிலே யேறிட்டும், தேவரீருடைய கார்யவஸ்துக்களான ஆகாசாதிகளை ஸ்வதந்த்ர நித்யங்களாகவும் நையாயிக வைசேஷிகர்கள் சொல்லுகிறார்கள்"—என்று சொன்ன முகத்தால் 'அப்படி அவர்கள் சொல்லுவது பிசகு' என்றும், "தேவரீரே ஸகல ஜகதுபாதாநகாரணம், தேவரீரிடத்திலிருந்தே ஆகாசாதிகள் ஜநிக்கின்றன" என்றும் சொல்லிற்றாயிற்று. .... ... ... ... ... (13)

वेदे कर्त्राद्यभावाद्बलवति हि नयैस्त्वन्मुखे नीयमाने तन्मूलत्वेन मानं तदितरदखिलं जायते रङ्गधामन् ! ।
तस्मात्सांख्यं सयोगं सपशुपतिमतं कुत्रचित्, पञ्चरात्रं सर्वत्रैव प्रमाणं तदिदमवगतं पञ्चमादेव वेदात् ॥ १४ ॥

வேதே கர்த்ராத்யபாவாத் பலவதி ஹி நயைஸ் த்வந்முகே நீயமாநே
தந்மூலத்வேந மாநம் ததிதரதகிலம் ஜாயதே ரங்கதாமந்,
தஸ்மாத் ஸாங்க்யம் ஸயோகம் ஸபசுபதிமதம் குத்ரசித், பஞ்சராத்ரம்
ஸர்வத்ரைவ ப்ரமாணம் ததிதமவகதம் பஞ்சமாதேவ வேதாத். (14)

| | |
|---|---|
| ஹே ரங்கதாமந் | அரங்கமாநகரமர்ந்த பிரானே ! |
| கர்த்ரு ஆதி அபாவாத் பலவதி | தனக்குக் கர்த்தா முதலானவை யில்லாமையினாலே ப்ரபல ப்ரமாணமான |
| வேதே | வேதமானது |
| நயை: | நியாயங்களாலே |
| த்வத் முகே | உன்பரமாக |
| நீயமாநே ஸதி | ஒருங்கவிடப்படு மளவில், |
| ததிதரத் அகிலம் | அந்த வேதமொழிந்த மற்ற நூல்களெல்லாம் |
| தத் மூலத்வேந | அந்த வேதத்தை மூலமாகக் கொண்டதென்னும் காரணத்தினால் |
| மாநம் ஜாயதே | பிரமாணமாகிறது ; |
| தஸ்மாத் | ஆகையினாலே |
| ஸயோகம் | யோகசாஸ்த்ரத்தோடு கூடினதும் |
| ஸபசுபதிமதம் | பாசுபதமதத்தோடு கூடினதுமான |
| ஸாங்க்யம் | ஸாங்க்யாகமமானது |
| குத்ரசித் | சிறுபான்மை |
| ப்ரமாணம் | பிரமாணமாகின்றது ; |
| பஞ்சராத்ரம் | ஸ்ரீபாஞ்சராத்ரமோவென்னில் |
| ஸர்வத்ர ஏவ (ப்ரமாணம்) | முழுதும் ப்ரமாணமாகின்றது ; |
| தத் இதம் | என்னுமிவ்விஷயம் |
| பஞ்சமாத் வேதாத் ஏவ அவகதம் | ஐந்தாம் வேதமான மஹாபாரதம்கொண்டே அறியலாயிற்று. |

* * *—ஸாங்க்யம், யோகம், பாசுபதம், இவை சிற்சில அம்சங்களில் மாத்திரமே ப்ரமாணமாகின்றன வென்றும், ஸ்ரீ பாஞ்சராத்ரம் அங்ஙனன்றிக்கே ஸர்வாத்மநா ப்ரமாணமாகின்றதென்றும் இதில் அருளிச்செய்கிறார்.

(கர்த்ராத்யபாவாத் பலவதி வேதே) வேதமாவது எப்பொழுதும் ஒரேமாதிரியாய் ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டு உச்சரிக்கப்படும் சப்தங்களின் கூட்டம். இவ்வேதமானது ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் ஈச்வரனால் நான்முகனுக்கு உபதேசிக்கப்பட்டு அவனால் தனது சிஷ்யர்களுக்கு உபதேசிக்கப்பட்டு சிஷ்யப்ரசிஷ்ய பரம்பரையாய் நமக்குக் கிடைத்திருக்கின்றது. ப்ரத்யக்ஷம், அநுமாநம், சப்தம் என ப்ரமாணங்கள் மூன்று. அவற்றுள் சப்தம் இரண்டுவிதம் :—லௌகிக சப்தமென்றும், வைதிக சப்தமென்றும். புதிது புதிதாய் அஸ்மதாதிகளால் சொல்லப்படும் சப்தம் லௌகிக சப்தம் ; வைதிக சப்தங்களே வேதமெனப்படும். प्रत्यक्षेणानुमित्या वा यस्तूपायो न बुध्यते । एनं विदन्ति वेदेन तस्माद्वेदस्य वेदता ॥ என்று முன்னோர்கள் கூறினார்கள் ; ப்ரத்யக்ஷத்தாலும் அநுமாநத்தாலும் அறியக்கூடாததை அறிவிக்குமதுவே வேதம் என்றவாறு.

*வேதம் அபௌருஷேயம்.*

அபௌருஷேயமென்றால் புருஷனால் செய்யப்படாதது என்று அர்த்தம். சப்தமென்றால் ஒலி. கண்டம், தாலு, பல், உதடு முதலிய முகத்திலுள்ள உறுப்புகளினின்று வெளியாகும் ஒலியே சப்தமெனப்படுகிறது. இப்படிப்பட்ட சப்தங்களின் கூட்டமே வேதமாகும். ஆனபின்பு ஒவ்வொரு சப்தமும் புருஷனால் செய்யப்பட்டே வெளியாகின்றதென்று விளங்குதலால் வேதமாகிற சப்தராசியும் புருஷனால் உண்டாக்கப்பட்டுப் பௌருஷேயமாகத்தானிருக்கவேணும் ; அப்போது அபௌருஷேயமென்பது எப்படி கூடும் ? என்று சங்கை உதிக்கலாம். இதற்கு ஸமாதாநம் கூறுமுன் பௌருஷேயமும் அபௌருஷேயமுமான இரண்டு த்ருஷ்டாந்தங்களை யெடுத்துக் கொண்டு விமர்சிப்போம்.

காளிதாஸரால் செய்யப்பட்ட ரகுவம்ச காவ்யத்தில் "वागर्थाविव संपृक्तौ" என்கிற ச்லோகத்தை யெடுத்துக் கொள்வோம். அதுபோல் யஜுர்வேதத்திலுள்ள "इषे त्वोर्जे त्वा" என்கிற மந்த்ரத்தையும் எடுத்துக்கொள்வோம். இவ்விரண்டுக்குமுள்ள வாசி என்னென்று ஆராய்வோம். 'வாகர்த்தாவிவ' என்ற ச்லோகத்தில் (வாக் அர்த்தௌ இவ ஸம்ப்ருக்தௌ) என்கிற பதங்கள் வரிசையாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப்பதங்கள் காளிதாஸரால் ஸ்வயமாக உண்டாக்கப்பட்டவையல்லவென்பது அனைவர்க்கும் தெரிந்ததே. ஆனால் காளிதாஸர் செய்ததென்ன ? தாம் வெளிப்படுத்த உத்தேசித்த அர்த்தங்களை வெளிப்படுத்துவதற்கு வேண்டியபடி பதங்களை ஒருவரிசைக் கிரமமாகச் சேர்த்துப் பிணைத்ததே அவர் செய்த காரியம். இதைக் கொண்டே நாம் ரகுவம்சம் காளிதாஸர் செய்தது என்கிறோம். இதுபோல், (இஷேத்வோர்ஜேத்வா) என்கிற மந்த்ரத்தில் உள்ள 'இஷே த்வா ஊர்ஜே த்வா' என்கிற பதங்களை இப்பொழுது காணப்படும் வரிசைக் கிரமமாகச் சேர்த்தது யார் ? அப்படி சேர்த்துப் பிணைத்தவர் யாராவது ஒருவர் இருப்பரேயானால் அவரே வேதங்களைச் செய்தவரெனத்தகும். ஆனால் அப்படிப்பட்டவர் ஒருவருமில்லையெனச் சொல்ல வேண்டியிருக்கிறது. ஏனென்றால், வேதத்தைச் செய்தவர் யாராவது ஒருவராக இருப்பாராகில் பாரதம் ராமாயணம் முதலிய நூல்களைச் செய்த வியாஸர் வால்மீகி முதலியவர்களின் பெயர்களை நாம் பரம்பரையாகச் சொல்லி வருவதுபோல வேதகர்த்தாவின் பெயரையும் சொல்லி வந்திருப்போம். வேதகர்த்தாவின் பெயரை நாம் நமது முன்னோர்களின் க்ரந்தமொன்றிலுங் காண்கின்றிலோம். காண பரம்பரையாகவும் கேள்விப்படுகின்றிலோம். ஸாதாரணமான சிறுசிறு நூல்களின் கர்த்தாக்களின் பெயர்

தனை நாம் பரம்பரையாகத் தெரிந்து கொண்டிருக்கும்போது மிகப் பெரிதாய் முக்கியமான வேதத்தின் கர்த்தாவின் பெயரை நாம் கேட்கவும் பெறாமலிருப்பதால் உண்மையில் வேதகர்த்தா ஒருவருமில்லை யெனவே நிச்சயிக்கத் தக்கதாகும். இதுவே காளிதாஸாதிகளுடைய க்ரந்தங்கட்கும் வேதத்துக்கும் உள்ள வாசி.

* ஈச்வரனும் வேதகர்த்தா அல்லன். *

ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் ஈச்வரன் நான்முகனுக்கு வேதோபதேசம் செய்வதாகச் சொல்லப்படுகிறதே, ஸ்ருஷ்டிக்கு முன்பு வேதம் இருக்கமுடியாதே, ஆகையால் ஈச்வரனால்தான் வேதம் முதலில் செய்யப்பட்டிருக்கவேணுமென விளங்குகின்றதே; ஆன பின்பு வேதம் அபௌருஷேயம் என்பது எப்படி? என்று கேள்வி பிறக்கலாம்; வேதத்துக்கு எந்த புருஷரும் எப்படி கர்த்தாக்களல்லரோ அப்படி ஈச்வரனும் கர்த்தாவல்லன். உலகத்தின் ஸ்ருஷ்டியானது ஒன்றன்பின் ஒன்றாக அநாதிகாலமாய் நடந்து வருகின்றது. ஒவ்வொரு கல்பத்தின் ஆரம்பத்திலும் ஈச்வரன நான்முகனுக்கு வேதத்தை உபதேசிக்கிறான்; ஆனால், முன் கல்பத்தில் வேதம் எவ்வகையான ஆநுபூர்வியோடு இருந்ததோ அவ்விதமாகவே மறு கல்பத்தின் ஆரம்பத்திலும் வேதத்தையுபதேசிக்கிறான்; எவ்விதமான மாறுதலும் செய்வதில்லை. அநாதிகாலமாக இப்படியே செய்துவருகிறான். இவ்வளவே ஈச்வரன் செய்வது. புதிதாக வேதத்தை இயற்றுவதில்லை. எவ்விதமான மாறுபாடும் செய்வதுமில்லை. ஆகையால் ஈச்வரனும் வேதகர்த்தாவல்லன்.

* வேதம் நிர்த்தோஷம் *

வேதமென்பது சப்தராசியென்று முன்பு சொன்னோம். சப்தத்திற்கு தோஷமாவது என்னென்னில்; தப்பான அர்த்தத்தைத் தெரிவிப்பதே சப்தத்திற்கு தோஷமாம். தனிப்பட ஒரு பதம் தப்பான அர்த்தத்தைத் தெரிவிக்க இயலாது; பல பதங்கள் சேர்ந்த வாக்கியமே தப்பான அர்த்தத்தைத் தெரிவிக்கும். 'இது-வெள்ளி' என்ற இவ்விரண்டு பதங்கள் தனித்தனி எவ்விதமான தப்புப் பொருளையும் தெரிவிக்க மாட்டா; ஆனால் இவ்விரண்டு பதங்களையும் ஒன்று சேர்த்து சயத்தைச் சுட்டிக்காட்டி 'இது வெள்ளி' என்று பிரயோகிக்கப்பட்டால் வெள்ளியல்லாததை வெள்ளியென்று போதிப்பதால் இவ்வாக்கியம் தோஷமுடையதென்று கொள்ளப்படும். இவ்வாக்கியம் இங்ஙனே பிசகான பொருளைப் போதிக்கக் காரணமென்ன? இரண்டு பதங்களுள்ள இவ்வாக்கியத்தில் என்ன தோஷமிருக்கிறது? இப்பதங்கள் தனித் தனியாக ப்ரயோகிக்கப்பட்டபோது எப்படி யிருந்தனவோ அப்படியேதானே கூட்டிச் சொல்லும்போதும் இருக்கின்றன; சப்தத்தில் எவ்விதமான தோஷமுங்காண முடியாதே; ஆனபின்பு இவ்வாக்கியம் தப்பான அர்த்தத்தைப்போதிப்பதேன்? என்னில் இதைப் பிரயோகித்த புருஷன் இப்பதங்களைச் செவ்வனே உபயோகியாமல் தப்பாக உபயோகித்ததே இப்பதங்கள் தப்பான அர்த்தத்தைக் காட்டுவதற்குக் காரணமாகின்றன. ப்ரம ப்ரமாத விப்ரலிப்ஸாதிதோஷங்கள் ஜநிதர்மாக்களுக்கு அவர்ஜநீயங்கள். இவற்றுள் ப்ரமம் இரண்டு வகைப்படும்; ஒரு வஸ்துவை வேறொரு வஸ்துவாகத் தெரிந்து கொள்ளுதல் ஒன்று; ஒரு வஸ்துவைத் தெரிந்துகொள்ளும்போது அதன் ஸ்வபாவமான குணங்களை மாற்றி வேறுகுணங்களோடு கூடினதாகத் தெரிந்து கொள்ளுதல் மற்றொன்று. இவை முறையே விபரீத ஜ்ஞாநமென்றும் அந்யதாஜ்ஞாநமென்றும் வழங்கப்படும். முத்துச்சிப்பியைப் பார்த்து வெள்ளியென்று பிரமிப்பது விபரீதஜ்ஞாநம். சங்கு மஞ்சள் நிறமுள்ளது என்று ப்ரமிப்பது அந்யதாஜ்ஞாநம். இவ்விரண்டுவகையான ப்ரமமும் மனிதனுடைய தோஷமாம். மனிதன் வஸ்துவை உள்ளபடி அறிந்து கொள்ளாமற் போகையே ப்ரமிக்கை. ப்ரமாதமாவது பிசகிப் போகை. அதாவது—தான் ஒன்றைச் சொல்லவேணுமென்று நினைத்து அவசரத் வேறொன்றைச் சொல்லி விடுதல். மனிதனிடத்திலுள்ள இப் விப்ரலிப்ஸையாவது வஞ்சிக்கவேணுமென்கிற இச்சை.

படிப்பட்ட தோஷங்களானவை அவனால் ப்ரயோகிக்கப்படுகிற சப்தங்களை தோஷமுடையனவாகச் செய்கின்றன. ஒருவன் கயிற்றைக் கண்டு பாம்பு என்று ப்ரமிக்கிறான். அவன் அப்பால் இருந்துகொண்டு 'அதோ பாம்பு' என்று கயிற்றைக் காண்பிக்கிறான். இங்கு இவனால் பிரயோகிக்கப்பட்ட சப்தத்தில் எவ்விதமான தோஷமும் இல்லையென்பது உண்மையாயினும் அந்த சப்தத்தினால் பிறர்க்கு உண்டாகும் ஞானம் யதார்த்தமன்றாதலால் அந்த சப்தம் தோஷமுடையதாகக் கொள்ளப்பட்டு அப்ரமாணமாகக் கருதப்படுகின்றது. இங்கு மனிதனுடைய ப்ரமமே சப்தம் அப்ரமாணமாவதற்குக் காரணமாயிற்று.

ஒருவன் கயிற்றைக் கயிறென்று தெரிந்து கொண்டிருந்தும் அவஸரத்தினால் வாய் தவறிப் 'பாம்பு' என்று பிசகாகச் சொல்லுகிறான்; அவனுடைய அச்சொல்லும் தப்பான அர்த்தத்தைக்காட்டுகிறது. அதற்குக் காரணம் அப்புருஷனுடைய ப்ரமாதமேயாம்.

ஒருவன் கயிற்றைக் கயிறென்று தெரிந்து கொண்டிருந்தும் விளையாட்டுக்கோ கெட்ட எண்ணங்கொண்டோ மற்றொருவனைப் பயப்படுத்த விரும்பி 'அதோ பாம்பு' என்கிறான்; இங்கும் சப்தமானது தப்பான அர்த்தத்தைக் காட்டுகிறது. அதற்குக் காரணம் அப்புருஷனுடைய விப்ரலிப்ஸையாம்.

ஆகவே புருஷனுடைய ப்ரமப்ரமாத விப்ரலிப்ஸைகளென்னும் தோஷங்களே சப்தம் அப்ரமாணமாவதற்குக் காரணமேயன்றி சப்தத்தில் இயற்கையான தோஷமில்லையென விளங்குகின்றது.

இப்படி புருஷனுடைய தோஷங்களால் அப்ரமாணமாகும் சப்தங்கள் எவையென்றால், புருஷன் ஒரு அர்த்தத்தைத் தெரிவிக்க வேண்டிப் பல பதங்களை வேண்டியபடி சேர்த்து வாக்கியங்களாகப் பிரயோகிக்கும் சப்தங்களேயாம். வேதமென்கிற சப்தராசியானது எந்தப் புருஷனாலும் தன் இஷ்டப்படி பிணைக்கப்பட்ட தன்றென்றும் நித்யமென்றும் முன்னே உபபாதித்தோமாகையால் புருஷனுடைய தோஷங்களால் துஷ்டமாகக்கூடிய நிலைமை வேதங்களுக்கில்லையென விளங்கும். ஆகவே வேதம் நிர்த்தோஷம்.

* வேதம் அவிச்சிந்நபரம்பராகதம். *

ஸ்ம்ருதி இதிஹாஸம் புராணம் என மற்றும் பலவிதமான நூல்களும் உள்ளன. ஆனால் வேதம் எப்படி அநாதிகாலமாய் சிஷ்யப்ரசிஷ்ய பரம்பரையாய் அத்யயநம் செய்யப்பட்டு வருகின்றதோ அப்படி மற்ற நூல்கள் அத்யயநஞ் செய்யப்பட்டு வருவதில்லை. ப்ராஹ்மணன், க்ஷத்ரியன், வைச்யன் என்கிற மூன்று வர்ணத்தவர்களும் அவசியம் வேதமோதியே தீரவேண்டுமென்றும் ஆசார்ய முகத்தாலேயே வேதாத்யயநம் செய்யப்படவேணுமென்றும் நியமங்களை ஏற்படுத்தி இந்த விதிகளை மீறினால் ப்ராயச்சித்தங்களும் விதிக்கப்பட்டிருக்கையாலே புத்திகெட்டாத காலம் முதலாக ஒரே மாதிரியாய் வேதமோதப்பட்டு வருவதோடு எவ்விதமான ஸந்தேஹங்களுக்கும் இடமின்றியு மிராநின்றது. ஆகவிப்படி வேதம் அபௌருஷேயமாய் நித்யமாய் நிர்த்தோஷமாய் அவிச்சிந்ந பரம்பராகதமா யிருப்பதனாலே ப்ரமாணங்களுள் தலைமை பெற்றிராநின்றது. இவ்விஷயங்களை யெல்லாம் திருவுள்ளம்பற்றியே இங்கு [வேதே கர்த்ராத்யபாவாத் பலவதி] என்றருளிச் செய்யப்பட்டது.

'கர்த்ராதி' என்றவிடத்து ஆதி சப்தத்தாலே கர்த்ருபுத்த்யாதிதோஷங்கள் கொள்ளக்கடவன. வேதம் ஒரு கர்த்தாவையுடையதல்லாமையாலும் தோஷங்களையுடையதல்லாமையாலும் ப்ரபல ப்ரமாணமாகின்ற தென்கை.

இப்படிப்பட்ட வேதமானது (நயைஸ் த்வங்முகே நீயமாநே) இப்படி பரம ப்ரமாணமென்று ஸாதிக்கபடும் வேதத்தை மூலையடியே இழுத்துக்கொண்டு செல்

வார் பல பாவிகளுண்டிறே. பராசரஹுபரமென்பார், ஆஸபதி பரமென்பார், பசுபதிபரமென்பார், மூலப்ரக்ருதிபரமென்பார், ப்ர பிதற்றுவாராய் உள்ளவர்களின் வாயடங்க ஸர்வ வேதாந்த ப்ரத்யயந்யாய மென்றும் ஸர்வசாகா ப்ரத்யயந்யாய மென்றும் சொல்லப்படுகிற ந்யாய ஸஞ்சாரங்களாலே "वेदैश्च सर्वैरहमेव वेद्यः, सर्वे वेदा यत्पदमामनन्ति" என்கிறபடியே ஸகல வேதங்களும் பகவ தேகபரங்களென்று த்ரைவித்யவ்ருத்தஜநமூர்த்தந்யர்களாலே உபபாதிக்கப்படுமிறே.

[தந்மூலத்வேந மாநம் ததிதரதபிலம் ஜாயதே] வேதமொழிந்த மற்ற நூல்கள் ப்ரமாணமாக வேண்டில் வேதம்போலே ஸ்வதஃ ப்ரமாணமாகைக்கு ப்ரஸக்தியில்லை. பின்னைபோ வென்னில் அந்த வேதத்தை மூலமாகவுடையனவாய்க் கொண்டு ப்ரமாண மாகவேணும். பகவத்பரமான வேதத்தோடு முரண்படாதபடி [வேதத்தைப் பின் சென்று] அர்த்தங்களை புணர்த்தும் நூல்களே ப்ரமாணமாகுமென்கை.

[தஸ்மாத்.] வேத விருத்தமானவை அப்ரமாணமென்றும் வேதத்தைப் பின் செல்லுமவையே ப்ரமாணமென்றும் வ்யவஸ்திதமாகையாலே யென்றபடி. [ஸாங் க்யம் ஸயோகம் ஸபசுபதிமதம் குத்ரசித்] கபில மஹர்ஷியால் ப்ரவர்த்திப் பிக்கப்பட்ட ஸாங்க்ய தந்த்ரமும் ஹிரண்யகர்ப்பரால் ப்ரவர்த்திப்பிக்கப்பட்ட யோக தந்த்ரமும் பசுபதிப்ரணீதமான பாசுபதமும் பெரும்பாலும் வேத விருத்தமான அர்த் தங்களை ப்ரதிபாதிக்கையாலும் சிறுபான்மை வேதத்தோடொத்த அர்த்தங்களைச் சொல்லுகையாலும் வேதவிருத்தாம்சங்களில் அப்ரமாணமாய் அவிருத்தாம்சங்களில் ப்ரமாணமாகையாலே ஸ்வல்பப்ராமாண்ய முடையனவாகின்றன.

[பஞ்சராத்ரம் ஸர்வத்ரைவ ப்ரமாணம்.] ஸ்ரீபாஞ்சராத்ரமோவென்னில் அங்ஙனன் றிக்கே ஸகலமேக ப்ரமாணமாயிருக்கும். வேதத்தோடு முரண்படக்கூடிய விஷயம் ஸ்ரீபாஞ்சராத்ரஸம்ஹிதைகளில் அணுமாத்ரமும் இல்லையாதலால் இங்ஙனே நிர்ணயிக் கக் குறையில்லையிறே. இதுதன்னை நிர்ணயித்துத் தருவாராரென்ன, அருளிச்செய் கிறார். [ததிதமவகதம் பஞ்சமாதேவ வேதாத்] "भारतः पञ्चमो वेदः" என்கிறபடியே ஐந்தாவது வேதமாகப் போற்றப்படுகின்ற மஹாபாரதத்தில் மோக்ஷதர்மத்தில் உபரிசர வஸூபாக்யாநத்தில் ஸ்ரீபாஞ்சராத்ரசாஸ்த்ரத்தின் அவதரக்ரமத்தையும் அதிற்கூறிய படியே அநுஷ்டிக்கவேண்டிய ஆவச்யகத்வத்தையும் சொல்லித் தலைக்கட்டின பின்பு—"इदं शतसहस्राद्धि भारताख्यानविस्तरात् । आविध्य मतिमन्थानं दध्नो घृतमिवोद्धृतम् ॥ नवनीतं यथा दध्नो द्विपदां ब्राह्मणो यथा । आरण्यकं च वेदेभ्य ओषधीभ्यो यथामृतम् ॥ इदं महोपनिषदं चतुर्वेदसमन्वितम् । सांख्ययोगकृतान्तेषु पञ्चरात्रानुशब्दितम् । इदं श्रेय इदं ब्रह्म इदं हितमनुत्तमम् । ऋग्यजुस्सामभिर्जुष्टमथर्वाङ्गिरसैस्तथा । भविष्यति प्रमाणं वै एतदेवानुशासनम् ॥" என்று போரப் பொலியச் சொல்லி யிருக்கை யாலே அது கொண்டறிந்து சொன்னோமித்தனை என்றாராயிற்று. ... (14)

सञ्चष्टे नेश्वरं त्वां पुरुषपरिषदि न्यस्य यद्वाऽऽन्यपर्यात् सांख्यो योगी च काक्वा प्रतिफलनमिवैश्वर्यमूचे कयाचित् ।
भिक्षौ शैवस्सुरानभ्यवममभिमनुते रङ्गराजातिरागात् त्वां त्वामेवाभ्यधास्त्वं ननु परविभवव्यूहनाट्यम्भविष्णुम् ॥१५॥

ஸஞ்சஷ்டே நேச்வரம் த்வாம் புருஷபரிஷதி ந்யஸ்ய யத்வாந்யபர்யாத்
ஸாங்க்யோ யோகீ ச காக்வா ப்ரதிபலநமிவைச்வர்யமூசே கயாசித்,
பிக்ஷுள சைவஸ் ஸுராஜம்பவமபிமநுதே ரங்கராஜாதிராகாத்
த்வாம் த்வாமேவாப்யதாஸ் த்வம் நநு பரவிபவவ்யூஹநாட்யம்பவிஷ்ணும். (15)

| | |
|---|---|
| ரங்கராஜ | ஸ்ரீரங்கநாதரே! |
| ஸாங்க்ய: | ஸாங்க்யனானவன் |
| த்வாம் | தேவரீரை |
| புருஷ பரிஷதி | ஜீவாத்ம கோஷ்டியிலே |
| ந்யஸ்ய | வைத்து |
| ஈச்வரம் | ஈச்வரனாக |
| ந ஸஞ்சஷ்டே | சொல்லுகின்றிலன்; |
| யத்வா | அல்லது |
| ஆந்யபர்யாத் | வேறொரு தாத்பர்ய விசேஷத்தினால் (ஸஞ்சஷ்டே—;) |
| யோகீ ச | யோகியோ வென்றால் |
| ஸபரித் காக்வா | பர்யாயவிசேஷத்தாலே |
| ஐச்வர்யம் | ஈச்வரத்வத்தை |
| ப்ரதிபலகம் இவ | ப்ரதிபலகம்போலே ஔபாதிகமாக |
| ஊசே | சொல்லிவைத்தான்; |
| சைவ: | பாசுபதன் |
| பிக்ஷௌ | பிச்சைபுண்ணியான ருத்ரனிடத்தில் |
| அதிராகாத் | பக்ஷபாதமிகுதியினாலே |
| ஸ்வாராஜ்யபவம் | ஈச்வரத்வத்தை |
| அபிமநுதே | அபிமானிக்கிறான்; |
| த்வம் | (பாஞ்சராத்ர வக்தாவான) தேவரீர் |
| பர விபவ வ்யூஹாத ஆட்யம் பவிஷ்ணும் | பர வ்யூஹ விபவரூபங்களாலே ஸம்பந்நரான |
| த்வாம் | தேவரீரை |
| த்வாம் ஏவ | தேவரீராகவே [ஸ்வரூபரூபாதிகளில் ஒருவகையான மாறுபாடுமின்றியே] |
| அப்யதா: கலு | சொல்லிவைத்தீரே. |

* * *—ஸாங்க்யயோக பாசுபதமதங்கள் பெரும்பாலும் வேதத்தோடு முரண்பட்ட பொருளைப் பேசுகின்றனவென்றும், ஸ்ரீபாஞ்சராத்ரம் முழுமையும் வேதத்துக்கு அநுகுணமாயிருக்குமென்றும் கீழ்ச்லோகத்தில் ஸாமாந்யமாக அருளிச்செய்ததை †ஸ்தாலீபுலாகந்யாயத்தாலே உதாஹரித்துக் காட்டுகிறார் இதில்.

நிரீச்வரஸாங்க்யன் வேதத்தை நித்யமாக இசைந்துவைத்தே வேதவேத்யனான பரம புருஷனை இல்லைசெய்து ப்ரக்ருதி புருஷர்களென்கிற இரண்டையே தத்வமாகக் கொள்ளுகிறான். நொண்டியும் குருடனுங் கூடி வழிநடக்கப்புகுமாபோலே ப்ரவ்ருத்தி சக்திரஹிதனான புருஷனும் சிச்சக்திரஹிதையான ப்ரக்ருதியுங்கூடி பரஸ்பரஸவபாவாத்யாஸாதிகளாலே ஜகத்ப்ரவ்ருத்தி பண்ணுவதாக இவன் கொள்ளுகையாலும், புருஷனுக்கு மேற்பட ஈச்வரவ்யக்தியைத் தனியே அங்கீகரியாமையாலும் "ஸஞ்சஷ்டே நேச்வரம் த்வாம் புருஷபரிஷதி ந்யஸ்ய" என்னப்பட்டது.

[யத்வா ஆந்யபர்யாத்] अन्यपरस्य भाव: आन्यपर्यम्. ஈச்வரவிஷயமான வேதவாக்யங்களிருக்குமே; அவற்றுக்கு ஒரு கதி சொல்லவேணுமே; அந்த வாக்யங்கள் ஈச்வர ப்ரதிபாதநத்தில் நோக்குடையனவல்ல; அவற்றுக்கு வேறு ஏதோ தாத்பர்யம் என்கிறானும். வேதாந்த தேசிகனருளிச்செய்த பரமதபங்கத்தில் நிரீச்வரஸாங்க்ய நிராகரணாதிகாரத்தில்—"संचष्टे नेश्वरं त्वां पुरुष परिषदि ऽऽन्यस्य यद्वाऽऽन्यपर्यात् सांख्य:" என்கிறபடியே ஈச்வராதிவிஷயவாக்யங்களுக்குப் பண்ணுங்கண்ணழிவு தத்வாந்தரங்களிலும் பண்ணலாம்' என்ற ஸ்ரீஸூக்திகள் இங்கே அநுஸந்தேயம்.

"யத்வா ஆந்யபர்யாத் ஸாங்க்ய: த்வாம் ஈச்வரம் ந ஸஞ்சஷ்டே"—என்பதற்கு மற்றொருவகையாகவும் பொருள் கூறலாம். ஸாங்க்யன் தேவரீரைப்பற்றி விமர்சிக்கப்புகுந்தவனே யல்லனாகையாலே தேவரீரை ஈச்வரனாகச் சொல்லுகின்றிலன் என்றும் अध्याहार्यम्. ஸாங்க்யர்களுள் இரண்டுவகையான பக்ஷமுண்டுபோலும். புருஷனிற்காட்டில் அதிரிக்தனான ஈச்வரன் ஒருவன் இல்லை [புருஷனே ஈச்வரன்] என்பது ஒருபக்ஷம். அந்தபக்ஷம் "ஸஞ்சஷ்டே நேச்வரம் த்வாம் புருஷபரிஷதி ந்யஸ்ய"—என்பதால் சொல்லப்பட்டது. இனி மற்றொருபக்ஷமாவது—புருஷனை ஈச்வரனா

† ஸ்தாலீபுலாகந்யாயமாவது—ஒருபானைச் சோற்றுக்கு ஓர் அவிழ் பதம் பார்ப்பதாம்.

தனியே ஒரு ஈச்வரனுண்டா' என்கிறவிசாரமே ஸாங்க்யத்தில் கிடையாது: (அதாவது) ஈச்வரனைப்பற்றிய சர்ச்சையே கிடையாது; மற்ற தத்வங்களைப்பற்றின விசாரமேயுள்ளது—என்பதாம். இந்த பக்ஷம் "யத்வா ஆங்ய பர்யாத்" என்பதால் சொல்லப்படுகிறது. 'ஈச்வரன் ஒருவனுண்டு: அவன் புருஷ பரிஜ்ஞநிவிஷ்டனே' என்றுமென்ன? 'ஈச்வரனைப்பற்றின விசாரமே ஸாங்க்யத்தில் இல்லை' என்றுமென்ன? இரண்டும் பர்யாயமேயாதலால் இரண்டுக்கும் பொதுவாக "த்வாம் ஈச்வரம் ந ஸஞ்சஷ்டே" என்றது. ஏவஞ்ச, இந்த நிர்வாஹத்தில் ஆங்யபாயமாவது सांख्यस्य ईश्वरव्यतिरिक्ततत्त्वमात्रविचारपरत्वम्, ईश्वरविचारे अत्यन्ताप्रवृत्तिपर्यवसितम्. இப்படிப்பட்ட மதபேதம் ஸாங்க்யாநுயாயிகளான அர்வாசீநர்களில் வ்யாக்யாநபேதத்தால் விளைந்ததென்பர்.

[யோகே கயாசித் காக்வா ஐச்வர்யம் ப்ரதிபலநமிவ ஊசே] கீழ்ச்சொன்ன நிரீச்வரஸாங்க்யம்போலன்றிக்கே ஸேச்வரஸாங்க்ய மென்னும்படி நிற்கிற யோகஸித்தாந்தத்தின்படியைச் சொல்லுகிறது இது. ஐச்வர்யம் உபாதிவிசேஷப்ரயுக்த மென்கிறனென்கை. "கயாசித் காக்வா" என்றதின் உட்கருத்து என்னென்னில். யோகமதநிஷ்டன் ஈச்வரனுக்கு ஐச்வர்யத்தை ஔபாதிகமாக ஒப்புக்கொண்டதானது 'அடியோடு ஐச்வர்யமில்லை' என்பதற்குப் பர்யாயமே என்றவாறு. வாக்கினால் சொல்லப்படும் சப்தத்தில் அபாவத்யோதகமான நஞ் இல்லாவிட்டாலும் அர்த்தாத் எவ்விடத்தில் அபாவம் ஏற்படுகிறதோ, அவ்விடத்தில் 'காகு:' என்பர்களிறே. அங்ஙனமே இங்குக்கொள்க. ஈச்வரனுக்கு அடியோடு ஐச்வர்யமில்லையென்று சொல்லநினைத்தே ஔபாதிகமான ஐச்வர்யமுண்டென்று சொல்லி வைத்தானென்கை. வாதிகேஸரி அழகியமணவாளச்சீயரருளிச்செய்த தத்வநிரூபணத்தில்—"யோகியானவன் யோகசாஸ்த்ரத்தில் ஈச்வரனுடைய ஈச்வரத்வம் யோகஜந்யமாய்க் கொண்டு ப்ரதிபலநம்போலே ஔபாதிகமாய்த்தனையொழிய ஸ்வாபாவிகமல்லவென்று சொன்னான்" என்றது இங்கே அநுஸந்தேயம்.

[சைவ: அதிராகாத் பிக்ஷுள ஸாம்ராஜ்ம்பவமபிமநுதே] பாசுபதமதஸ்வரூபஞ் சொல்லுகிறது ;—பிச்சையுண்ணி யெம்பெருமானென்னுமாபோலே சாபோபஹதனாய் [1]பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனைதிரிதந்துண்ணு முண்டியானான ருத்ரனிடத்திலே பக்ஷபாதாதிசயத்தாலே பரத்வஞ் சொல்லுகிறான் பாசுபதன்.

ஆக, ஸாங்க்ய யோக பாசுபதங்கள் மூன்றிலும் கீழ்ச்சொன்னவாறு வேதவிருத்தாம்சங்களுண்டு. இவையொழிய, தத்த்வக்ரமோத்பத்தி கதநத்திலும் யோகஸ்வரூப ப்ரதிபாதநத்திலும் மற்றுஞ் சிலவிஷயங்களிலும் விரோதமில்லாமையாலே அந்த அம்சங்களில் இந்த தந்த்ரங்கள் ப்ரமாணங்களாகக் குறையில்லையென்பதும் இங்கு உணரத்தக்கது. இதை உட்கொண்டே கீழ்ச்லோகத்தில் "ஸாங்க்யம் ஸயோகம் ஸபசுபதிமதம் குத்ரசித்...ப்ரமாணம்" என்றருளிச்செய்தது. *

सुराजंभवम् अभिमनुते—पूर्वमनीश्वरस्य इदानीमीश्वरत्वं स्वाभिमानविषयं करोतीत्यर्थः। உண்மையில் ஈச்வரனல்லாதவன் பக்கலிலே ஈச்வரத்வாபிமாநத்தைப் பண்ணுகிறானென்கை.

இனி நான்காமடியால் ஸ்ரீபாஞ்சராத்ரத்தின் ஸர்வாம்சப்ராமாண்யத்தைத் தெரிவிக்கிறார். த்வம் = *पञ्चरात्रस्य कृत्स्नस्य वक्ता नारायणः स्वयम्,* वक्ता पञ्चरात्रस्य यः स्वयम्* இத்யாதிப்படியே ஸ்ரீபாஞ்சராத்ரத்தின் வக்தாவான தேவரீர் என்றபடி. [பர விபவ வ்யூஹார்ச்யம்பவிஷ்ணும் த்வாம்] பரமபதத்தில் பரவாஸுதேவனாய் வீற்றிருக்குமிருப்பென்ன, ஸ்ரீராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களென்ன, ஸங்கர்ஷணாதி வ்யூஹரூபமென்ன—இவற்றால் ஸம்பந்நராயிருக்கின்ற தேவரீரை. (அர்ச்சாவதாரரூபியான பெரிய பெருமாளை நோக்கி இது அருளிச்செய்வதாகையாலே அர்ச்சாவதாரயோகம் அர்த்தாத் ஸித்தம். அந்தர்யாமி ரூபம் உபலக்ஷணமாகக் கொள்ளத்தக்கது.)

[த்வாமேவ அப்யதா:] தேவரீரை தேவரீராகவே அருளிச் செய்துவைத்தீர் என்கிறவிதற்குக் கருத்து என்னென்னில்; பரவ்யூஹவிபவாந்தர்யாம்யர்ச்சாவதார ரூப பஞ்சப்ரகார விசிஷ்டரான தேவரீருடைய ஸ்வரூப ரூப குண விபூதிகள் எப்படிப் பட்டனவோ, அவற்றில் ஒருவகையான மாறுபாடுமின்றி உள்ளது உள்ளபடியே பாஞ்சராத்ரஸம்ஹிதைகளில் அருளிச்செய்தீரென்கை. ஆகையாலே பஞ்சராத்ரத்தில் வேதவிரோதம் அணுமாத்ரமுமில்லை யென்றதாயிற்று. ... ... (15)

इति मोहनव(र्ष्मणा)र्त्मना त्वयाऽपि प्रथितं बाह्यमतं तृणाय मन्ये ।
अथ वैदिकवर्मवर्मितानां मनिताहे कुदृशां किमीश ! वर्त्म ॥१६॥

இதி மோஹந(வர்ஷ்மணா)வர்த்மநா த்வயாபி க்ரதிதம் பாஹ்யமதம் த்ருணாய மந்யே,
அத வைதிகவர்மவர்மிதாநாம் மநிதாஹே குத்ருசாம் கிமீச! வர்த்ம.

| | | | |
|---|---|---|---|
| ஹே ஈச! | எம்பெருமானே! | த்ருணாய மந்யே | த்ருணமாக நினைக்கிறேன்; |
| இதி | இவ்வண்ணமாக | அத | அன்றியும் |
| மோஹந வர்த்மநா | (பிறரை) மயக்கும் வழியாலே | வைதிகவர்ம வர்மிதாநாம் | வைதிகரென்று வேஷம் போட்டுக் கொண்டிருக்கிற |
| த்வயா | (கள்ளவேடத்தைக் கொண்ட) தேவரீராலேயே | குத்ருசாம் வர்த்ம | குத்ருஷ்டிகளினுடைய வழியை |
| க்ரதிதம் அபி பாஹ்யமதம் | ஏற்படுத்தப்பட்டதாயினும் வேதபாஹ்ய மதத்தை | மநிதாஹே கிம் | கொஞ்சிலும் நினைக்கப் போகிறேனோ?. |

—இந்த சதகந்தன்னில் முதல் ச்லோகத்தாலே, எம்பெருமான் பரமக்ருபையினாலே விளக்குப்போன்ற சாஸ்த்ரங்களை உபகரித்தருளினபடியையும், அவற்றைக் கொண்டு பாக்யசாலிகள் வாழ்ந்துபோகிற படியையும் தௌர்ப்பாக்யசாலிகள் மாய்ந்து போகிறபடியையும் அருளிச்செய்து, இரண்டாம் ச்லோகத்தாலே, வேத பாஹ்ய ஸமயங்களும் வேத குத்ருஷ்டிஸமயங்களும் தாமஸங்களென்று ஸூசிப்பித்து, அதற்கு மேல் ச்லோகங்களாலே பாஹ்யர்களினுடையவும் குத்ருஷ்டிகளினுடையவும் கொள்கைகளைச் சுருங்க எடுத்துரைத்து அவற்றுக்கு ஸங்க்ரஹமான மறுப்பையும் காட்டியருளினர். அப்படிப்பட்ட பாஹ்யஸமயிகளின் வழியையும் குத்ருஷ்டிகளின் வழியையும் பரமவைதிகர்கள் காறியுமிழவேணு மென்கிற திருவுள்ளத்தை இந்த ச்லோகத்தில் ஸூசிப்பிக்கிறார்.

"மோஹநவர்த்மநா" என்கிற பாடம் வழங்கிவந்தாலும் "மோஹநவர்ஷ்மணா" என்கிற பாடம் பெரியோர்களால் ஆதரிக்கப்பெற்றதாகும். 1. "கள்ளவேடத்தைக் கொண்டுபோய்ப் புறம்புக்கவாறும்" என்கிறபடியே கள்ளவேடத்தைப் பரிக்ரஹித்த பகவானாலே 2. "மதிவிகற்பால் பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி" என்கிறபடியே ஏற்படுத்தப்பட்டதாயிருந்தபோதிலும் பாஹ்யமதத்தை த்ருணமாக வெண்ணுகிறேன்; (அதாவது) அநாதரிக்கிறேனென்றார் பூர்வார்த்தத்தில். (வர்ஷ்ம—சரீரம்.) (வர்த்ம—வழி.)

வைதிகர்களென்று வேஷம்போட்டுக்கொண்டு வேதங்களில் அபார்த்தங்களைப் பண்ணுகிற அத்வைதிகள் முதலானாராகிற குத்ருஷ்டிகளின் வழியை கொஞ்சிலும் நினைக்கமாட்டேனென்கிறார் உத்தரார்த்தத்தில்.

வைதிகவர்மவர்மிதாநாம் = வர்ம—சொக்காய் என்றபடி. வர்மித:—(அதனால்) மறைக்கப்பட்டவன். வஸ்துத: தாங்கள் அவைதிகர்களாயிருக்கச் செய்தேயும் வைதிகத்வத்தை ஏறிட்டுக்கொண்டவர்களென்றவாறு.

மநிதாஹே—மந்தாதுவின் லுடுத்தமைகவசநம். ... ... (16)

1. திருவாய்மொழி 6—10—4.

2. திருவிருத்தம் 96.

संस्कारं प्रतिसञ्चरेषु निदधत्सर्गेषु तत्स्मारितं रूपं नाम च तत्तदर्हनिवहे व्याकृत्य रङ्गास्पद ! ।
सुप्तोद्बुद्धविरिञ्चपूर्वजनतामध्याप्य तत्तद्धितं शासन्नस्मृतकर्तृकान् वहसि यद्वेदाः प्रमाणं ततः ॥१७॥

ஸம்ஸ்காரம் ப்ரதிஸஞ்சரேஷு நிதத்த் ஸர்க்கேஷு தத்ஸ்மாரிதம்
ரூபம் நாம ச தத்ததர்ஹநிவஹே வ்யாக்ருத்ய ரங்காஸ்பத,
ஸுப்தோத்புத்தவிரிஞ்சபூர்வஜநதாமத்யாப்ய தத்தத்திதம்
சாஸந்நஸ்ம்ருதகர்த்ருகாந் வஹஸி யத் வேதா: ப்ரமாணம் தத:. (17)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்காஸ்பத! | வாரீர் திருவரங்க நாதரே! | தத்ததர்ஹநிவஹே | அவ்வவற்றுக்கு உரிய வஸ்து ஸமூஹத்தில் |
| ப்ரதிஸஞ்சரேஷு | பிரளயங்களில் (வேதங்களை) | வ்யாக்ருத்ய | ஏற்படுத்தி, |
| ஸம்ஸ்காரம் | ஸம்ஸ்காரரூபமாக | ஸுப்த உத்புத்த விரிஞ்ச பூர்வ ஜநதாம் | தூங்கியெழுந்த பிரமன் முதலான ஜன ஸமூஹத்துக்கு |
| நிதத்த் | (தன்பக்கலில்) வைத்துக் கொண்டவனாகி | அத்யாப்ய | அத்யயநம்பண்ணி வைத்து |
| ஸர்க்கேஷு | ஸ்ருஷ்டி காலங்களில் | தத் தத் ஹிதம் சாஸத்(ஸந்) | அவரவர்களுடைய நன்மையை நியமிப்பவராய்க்கொண்டு |
| தத்ஸ்மாரிதம் | அந்த ஸம்ஸ்காரத்தினால் நினைப்பூட்டப்பட்ட | அஸ்ம்ருத கர்த்ருகாந் (வேதாந்) | கர்த்தா இன்னாரென்று தெரியப்பெறாத வேதங்களை |
| ரூபம் | (அந்தந்த வஸ்துக்களின்) ரூபத்தையும் | யத் வஹஸி தத: | தேவரீர் வஹிக்கிறீராகையாலே |
| நாம ச | பெயரையும் | வேதா: | அந்த வேதங்கள் |
| | | ப்ரமாணம் | ஸ்வயம்ப்ரமாணமாகின்றன, |

* * *—இனி, பரமவைதிகர்களாலே பரிக்ரஹிக்கப்பட்ட அர்த்தவிசேஷங்களை அடைவே அருளிச்செய்கிறார். இந்த ச்லோகத்தில் வேதங்கள் ப்ரமாணமென்கிறார். வேதம் பௌருஷேயமா? அபௌருஷேயமா? ஸ்ருஷ்டிகாலத்தில் ஸகலபதார்த்தங்களையும் எம்பெருமான் ஸ்ருஷ்டிப்பது போல வேதங்களையும் ஸ்ருஷ்டிக்கிறானன்றோ? ஸ்ருஷ்டிக்குமுன்பு வேதம் இருக்கமுடியாதே. ஆகையால் ஈச்வரனால்தானே வேதம் செய்யப்பட்டிருக்கவேணும்; ஆகவே எப்படி அபௌருஷேயமாகும்? என்று பலரும் சங்கிக்கக் கூடுமாகையாலே இவ்விஷயத்தின் உண்மையை வெளியிட்டருளுகிறார்.

ஈச்வரன் வேதத்தை ஸ்ருஷ்டிக்கிறானல்லன்; வேதத்தை ஓதிவரும் அதிகாரிகள் பிரளயத்தில் அழிந்துபோய்விட்டாலும் ஸர்வஜ்ஞனும் ஸர்வசக்தனுமான எம்பெருமான் வேதத்தின் ஆநுபூர்வியைத் தான் ஞாபகம் வைத்துக்கொண்டிருக்க வல்லவனாகையாலே அப்படியே வைத்துக்கொண்டிருந்து அதிற்சொன்ன கட்டளைப்படியே ஸ்ருஜ்யவஸ்துக்களின் உருவங்களையும் பெயர்களையும் ஸ்மரித்து அவற்றை வஸ்துக்களுக்கு ஏற்படுத்துகிறான்; இரவிலே உறங்கி, காலையிலே கண்விழித்தெழுந்த வித்யார்த்திக்கு நாம் பாடம் கற்பிப்பதுபோல, பிரமன் முதலானோர்க்கு (எம்பெருமான்) அந்த வேதங்களை அத்யயநம் செய்வித்தருளுகிறான்; அந்த வேதமூலமாகவே அவரவர்களுக்கு ஹிதாநுசாஸநமும் பண்ணிவைத்தருளுகிறான்; இந்த வேதங்களுக்குக் கர்த்தா இன்னாரென்று அந்த ஸர்வஜ்ஞன்றனக்குந் தெரியாது. வஸ்துத: கர்த்தா ஒருவருமில்லாதிருக்க எங்ஙனே தெரிந்துகொள்ளக்கூடும்? ஆகவே வேதங்கள் ப்ரமாணம் என்றாராயிற்று. “एतदेव च वेदानामपौरुषेयत्वं नित्यत्वं च, यत् पूर्वपूर्वोच्चारणक्रमजनितसंस्कार-विशेषेण तमेव क्रमविशेषं स्मृत्वा तेनैव क्रमेणोच्चार्यमाणत्वम्” என்ற ஸ்ரீபாஷ்ய காரருடைய ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம்.

ப்ரதிஸஞ்சரமென்று ப்ரளயத்திற்குப் பெயர். "नामरूपे व्याकरवाणि" என்கிற ச்ருதியைப் பின்சென்று' "ரூபம் நாமச வ்யாக்ருத்ய" என்றார். மூன்றாம் பாதத்தில் "यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै" என்ற ச்ருதி அநுஸந்தேயம்.

நான்காம்பாதத்தில் "சாஸங் அஸ்ம்ருத......" என்று சிலர் பதம் பிரிப்பர்; அது பிசகு; 'சாஸத்' என்று தகாராந்த ரூபமுண்டேயன்றி நகாராந்தரூபம் கிடையாது; ஆகையாலே 'சாஸத்—நஸ்ம்ருத......' என்றே பிரிக்கவேணும். नैकधेत्यादाविव नसब्देन समासः। ஸுப்தப்ரபுத்தரான உபாத்யாயாதிகள் பூர்வோச்சாரணக்ரமத்தை ஸ்மரித்து சிஷ்யாதிகளை அத்யயநம் பண்ணுவிக்குமாபோலே, ஸம்ஹாரஸமயங்களில் ஸர்வேச்வரன் இந்த வேதஸந்தர்ப்பத்தைத் தன் திருவுள்ளத்தில் ஸம்ஸ்கார விசேஷத்திலே யிட்டுவைத்து ஸ்ருஷ்டிகாலத்திலே இந்த வேதசப்தங்களாலே ஸ்மரிக்கப்பட்ட நாம ரூபங்களை ஸ்ருஷ்டங்களான அவ்வோ பதார்த்தங்களிலே வ்யாகரித்து, உறங்கி யுணர்ந்த ப்ரஜைகளைப் பிதா ஓதுவிக்குமாபோலே. ப்ரஹ்மப்ரமுகரான ஸர்வப்ராணிகளையும் யோக்யதாநுகூலமாக அத்யயநம்பண்ணவிவைத்து அவ்வவருடைய ஹிதங்களை சாஸித்துக்கொண்டு போருகையாலே அஸ்மர்யமாண கர்த்ருகத்வாதி நிபந்தநமான வேதப்ராமாண்யம் வ்யவஸ்த்திதமென்றதாயிற்று.

[வேதாঃ ப்ரமாணம் ததঃ] 'வேதঃ' என்று ஏகவசநமாகச் சொல்லாதே பஹுவசநமாகச் சொல்லியிருக்கையாலே "अनन्ता वै वेदाः" என்கிறபடியே வேதங்கள் அளவில்லாதவை என்பது உணர்த்தப்படுகிறது. மேற்குறித்த "அநந்தா வை வேதாঃ" என்கிற வாக்கியம் க்ருஷ்ணயஜுர்வேதத்தின் (தைத்திரீய) ப்ராஹ்மணத்தில் ஒரு பகுதியான 'காடகம்' என்னும் சாகையில் முதல் ப்ரச்நத்தில் பதினோராவது அநுவாகத்திலுள்ளது. அவ்விடத்தில் 'வேதங்கள் அளவற்றவை' என்பதைப்பற்றி ஓர் உபாக்கியானம் ஓதப்பட்டிருக்கின்றது. அதாவது—

"भरद्वाजो ह त्रिभिरायुर्भिर्ब्रह्मचर्यमुवास तंह । जीर्णिं स्थविरं शयानम् । इन्द्र उपव्रज्योवाच ।"

†முன்பொருகால் பரத்வாஜர் என்னும் மஹர்ஷியானவர் ஸகல வேதங்களையும் ஓதி முடிக்கவேணுமென்ற முயற்சிகொண்டு அதற்குரிய ஆயுஸ்ஸைப் பெறுவதற்காக இந்திரனைக்குறித்து உபாஸனை செய்து அவனை ப்ரஸந்நனாக்கி அவனுடைய ப்ரஸாதத்தால் ஒரு புருஷாயுஸ்ஸுக்கு நூற்றாண்டு வீழுக்காடு முந்நூறாண்டு கொண்ட மூன்று ஆயுஸ்ஸுக்களை வரம் பெற்று அந்த வாழ்நாளில் குருகுலவாஸஞ்செய்து வேதமோதி வந்தார். முந்நூறாண்டும் முடிந்து ஜீர்ணசரீரராய்க் கிழத்தனமடைந்து முமூர்ஷுவாய்ப் படுத்திருக்கின்ற அம்முனிவரை இந்திரன் வந்தணுகி மேல்வருமாறு ஒரு வார்த்தை சொன்னான் :—भरद्वाज। यत्ते चतुर्थमायुर्दद्याम् । किमेनेन कुर्या इति । ஓ பரத்வாஜமுனிவரே! மீண்டும் நூறாண்டுகொண்ட ஆயுஸ்ஸை உமக்கு நான் கொடுப்பேனாகில் அந்த வாழ்நாளை நீர் எவ்விதமாகக் கழிக்க உத்தேசிக்கிறீர்? அந்த ஆயுஸ்ஸில் நீர் ஸாதிக்க விரும்பும் புருஷார்த்தம் யாது? என்று கேட்டான் இந்திரன்; அதற்கு அம்முனிவர் விடையளிக்கிறார் :—ब्रह्मचर्यमेवैनेन चरेयमिति होवाच। வேறு நான் என்ன செய்யப்போகிறேன்; அந்த ஆயுஸ்ஸிலும் வேதாத்யயனமே செய்யக்கடவேன் என்றார். அதைக் கேட்ட இந்திரன், 'ஓ, இவர் ஸகலவேதங்களையும் ஓதிவிடவேணுமென்று ஆசைப்படுகிறார் போலும்' என்று நினைத்து அது ஒருநாளும் முடியாத காரியமென்பதைத் தெரிவிப்பதற்காக—तं ह त्रीन् गिरिरूपानविज्ञातानिव दर्शयाञ्चकार । तेषांहैकैकस्मान्मुष्टीनाददे । ருக்வேதம்

† வித்யாரண்ய, பட்டபாஸ்கரபாஷ்யங்களைத் தழுவிப் பொருளுரைக்கப்படுகின்றது.

யஜுர்வேதம் ஸாமவேதம் என்று மூன்று வேதங்களையும் தன்னுடைய யோகஸாமர்த்தியத்தினால் மூன்று மலைகளாக்கி, இதற்குமுன் அம்முனிவர் கண்டறியாத மலைவடிவமான அந்த வேதங்களை அவருக்குக்காட்டினான். பிறகு அவற்றுள் ஒவ்வொரு மலையினின்றும் ஒவ்வொரு முஷ்டியால் தான்களை யெடுத்துக்காட்டினான். स होवाच । भरद्वाजेत्यामन्त्र्य । वेदा वा एते । अनन्ता वै वेदाः । அங்ஙனம் மூன்று முஷ்டிகளை யெடுத்துக் காட்டி 'ஓ! பரத்வாஜரே!' எனவிளித்து இந்திரன் கூறுகிறான்—'இம்மூன்று மலைகளும் வேதங்களே; அதில் ஒவ்வொரு துகளும் ஒவ்வொரு வேதமாதலால் வேதங்களுக்கு எல்லையேகிடையாது' என்றான். இவ்வார்த்தையைக் கேட்டமுனிவர், இப்படியாகில் இன்றளவும் நாம் செய்த வேதாத்யயநம் எவ்வளவாயிருக்கும்? எனச்சிந்தித் தமையை அறிந்த இந்திரன் மீண்டுங்கூறுகிறான்—एतद्वा एतैस्त्रिभिरायुर्भिरन्ववोचथाः । अथ त इतरदननूक्तमेव । முனிவரே! இம்மூன்று முஷ்டிகளில் அடங்கியுள்ள வேதராசியைத்தான் நீர் இதுவரை முந்நூறாண்டுகளாகக் குருகுலவாஸஞ்செய்து ஓதினீர். இதோ மலைமலையாகக் கிடக்கும் வேதங்கள் உம்மால் ஓதப்படவில்லை; ஆகவே ஸகலவேதங்களையும் ஓதிமுடிப்பதென்பது ஒரு நாளும் முடியாத காரியமென்று கொள்வீர்—என்றான்.

ஆக இவ்வுபர்க்கியானத்தினால் வேதங்களின் அளவில்லாமை சொல்லப்பட்டதுணர்க. ... ... .... (17)

शीक्षायां वर्णशिक्षा पदसमधिगमो व्याक्रियानिर्वचोभ्यां छन्दश्छन्दश्चितौ स्याद्गमयति समयं ज्यौतिषं रङ्गनाथ ! ।
कल्पेऽनुष्ठानमुक्तं ह्युचितगमितयोर्न्यायमीमांसयोस्स्यात् अर्थव्यक्तिः पुराणस्मृतिषु तदनुगास्त्वां विचिन्वन्ति वेदाः ॥

சீக்ஷாயாம் வர்ணசிக்ஷா பதஸமதிகமோ வ்யாக்ரியாநிர்வசோப்யாம்
சந்தச் சந்தச்சிதௌ ஸ்யாத் கமயதி ஸமயம் ஜ்யௌதிஷம் ரங்கநாத,
கல்பேநுஷ்டாநமுக்தம் ஹ்யுசிதகமிதயோர்ந்யாயமீமாம்ஸயோஃஸ்யாத்
அர்த்தவ்யக்திஃ புராணஸ்ம்ருதிஷு தத்நுகாஸ் த்வாம் விசிந்வந்தி வேதாஃ. (18)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கநாத! | வாரீர் திருவரங்கப்பெருமானே!, | கல்பே | கல்பஸூத்ரத்தில் |
| சீக்ஷாயாம் | சிக்ஷையென்கிற வேதாங்கத்தில் | அநுஷ்டாநம் | வைதிககருமங்களை அனுஷ்டிக்கவேண்டிய முறைமை |
| வர்ணசிக்ஷா | அக்ஷரங்களின் உச்சாரணக்ரமாதிகளினுடைய சிக்ஷை (செய்யப்பட்டுள்ளது); | உக்தம். | சொல்லப்பட்டது |
| வ்யாக்ரியா நிர்வசோப்யாம் | வ்யாகரணம், நிருக்தி என்கிற வேதாங்கங்களிலே | உசிதகமிதயோஃ | (வைதிக வித்தாந்தத்திற்கு) அநுகுணமாக கமிப்பிக்கப்பட்ட |
| பதஸமதிகமஃ | பதங்களின் ப்ரக்ருதி ப்ரத்யய விபாகம், அர்த்தநிஷ்கர்ஷ முதலானது (செய்யப்படுகிறது) | ந்யாய மீமாம்ஸயோஃ | ந்யாய மீமாம்ஸைகளிலும் |
| சந்தச்சிதௌ சந்தஃ | சந்தஸ்சாஸ்த்ரத்திலே காயத்ரீ முதலான சந்தஸ்ஸு | புராண ஸ்ம்ருதிஷு | புராணங்களிலும் ஸ்ம்ருதிகளிலும் |
| ஸ்யாத் | (சொல்லப்பட்டதாய்) இருக்கும்; | அர்த்த வ்யக்திஃ ஸ்யாத் | அர்த்தவிசேஷம் உண்டாகும்; |
| ஜ்யௌதிஷம் | ஜோதிடசாஸ்த்ரமானது | தத் அநுகாஃ | மேற்சொன்ன சிக்ஷை முதலான வற்றால் அநுஸரிக்கப்படாநின்ற |
| ஸமயம் | (வைதிக கருமங்களின் அநுஷ்டாநத்திற்கு உரிய) காலத்தை | வேதாஃ | வேதங்கள் |
| கமயதி | தெரிவிக்கின்றது; | த்வாம் | தேவரீரை |
| | | விசிந்வந்தி | தேடுகின்றன. [விசாரிக்கின்றன.] |

* * *—கீழ்ச்லோகத்தில் "வேதா: ப்ரமாணம் தத:" என்று வேதப்ராமாண்யத்தை ஸ்தாபித்தாராய் நின்றார். அந்த வேதமானது சிக்ஷா, வ்யாகரணம், நிருக்தம், சந்தோவிசிதி, கல்பஸூத்ரம் ஜ்யோதிச்சாஸ்த்ரம் என்ற ஆறு அங்கங்களோடே கூடியிருக்குமென்றும், அங்கங்களினால் உபப்ரும்ஹணம் செய்யப்பெற்று வேதம் எம்பெருமானை ப்ரதிபாதிக்கின்றதென்றும் இதில் அருளிச்செய்கிறார்.

"शीक्षा कल्पो व्याकरणं निरुक्तं ज्योतिषां गतिः । छन्दो विचितिरित्येतैः षडङ्गो वेद उच्यते ॥"

என்கிறபடியே வேதாங்கங்கள் ஆறு; அவற்றுள், சீக்ஷையாவது—வர்ணஸ்வரமாத்ராதி நிரூபணம்பண்ணும் சாஸ்த்ரம். வ்யாகரணமாவது—ப்ரக்ருதி ப்ரத்யயாதிமுகத்தாலே அர்த்தாபிதாயகமான பதங்களை நிரூபிக்கும் சாஸ்த்ரம். நிருக்தமாவது—அக்ஷரஸாம்ய மாத்ரத்தாலே பதங்களில் அர்த்தத்தை நிரூபிக்கும் சாஸ்த்ரம், சந்தோவிசிதியாவது—காயத்ரீ உஷ்ணிக் அநுஷ்டுப் திரிஷ்டுப் ப்ருஹதீபங்க்தி ஜகதீ என்கிற ஸப்த சந்தஸ்ஸுக்களை நிரூபிக்கும் சாஸ்த்ரம். ஜ்யோதிஷமாவது—அத்யயநாநுஷ்டாநங்களுடைய காலநியமம் பண்ணும் சாஸ்த்ரம். கல்பஸூத்ரமாவது—வேதார்த்தாநுஷ்டாநக்ரமங்களை நிரூபிக்கிற சாஸ்த்ரம்.

"छन्दः पादौ शब्दशास्त्रं च वक्त्रं कल्पः पाणिर्ज्योतिषं चक्षुषी च । शीक्षा घ्राणं श्रोत्रमेतन्निरुक्तं वेदस्याङ्गान्याहुरेतानि षट् च ॥" என்று இவற்றை அவயவரூபங்களாகவும் நிரூபிப்பர்கள்.

[உசிதகமிதயோ: ந்யாயமீமாம்ஸயோ: புராணஸ்ம்ருதிஷு (ச) அர்த்தவ்யக்தி:] இப்படி ஸாங்கமான வேதங்களினுடைய அர்த்தௌசித்யத்தை ப்ரமாணாதி நிரூபணங்களாலும் தர்க்கமர்யாதையாலும் ப்ரதிபாதிக்கக் கடவதாயிருக்கும் ந்யாய சாஸ்த்ரம். மீமாம்ஸையாவது—வேத வேதாந்தங்களின் அர்த்தங்களை விவரிப்பதற்கு உபயுக்தமாகப் பூர்வபக்ஷஸித்தாந்த ரூபமாகவுண்டான விசாரம். இதுதான் பூர்வமீமாம்ஸை உத்தரமீமாம்ஸை என்கிற பேதத்தாலே ப்ரஸித்தம். அதில் "प्रायेण पूर्वभागार्थपूरणं धर्मशास्त्रतः । इतिहासपुराणाभ्यां वेदान्तार्थः प्रकाश्यते ॥" என்கிறபடியே ஆசார வ்யவஹார ப்ராயச்சித்த ப்ரதிபாதிகமான தர்மசாஸ்த்ரமானது கர்மப்ரதிபாதகமான பூர்வபாகத்தை உபப்ருஹ்மணம் பண்ணுகிறது. இதிஹாஸபுராணங்கள் ப்ரஹ்ம ப்ரதிபாதகமான உத்தரபாகத்தின் அர்த்தத்தை உபப்ரும்ஹணம் பண்ணுகிறது.

ஆக இப்படிப்பட்ட உபகரணங்களோடு கூடினதாகிய வேதம் எம்பெருமானை ப்ரதிபாதிக்கின்றதென்றதாயிற்று.

"புராணஸ்ம்ருதிஷு" என்றவிடத்தில் புராணசப்தம் இதிஹாஸத்துக்கும் உபலக்ஷணம். [ததநுகா:] तानि अनुगानि येषां ते इति विग्रहः । கீழ்ச்சொன்ன சீக்ஷாவ்யாகரணாதிகள் வேதங்களைப் பின்செல்லுகின்றன வென்றபடி.

'தேடுகின்றன' என்னும் பொருளையுடைய 'விசிந்வந்தி' என்கிற க்ரியாபதத்தை ப்ரயோகித்தது—வேதங்கள் எம்பெருமானுடைய ஸ்வரூபஸ்வபாவங்களைப் பேசவேணுமென்று முயற்சி செய்கிறவளவிலே நிற்பதன்றிப் பேசித்தலைக்கட்டமாட்டுகின்றில என்ற கருத்தைக் காட்டுதற்கு. "यतो वाचो निवर्तन्ते । अप्राप्य मनसा सह ।" என்னும்படியான விஷயமிறே. *நான்மறைகள் தேடியோடும் செல்வன்* என்றார் திருமங்கையாழ்வாரும். (பெரியதிருமொழி 4-7-7) (18)

आदौ वेदाः प्रमाणं स्मृतिरुपकुरुते सेतिहासैः पुराणैः न्यायैः सार्धं त्वदर्चाविधिमुपरि परिक्षीयते पूर्वभागः ।
ऊर्ध्वो भागस्त्वदीहागुणविभवपरिज्ञापनैस्त्वत्पदाप्तौ वेद्यो वेदैश्च सर्वैरहमिति भगवन् ! स्वेन च व्याकरोथाः ॥१९॥

ஆதௌ வேதா: ப்ரமாணம் ஸ்ம்ருதிருபகுருதே ஸேதிஹாஸை: புராணை:
ந்யாயைஸ் ஸார்த்தம் த்வதர்ச்சாவிதிமுபரி பரிக்ஷீயதே பூர்வபாக:,
ஊர்த்வோ பாகஸ் த்வதீஹாகுணவிபவபரிஜ்ஞாபனைஸ் த்வத்பதாப்தௌ
வேத்யோ வேதைச் ச ஸர்வைரஹமிதி பகவந்! ஸ்வேந ச வ்யாசகர்த்த. (19)

| | |
|---|---|
| ஹே பகவந்! | எம்பெருமானே!, |
| வேதா: | வேதங்களானவை |
| ஆதௌ | முதலிலே [வேறொரு ப்ரமாணத்தை அபேக்ஷியாமல் ஸ்வயமாகவே] |
| ப்ரமாணம் | ப்ரமாணமாகின்றன; |
| ஸ்ம்ருதி: | மந்வாதி ஸ்ம்ருதியானது |
| ஸேதிஹாஸை: புராணை: | இதிஹாஸங்களோடு கூடின புராணங்களோடும் |
| ந்யாயை: ஸார்த்தம் | பூர்வோத்தர மீமாம்ஸைகளோடுங்கூட |
| உபகுருதே | (அந்த வேதங்களுக்கு அர்த்த விவரணம் பண்ணுகை யாகிற) உபகாரத்தைச் செய்கின்றது; |
| | (அந்த வேதத்தில்) |
| பூர்வபாக: | கர்மகாண்டமெனப்படுகிற பூர்வபாகமானது |
| த்வத் அர்ச்சா விதிம் உபரி | தேவரீருடைய திருவாராதன முறைமையைச் சொல்லும் வகையிலே |
| பரிக்ஷீயதே | தலைக்கட்டுகின்றது; |
| ஊர்த்வ: பாக: | ப்ரஹ்மகாண்டமென்னப்படுகிற உபநிஷத்பாகமோவென்னில், |
| த்வத் ஈஹா குண விபவ பரிஜ்ஞாபனை: | தேவரீருடைய சேஷ்டிதங்கள் குணங்கள் விபூதிகள் ஆகிய இவற்றை விளக்கத் தெரிவிப்பதனாலே |
| த்வத் பத ஆப்தௌ | தேவரீருடைய திருவடிகளைச் சேருவதில் |
| (பரிக்ஷீயதே) | தலைக்கட்டுகின்றது; |
| ஸர்வை: ச வேதை: | ("கர்ம ப்ரஹ்மகாண்ட ரூபங்களான) ஸகல வேதங்களாலும் |
| அஹம் | நானே |
| வேத்ய: இதி | அறியக்கூடியவன்" என்று |
| ஸ்வேந | தேவரீர்தாமே |
| வ்யாசகர்த்த ச | அருளிச்செய்ததுமுண்டிறே. |

***—கீழ்ச்லோகத்தில் "ததநுகாஸ் த்வாம் விசிஂவந்தி வேதா:" என்று வேதம் முழுவதும் எம்பெருமானை ப்ரதிபாதிக்கின்றனவென்றருளிச் செய்தார்; இது எங்ஙனே சேரும்? வேதந்தான் கர்மகாண்டமென்றும் ப்ரஹ்மகாண்டமென்றும் இரண்டு பகுதியாகவிறேயிருப்பது; அவற்றுள் கர்மகாண்டமாகிய பூர்வபாகம் யாகம்முதலிய கருமங்களைச் சொல்லுகின்றதாகவும் ப்ரஹ்மகாண்டமாகிய உபநிஷத்பாகம் எம்பெருமானைப்பற்றிப் பேசுகின்றதாகவும் விளங்குகையாலே ஸகலவேதமும் பகவத்ப்ரதிபாதகங்களென்று எங்ஙனே சொல்லலாகும்? என்கிற சங்கையிலே, இங்ஙனே சொல்லுகைக்கு ஒருகுறையுமில்லை யென்று ஸமர்த்திக்கிறார்.

[ஆதௌ வேதா: ப்ரமாணம்] "ஸம்ஸ்காரம் ப்ரதிஸஞ்சரேஷு" என்கிற (17) ச்லோகத்திலேயே வேதப்ராமாண்யத்தை விளங்க அருளிச்செய்தாராகையாலே இப்போது 'ஆதௌ வேதா: ப்ரமாணம்' என்கிறது முன்பு ஸாதித்த அர்த்தத்தை அநுவாதம் செய்கிறபடி. வேதம் ஸமஸ்தரபேக்ஷமான ஸ்வதந்த்ர ப்ரமாணமென்கை. [ஸ்ம்ருதி: ஸேதிஹாஸை: புராணை: ந்யாயைஸ்ஸார்த்தம் உபகுருதே] வேதத்தின் பொருளை அறுதியிடவேணுமாகில் மஹாமதிகளான மஹர்ஷிகளுக்கொழிய அல்லாதார்க்கு அசக்யமாகையாலே உபப்ருஂஹணங்கள் கொண்டே நிர்ணயிக்கவேணும்; ஸ்ம்ருதிஇதிஹாஸபுராணாதிகள் அதற்கு உதவுகின்றன. ஸ்ம்ருதிகளாவன—ஆப்தர்களான மநு, அத்ரி, விஷ்ணு, ஹாரீதர், யாஜ்ஞவல்க்யர் முதலிய மஹர்ஷிகளாலே இயற்றப்பட்ட தர்மசாஸ்த்ரங்கள். இதிஹாஸங்களாவன—பூர்வவ்ருத்த ப்ரதிபாதகங்களான ஸ்ரீராமாயணம் மஹாபாரதம் தொடக்கமானவை. புராணங்களாவன—ஸர்கப்ரதிஸர்காதி பஞ்சலக்ஷணோபேதங்களான ப்ராஹ்மம், பாத்மம், வைஷ்ணவம் முதலானவை. ஆக ஸ்ம்ருதிஇதிஹாஸபுராணங்களை யொழிய ஸ்வபுத்தியாலே வேதார்த்தங்களை அறியப்

பார்க்குமளவில் அல்பச்ருதனானவனுக்கு விப்ரதிபத்தி வருமாகையாலே வேதகாலுஷ்ய ஹேதுவாகுமிறே. "इतिहासपुराणाभ्यां वेदं समुपबृंहयेत् । बिभेत्यल्पश्रुताद्वेदो मामयं प्रतरिष्यति ॥" என்று பார்ஹஸ்பத்ய ஸ்ம்ருதியிலும் மஹாபாரதத்திலும் சொல்லப்பட்டதிறே. இப்படிப்பட்ட ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களைக் கொண்டு வேதப்பொருளுணர்வதற்கும் பூர்வோத்தரமீமாம்ஸா ந்யாயங்கள் ஆவச்யகமாகையாலும் ந்யாயாநுக்ருஹீதமல்லாத அர்த்தம் அஸமஞ்ஜஸமாகையாலும் "ந்யாயைஸ்ஸார்த்தம் உபகுருதே" என்னப்பட்டது. ஆழ்வானும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் "न्यायस्मृतिप्रभृतिभिर्भवता निबद्धैः वेदोपबृंहणविधा-वुचितैरुपायैः । श्रुत्यर्थमर्थमिव भानुकरैर्विभेजुः" என்றருளிச்செய்தார்.

[த்வதர்ச்சாவிதிமுபரி பரிக்ஷியதே பூர்வபாகः] இங் ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்கள் வேதோபப்ருஂஹணமென்று சொல்லிற்று; உபப்ருஂஹ்யமான வேதத்துக்கு ப்ரதிபாத்யார்த்த விசேஷத்தாலேயிறே பாகபேதமுண்டாயிற்று; அப்படியே உபப்ருஂஹணங்களுக்கும் ப்ரதிபாத்ய விசேஷத்தால் பேதமுண்டிறே. அதில் ஸ்ம்ருதிகள் பூர்வபாகோபப்ருஂஹணங்களாகவும் இதிஹாஸாதிகள் உத்தரபாகோபப்ருஂஹணங்களாகவும் நிர்மிதங்களாகையாலே தத்ததுபப்ருஂஹணங்களைக் கொண்டே தத்தத்பாகார்த்தநிச்சயம் பண்ணவேண்டியிறே யிருப்பது. அத்தைப்பற்ற ஆசார வ்யவஹார ப்ராயசித்தாதிகளுக்கு ப்ரதிபாதகங்களான தர்ம சாஸ்த்ரங்களாலே கர்மப்ரதிபாதகமான பூர்வபாகத்தினர்த்த நிச்சயம் பண்ணக்கடவது. பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிசேஷ்டிதங்களுக்கு ப்ரதிபாதகங்களான இதிஹாஸபுராணங்களாலே ப்ரஹ்ம ப்ரதிபாதகமான உத்தரபாகத்தினர்த்த நிச்சயம் பண்ணக்கடவது. இவ்வர்த்தம் "प्रायेण पूर्वभागार्थपूरणं धर्मशास्त्रतः । इतिहासपुराणाभ्यां वेदान्तार्थः प्रकाश्यते ॥" இத்யாதிகளிலும் சொல்லப்பட்டது. இப்படி தர்மசாஸ்த்ரங்களாலே உபப்ருஂஹிதமாகாநின்ற கர்மப்ரதிபாதகமான பூர்வபாகமானது ப்ரஹ்மப்ரதிபாதகமாக எங்ஙனே யாகிறதென்னில்; [பூர்வபாகः த்வதர்ச்சாவிதிமுபரி பரிக்ஷியதே] பூர்வ பாகத்தில் கருமங்கள் சொல்லப்பட்டிருந்தாலும் அவைகளெல்லாம் எம்பெருமானுடைய திருவாராதனத்தைச் சொல்லும் புடைகள் என்றே கொள்ளவேணும். "वायव्यं श्वेतमालभेत भूतिकामः, ऐन्द्रं चरुं निर्वपेत्पशुकामः" என்று பலவிடங்களிலும் வாயு, இந்திரன், வருணன் முதலிய தேவதாந்தரங்களை யுத்தேசித்துக் கருமங்கள் விதிக்கப்பட்டிருந்தாலும் "स आत्मा । अङ्गान्यन्या देवताः" என்கிற தைத்திரீயோபநிஷத்தில் அக்நீந்த்ராதிஸகலதேவதைகளையும் எம்பெருமானுடைய சரீரபூதராகச் சொல்லுகையாலே அக்கருமங்களெல்லாம் பகவதாராதநமாகவே ஆகும். அவயவங்களிலே இடுமவை அவயவிக்குச் சேருமிறே. இவ்வாகாரத்தையறிந்து அக்நீந்த்ராதி தேவதாந்தர்யாமிஸமாராதநமாக அநுஷ்டிக்குமவர்களிடத்தில் இவற்றினுடைய பகவதாராதநத்வம் ஸுஸ்பஷ்டமாயிருக்கும். இவ்வாகாரமறியாதார் அவ்வோதேவதாந்தரங்களை உத்தேசித்துப் பண்ணுங்கருமங்களும் வஸ்துகத்யா பகவதாராதநமாய்த் தலைக்கட்டும். "ये यजन्ति पितॄन् देवान् ब्राह्मणान् सहुताशनान् । सर्वभूतान्तरात्मानं विष्णुमेव यजन्ति ते ॥" என்னக்கடவதிறே. "येऽप्यन्यदेवताभक्ता यजन्ते श्रद्धयाऽन्विताः । तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥" என்று கீதையில் தானே அருளிச்செய்தானிறே. ஆகையாலே பூர்வகாண்டமானது பகவதாராதநவிதிப்ரதிபாதநத்திலே பர்யவஸாநமாகிறது என்னக்குறையில்லை.

[ஸார்த்தோ பாகः த்வதீஹாகுணவிபவபரிஜ்ஞாபநைः த்வத்பதாப்தௌ] பரிக்ஷீயதே இத்யநுஷங்கः. உத்தரகாண்டமான உபநிஷத்பாகத்தில் எம்பெருமானுடைய

சேஷ்டிதங்களும் திருக்கல்யாண குணங்களும் விபூதிகளும் உணர்த்தப்படுகின்றன வென்பது ஸர்வஸிர்விவாதம். இப்படிப்பட்ட உபாஸநபாகம் எம்பெருமானுடைய திருவடிகளைப் பெறுவிப்பதில் பர்யவஸாநமாகிறது. *जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः । त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ என்று பகவச்சேஷ்டிதாதிகளை யறிவார்க்கு தத்பதாவாப்தி சொல்லிற்றிறே.

ஆக, பாகத்வயாத்மகமான வேதமானது ஆராதநப்ரகார ப்ரதிபாதந முகத்தாலும் ஆராத்ய ப்ரகார ப்ரதிபாதந முகத்தாலும் பகவத்பரமேயானபடியை உபபாதித்தாராயிற்று, "वेदैश्च सर्वैरहमेव वेद्यः" என்று இருத்தேர்த்தட்டிலே தேவரீர் தாமே அருளிச்செய்த வர்த்தமன்றோ இது என்று தலைக்கட்டுகிறார் நான்காம் பாதத்தால். "सर्वे वेदा यत्पदमामनन्ति, सर्वे वेदा यत्रैकं भवन्ति" என்று தடஸ்த்தர் சொன்னது கிடக்கட்டும்; தேவரீர் தாமே சோதிவாய்திறந்து அருளிச்செய்ததன்றோ என்கை. (19)

क्रिया तच्छक्तिर्वा किमपि तदपूर्वं पितृसुरप्रसादो वा कर्तुः फलद इति रङ्गेश ! कुदृशः ।
त्वदर्चेष्टापूर्ते फलमपि भवत्प्रीतिजमिति त्रयीवृद्धास्तत्तद्विधिरपि भवत्प्रेरणमिति ॥२०॥

க்ரியா தச்சக்திர் வா கிமபி ததபூர்வம் பித்ருஸுர
ப்ரஸாதோ வா கர்த்து: பலத இதி ரங்கேச! குத்ருச:,
த்வதர்ச்சேஷ்டாபூர்த்தே பலமபி பவத்ப்ரீதிஜமிதி
த்ரயீவ்ருத்தாஸ் தத்தத்விதிரபி பவத்ப்ரேரணமிதி. (20)

All good Karmas must be done [illegible] from [illegible] to please God

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கேச! | ஸ்ரீரங்கநாதரே! | இஷ்டா பூர்த்தே | ஜப ஹோம தானாதிகளாகிற இஷ்டமென்ன, குளம் வெட்டுகை கோவில்கள் கட்டுகை முதலானவையாகிற பூர்த்தமென்ன ஆகிய இவை |
| க்ரியா | "யாகம் முதலிய கருமமோ, (அல்லது) | த்வத் அர்ச்சா (இதி) | தேவரீருடைய திருவாராதனம் (என்றும்), |
| தச்சக்தி: வா | அந்த கருமத்தின் சக்தியோ, (அல்லது) | பலம் அபி | மேற்சொன்ன இஷ்டா பூர்த்தங்களினாலுண்டாகிற பலனும் |
| கிமபி | அநிர்வசநீயமான | பவத் ப்ரீதிஜம் இதி | தேவரீருடைய உகப்பினாலுண்டாமது என்றும் |
| தத் அபூர்வம் | அந்த கருமத்தினாலுண்டாகும் அபூர்வமோ (அல்லது) | தத் தத் விதி: அபி | அந்தந்த கருமங்களின் விதியும் |
| பித்ருஸுர ப்ரஸாத: வா | பித்ருக்களுடையவும் தேவர்களுடையவும் அநுக்ரஹமோ | பவத் ப்ரேரணம் இதி | தேவரீருடைய கட்டளை யென்றும் |
| கர்த்து: பலத: இதி | அந்தந்த கருமங்களை அநுஷ்டிப்பவனுக்குப் பயனளிப்பதாக ஆகின்றது" என்று | (ஆஹு:) | சொல்லுகிறார்கள். |
| குத்ருச: (ஆஹு:) | குத்ருஷ்டிகள் சொல்லுகிறார்கள்; | | |
| த்ரயீ வ்ருத்தா: | வைதிக முதுகுரவர்களோ வென்னில், | | |

* * *—வேதம் ஸ்வத:ப்ரமாணமென்றும் அதுதான் ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களாலே உபப்ரும்ஹிக்கப் படுகிறதென்றும், அவ்விரண்டு பாகங்களும் ஆராதந ஸ்வரூப ப்ரதிபாதந முகத்தாலும் பகவத் ஆராத்யஸ்வரூப ப்ரதிபாதந முகத்தாலும் பரமேயாகிறதென்றும் சொல்லி நின்றது கீழ். இதில், அந்த கர்ம காண்டத்தில் மதாந்தரஸ்தர்களின் நிர்வாஹங்களை மறுத்துப் பரமைகாந்திகளின் நிர்வாஹத்தை நிரூபித்தருளுகிறார்.

"ज्योतिष्टोमेन स्वर्गकामो यजेत" [ஸ்வர்க்காநுபவம் வேண்டியவன் ஜ்யோதிஷ்டோம யாகம் பண்ணக்கடவன்] இத்யாதிகளான விதிவாக்யங்களைக் கண்டவன் ஸ்வர்க்க போகத்திற்கு ஸாதநமாக ஜ்யோதிஷ்டோம யாகஞ் செய்கிறேனென்று வைத்துக்கொள்வோம். அவன் காலாந்தரத்தில் லோகாந்தரத்தில் அதன் பலனை யடைகிறேனென்றும் வைத்துக்கொள்வோம். அப்படி காலாந்தரத்திலும் லோகாந்தரத்திலும் அடையப்படுகின்ற அந்தப்பலனுக்கு எது ஸாதநமாகின்றது? என்னும் விசாரத்தில் பாட்டர்கள் சொல்லுவதாவது, [க்ரியா தச்சக்திர்வா] முன்னே அநுஷ்டிக்கப்பட்ட யஜ்ஞரூபமான க்ரியையோ, அல்லது அந்த க்ரியையின் சக்தி விசேஷமோ ஸாதநமாகின்றதென்கிறார்கள். அதாவது—' ज्योतिष्टोमेन स्वर्गकामो यजेत " என்னும் ப்ரபல சாஸ்த்ரப்ராமாண்யாந்யதாநுபபத்தியினால் ஸ்வர்க்க ப்ராப்திகாலம் வரையில் இருக்கக் கூடியதான ஜ்யோதிஷ்டோமக்ரியை ஸாதநமென்னலாம். ருத்விக்கு முதலானவர்களின் வ்யாபார ரூபமான க்ரியையானது அப்போதே நசித்து விடுகையாலே அப்படி நஷ்டமாய்ப் போகிற அந்த க்ரியை காலாந்தர தேசாந்தர பாவியான ஒரு பலனைக் குறித்து ஸாதநமாகிறதென்கை அஸங்கதமென்னில், [தச்சக்திர்வா] அந்த க்ரியை நசித்துப்போனாலும் அதனாலுண்டாகக் கடவதாய் சக்திசப்தவாச்யமான ஒரு அதிசயம் நசியாதேயிருந்து கொண்டு பலனைக் கொடுக்கிறதென்னலா மென்பர்.

ப்ராபாகரர்களோ வென்னில்: [கிமபி ததபூர்வம்] யஜ்ஞரூபமான க்ரியையானது அப்போதே நசித்துப்போகையாலே அது பலஸாதநமாகமாட்டாதாப்போலே ' धर्मिलोपे सति धर्मस्यापि लोपः ' என்கிற ந்யாயத்தாலே அந்த க்ரியையின் தர்மமாகிய சக்தியும் நசித்துப் போகக்கடவதாகையாலே அதுவும் ஸாதநமாகாது; அந்த க்ரியையானது தான் நசிக்கும்போது அபூர்வமென்று ஒன்றை உண்டாக்குகின்றது; அது ஒரு அபூர்வத்தை உண்டாக்குகின்றது; இப்படியே பலபல அபூர்வங்களுண்டாகி பலப்ராப்திக்கு அடுத்த முன் க்ஷணத்திலே பரமாபூர்வமென்று ஒன்று உண்டாகி அதுதான் பலப்ரதமாகின்றதென்கிறார்கள்.

நவீந மீமாம்ஸகர்களோவென்னில் [பித்ருஸுரப்ரஸாதோ வா கர்த்து: பலத:] அவ்வோக்ரியைகளெல்லாம் பித்ருக்களுக்கும் தேவதைகளுக்கும் ஆராதநங்களாகையாலே அந்த க்ரியைகளினாலே ஆராதிக்கப்படும் அவர்களின் அநுக்ரஹம் ஸ்திரமாயிருந்துகொண்டு பலப்ரதமாகின்றதென்கிறார்கள்.

ஆக இப்படி நிர்வஹிக்கும் புடைகளிலே ஏதேனுமொன்றாகிலும் பொருந்துவதுண்டோ வென்னில்: [இதி ரங்கேச! குத்ருச:] இப்படி சொல்லுவாரடங்கலும் குத்ருஷ்டிகள் என்றபடி. பரமை காந்திகள் பணிக்கும்படி எங்ஙனேயென்ன, உத்தரார்த்தமருளிச் செய்கிறார் [த்வதர்ச்சேத்யாதி] ஜபம் ஹோமம் தாநம் முதலியவைகளாகிற தேவதாராதநம் இஷ்டம் எனப்படும்; குளம் சமைத்தல் கோவில்கள் ஏறியருளப் பண்ணுதல் முதலியவை பூர்த்தம் எனப்படும். (இஷ்டஞ்ச பூர்த்தஞ்ச இஷ்டாபூர்த்தே) இவைகள், த்வதர்ச்சா—தேவரீருடைய திருவாராதநரூபமாக ஆகின்றன என்றபடி. யஜ்ஞாநுஷ்டாந தடாககோபுராதி நிர்மாணங்கள் பகவத் கைங்கர்யமிறே. [பலமபி பவத்ப்ரீதிஜமிதி] அந்த இஷ்டாபூர்த்தங்களினால் விளையும் பலனும் தேவரீருடைய திருவுள்ளத்திலுகப்பினாலேயன்றோ உண்டாவது. தத்தத்காலங்களிலே நசித்துப் போகக்கடவ க்ரியைகளுமல்ல, அவற்றின் சக்தியுமல்ல, அபூர்வமுமல்ல, பித்ருஸுரப்ரஸாதமுமல்ல பலப்ரதம், தத்தத்க்ரியைகளாலே ஆராதிக்கப்படுபவரான தேவரீருடைய திருவுள்ளத்திலே ஒரு உகப்பு உண்டாகி அது ஸ்திரமாயிருந்து பயன்பெறுவிக்கின்றதென்கை.

[தத்தத்விதிரபி பவத்ப்ரேரணமிதி] * अहरहस्सन्ध्यामुपासीत, * यजेत, என்றிவை முதலான விதிகளுமெல்லாம் 'श्रुतिः स्मृतिर्ममैवाज्ञा' என்றிருப்பதால் தேவரீருடைய நியமநமாமத்தனை என்று த்ரைவித்யவ்ருத்தர்கள் நிஷ்கர்ஷித்திருக்கின்றனை. க்ரியாபதம் அத்யாஹரித்துக் கொள்வது. ... ... ... ... (20)

आज्ञा ते सनिमित्तनित्यविषयः स्वर्गादिकाम्यद्विधिः सोऽनुज्ञा शठचित्तशास्त्रवशतोपायोऽभिचारश्रुतिः ।
सर्वीयस्य समस्तशासितुरहो ! श्रीरङ्गसर्वस्व ! ते रक्षाकूतनिवेदिनी श्रुतिरसौ त्वन्नित्यशास्तिस्ततः ॥२१॥

ஆஜ்ஞா தே ஸநிமித்தநித்யவிஷய: ஸ்வர்க்காதிகாம்யத்விதி:
ஸோநுஜ்ஞா சடசித்தசாஸ்த்ரவசதோபாயோபிசாரச்ருதி:,
ஸர்வீயஸ்ய ஸமஸ்தசாஸிதுரஹோ ஸ்ரீரங்கஸர்வஸ்வ ! தே
ரக்ஷாகூதநிவேதிநீ ச்ருதிரஸௌ த்வந்நித்யசாஸ்திஸ் தத:. (21)

| | | | |
|---|---|---|---|
| அஹோ ஸ்ரீரங்க ஸர்வஸ்வ ! | வாரீர் திருவரங்கச் செல்வனாரே ! | அபிசார ச்ருதி: | சத்ருக்களைக் கொல்வதற்கு ஸாதநமான கார்ய விசேஷத்தை விதிக்கிற வேதபாகமானது |
| ஸநிமித்த நித்ய விஷய: | நைமித்திக கருமங்களையும் நித்ய கருமங்களையும் பற்றின விதிகள் | சடசித்த சாஸ்த்ர வசதா உபாய: | வஞ்ச நெஞ்சினரையும் அடங்கினராக ஆக்குவதற்கான உபாயமாகும், |
| தே | தேவரீருடைய | தத: | ஆகையினால் |
| ஆஜ்ஞா | அதிக்ரமிக்க வொண்ணாத கட்டளையாம், | ஸர்வீயஸ்ய | ஸர்வலோக ஹிதரும் |
| ஸ: | அப்படிப்பட்ட [ப்ரஸித்தமான] | ஸமஸ்த சாஸிது: | ஸர்வநியாமகராயுமிருக்கிற |
| ஸ்வர்க்காதி காம்யத்விதி: | ஸ்வர்க்கம் முதலான பலன்களை விரும்புமவர்களைக் குறித்துப் பிறந்த விதியானது | தே | தேவரீருடைய |
| அநுஜ்ஞா | 'அபேக்ஷையுண்டாகில் அநுஷ்டிக்கலாம்' என்று அநுமதி பண்ணுகையாகிற அநுஜ்ஞையாகும் ; | ரக்ஷா ஆகூத நிவேதிநீ | ரக்ஷணப்பாரிப்பைத் தெரிவிக்கின்ற |
| | | அஸௌ ச்ருதி: | இந்த வேதமானது |
| | | த்வந் நித்ய சாஸ்தி: | தேவரீருடைய சாச்வதமான கட்டளையாம். |

* * *—கீழ்ச்லோகத்தில் "தத்தத்விதிரபி பவத்ப்ரேரணமிதி" என்று சாஸ்த்ர விதிகளெல்லாம் எம்பெருமானுடைய நியமந மென்னப்பட்டது. அப்படியாகில் சாஸ்த்ரங்களிற் காணும் விதிகளெல்லாம் ஆஸ்திகர்களாலே அவச்யம் அநுஷ்டிக்கப் பட்டே தீரவேணுமென்கிற நிர்ப்பந்தமுண்டோ? உண்டென்னில், ஜ்யோதிஷ்டோம யாகம் முதலானவற்றை ஒரு பரமைகாந்தியும் அநுஷ்டிக்கக்காணோமே ; அது ஏன்? அன்றியும் பிறரை உயிர்மாய்ப்பதற்கு ஸாதநமாக அபிசாரவிதிகளும் சாஸ்த்ரங்களிற் காணப்படுகின்றன ; இந்த விதிகளையும் எம்பெருமானே ப்ரவர்த்திப்பித்தானென்னில், அவனுடைய ஸர்வபூததயாளுத்வகுணத்திற்குக் கொத்தையாகாதோ? என்றிப்படி சில சங்கைகள் உதிக்கக்கூடுமாகையாலே இவற்றைப் பரிஹரித்துக்கொண்டு தத்வார்த்தங்களை வெளியிட்டருளுகிறாரிதில்.

சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள கருமங்கள் மூன்று வகுப்பாயிருக்கும்; நித்ய கருமம், நைமித்திககருமம், காம்யகருமம் என்றும். ஸந்த்யாவந்தநம் முதலிய நித்ய கருமங்களும் ச்ராத்தம் முதலிய நைமித்திககருமங்களும் அகரணேப்ரத்யவாயாவஹங்களாகையாலே ஆஜ்ஞாகர்மங்களெனப்படும். அரசன் ஒரு கட்டளையிட்டால் அதை ப்ரஜைகள் அவசியம் அநுஷ்டித்தே தீரவேணுமென்றும் தவறினால் தண்டனை ஏற்படு

மென்றும் உலகிற் காணும் ரீதி நித்யநைமித்திக கர்மங்களுக்கும் ஒக்குமாகையாலே அவை ஆஜ்ஞாகர்மங்களென்று கொண்டு நியமேந அநுஷ்டித்தேயாகவேணும். "स्वर्गकामो यजेत, भूतिकामो यजेत, पशुकामो यजेत, वृष्टिकामो यजेत, प्रजाकामो यजेत" என்றிங்ஙனேயுள்ள விதிகள் அந்தந்த அபேக்ஷையுள்ள அதிகாரிகளைக்குறித்துப் பிறந்தனவாதலால் அக்கருமங்கள் காம்யகருமங்களெனப்படும். பலகாமனையிருந்தால் அக்கருமங்களை யநுஷ்டிக்கலாம்; இல்லையாகில் தவிரலாம்; ஆகவே இது அநுஜ்ஞாகர்மமெனப்படும். ('நீ இதைச்செய்' என்று நிர்ப்பந்தமாக விதிப்பது ஆஜ்ஞை; 'செய்யவேணுமென்றிருந்தால் செய்' என்பது அநுஜ்ஞை.) அபிசாரகர்மங்களும் காம்யங்களாகையாலே அவையும் அநுஜ்ஞாகர்மங்களில் சேரும்.

ஸர்வபூததயாளுவான ஸர்வேச்வரன் ப்ராணிஹிம்ஸா ஹேதுவான அபிசாரகருமங்களுக்கு அநுமதிதாநம் பண்ணலாமோ என்கிற சங்கையைப் பரிஹரித்தருளுகிறார்-[சடசித்த சாஸ்தரவசதோபாயோபிசாரச்ருதி:] என்று. முதலிலே 'மாநம் ப்ரதிபவ காருணிகோ ததாதி' என்று எம்பெருமான் தன்னுடைய திருவருளடியாக சாஸ்த்ரப்ரதாநம் பண்ணினதாகவிறே சொல்லிற்று; அவ்விடத்தில்தானே 'சசः' என்றும் சொல்லுகையாலே ஸம்பந்தமடியாகப் பண்ணினதாகவுஞ் சொல்லிற்று இப்படி கருணையாலும் ஒழிக்கவொழியாத உறவினாலும் சாஸ்த்ரங்களை யளித்தானாகில் மோக்ஷஹேதுவான சாஸ்த்ரங்களையே காட்டாதே ஐஹிகபாரலௌகிகபோகஸாதநவிதாயகதயா பந்தஹேதுவான சாஸ்த்ரங்களையும் காட்டுவானேன்? என்று பலரும் ஆக்ஷேபிப்பதுண்டு; இதற்கு ஸமாதாநமென்னென்னில்; ப்ரஜையின் பக்கல் வாத்ஸல்யமுடையளான மாதாவானவள் மண்தின்ன ஆசைப்பட்ட குழந்தை முகங்கன்றுமல் முந்துற மண்ணைத் தின்னும்படி அநுமதிசெய்துவிட்டு, பின்னை அதற்கு மாற்றுமருந்து இடுமாபோலே "எவ்வுயிர்க்கும் தாயோன்" என்றும் "தாயிருக்கும் வண்ணமே" என்றும் சொல்லுகிறபடியே ஸகலாத்மாக்களளவிலும் மாதாவைப்போல் வத்ஸலனான ஸர்வேச்வரனும் சேதநருடைய ருசிக்கீடாக பந்தகங்களையும் தர்சிப்பித்து, பின்னை பந்தநிவர்த்தகஃபேக்ஷுமான வற்றையும் தர்சிப்பிக்கிறானென்றும் இதுதான் ஸம்பந்தமடியாகவருகிற வாத்ஸல்யத்தின் காரியமாகையாலே இத்தால் ஸம்பந்தக்கொத்தை வாராதென்றும் ஆசார்யர்கள் நிர்வஹிப்பர்கள்.

இப்படி வாத்ஸல்யத்தாலே செய்தானென்றாலும், சேதநர்களுடைய ருசிக்கீடாக பலஸாதநங்களை விதிக்கிற பந்தக சாஸ்த்ரத்தையும் தர்சிப்பித்தால் அவர்கள் ஸம்ஸரித்தே யொழிவதற்குக் காரணமாய்விடாதோ? மோசகசாஸ்த்ரமார்க்கமொன்றையே யன்றோ ப்ரவர்த்திப்பித்திருக்கவேண்டும் என்கிற சங்கை வலிதாகவே நிற்கும்; இதற்கு இங்கே அருளிச்செய்யும் ஸமாதாநமாவது—அபிசாரவிதியை ப்ரவர்த்திப்பித்ததும் க்ரமேண அவர்கள் ஈடேறுகைக்கு இட்டவழியே என்பதாம். இதுதன்னை விவரிப்போம்:—

தாமஸராய் அர்த்தார்ஜநத்துக்காகப் பரஹிம்ஸா சீலராய்த் திரிகிற நாஸ்திகரைக்குறித்து மோக்ஷத்தை விதித்தால் அவர்கட்கு அது ருசியாதாகையாலே அந்த பரஹிம்ஸாஸாதநமான அபிசார கருமத்தை "अभिचरन् यजेत" இத்யாதிகளாலே விதித்து, அவர்களும் அதையநுஷ்டித்துப் பலன் கைபுகுரப் பெறுகையாலே 'சாஸ்த்ரமுண்டு' என்கிற ஆஸ்திக்யத்தை யடையும்படியாகிறது. ஆஸ்திகனானபின்பு "ज्योतिष्टोमेन स्वर्गकामो यजेत" இத்யாதிகளாலே ஸ்வர்க்காதி புருஷார்த்த ஸாதநங்களை விதித்து அவ்வழியாலே ப்ரக்ருத்யாத்மவிவேகத்தை யுண்டாக்கும்படியாகிறது. இப்படி ப்ரக்ருத்யாத்மவிவேகம் பிறந்த பின்பு ஆத்மபோகத்துக்கு வழிகாட்டி அவ்வழியாலே ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியை உண்டாக்கும்படியாகிறது. அதற்குப் பிறகு பரமாத்மபோக வைலக்ஷண்யத்தையும் தத்ப்ராப்திஸாதநமான பக்தியையும் காட்டி

அவ்வழியாலே ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியை உண்டாக்கும்படியாகிறது. அதன் பிறகு உபாயாந்தர துஷ்கரத்வாதிகளாலே தளருமளவில் ஸ்வயத்ந நிவ்ருத்திரூபமான ப்ரபத்தியிலே மூட்டி, ஸ்வரூபயாதாத்ம்ய வேஷமான பாரதந்த்ர்யத்தை உண்டாக்கும் படியாகிறது. ஆக இப்படி க்ரமத்திலே ஈடேறுகைக்கு இட்டவழியாம். இவ்வழி யையே '**ஸ்வதந்த்ரவசீகரணம்**' என்று சுருக்கமருளிச் செய்து வைத்தார். சாஸ்த்ரத் தில், நம்பிக்கையுண்டாகி மேன்மேறபடிகளிலேறி உஜ்ஜீவித்துப்போவதற்கு முதற் படியாக அபிசாரவிதிகள் பிறந்திருக்கின்றன என்றபடி.

[ததஃ] நித்யநைமித்திக கர்மவிதிகள் ஆஜ்ஞாரூபமென்றும் ஸ்வர்க்காதிகாம்ய பலஸாதநவிதிகள் அநுஜ்ஞாரூபமென்றும் அபிசாரவிதிகள் சாஸ்த்ரவிச்வாஸத்தைப் பிறப்பித்து ஈடேற்றுவதற்கு இட்டவழியென்றும் நிரூபிக்கப்பட்டமையாலே என்கை. [ஸர்வீயஸ்யேத்யாதி.] ஸர்வஜநங்களுக்கும் ஹிதத்தையே நோக்குமவராயும் அவர் களைத் தகுந்தவாறு நியமிப்பவராயுமிருக்கின்ற தேவரீர் அவரவர்களுடைய ருசிக்குத் தக்கபடி சாஸ்த்ரவிதிகளை ப்ரவர்த்திப்பித்து எல்லாருடைய மநோரதங்களையும் நிறை வேற்றுவித்து எல்லாரையும் கைவிடாதே ரக்ஷித்தருள்வதில் நோக்குடையீர் என்னு மிடத்தைத் தெரிவிக்கின்ற வேதமானது தேவரீருடைய நித்யாஜ்ஞையென்னக் குறை யில்லை என்றதாயிற்று.

सर्वेभ्यो हितस्सर्वीय इति तद्धितान्तनिष्पत्तिः । 'तस्मै हितम्' इति सूत्रम् । शास्तिः—शासन-
कर्ता । . . . . . . . . . . . . . . . (21)

अत्रास्ते निधिरितिवत्पुमर्थभूते सिद्धार्था अपि गुणरूपवृत्तवादाः ।
रङ्गेश ! त्वयि सकलास्समन्वयन्ते नोपासाफलविधिभिर्विशेष एषाम् ॥२२॥

அத்ராஸ்தே நிதிரிதிவத் புமர்த்தபூதே ஸித்தார்த்தா அபி குணரூபவ்ருத்தவாதாஃ,
ரங்கேச ! த்வயி ஸகலாஸ் ஸமந்வயந்தே நோபாஸாபலவிதிபிர் விசேஷ ஏஷாம் (22)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கேச | வாரீர் திருவரங்க நாதரே ! | அத்ர நிதிஃ ஆஸ்தே இதி வத் | 'இங்கே நிதியிருக்கின்றது' என்று சொல்லுகிற ஸித்த வாக்யம்போலே |
| ஸகலாஃ | ஸமஸ்தமான | ஸமந்வயந்தே | நன்கு பொருந்துகின்றன ; |
| குணரூபவ்ருத்த வாதாஃ | (தேவரீருடைய) திருக்கல்யாண குணங்கள் திவ்யாத்ம ஸ்வ ரூபம் திவ்ய சரித்திரங்கள் ஆகிய இவற்றைச் சொல்லு கிற உபநிஷத்பாகங்கள் | ஏஷாம் | மேற்சொன்ன குணரூபவ்ருத்த வாதங்களுக்கு |
| ஸித்த அர்த்தாஃ அபி | (கார்யபரங்களன்றியே) ஸித்த பரங்களானாலும் | உபாஸா பல விதிபிஃ | உபாஸநத்தையும் பலத்தை யும் பிரதிபாதிக்கின்ற வாக் யங்களினால் |
| புமர்த்தபூதே த்வயி | புருஷார்த்த பூதராயிருக்கிற தேவரீரிடத்தில் | ந விசேஷஃ | ஒரு அதிசயமுமில்லை, |

† * * *—வேதங்களிலுள்ள வாக்கியங்கள் பலவகைப்பட்டிருக்கின்றன : அவை யெல்லாவற்றிற்கும் ப்ராமாண்யமில்லை யென்றும் சில வாக்யங்களுக்கே ப்ராமாண்ய முண்டென்றும் கொள்வார் பூர்வமீமாம்ஸகர் சிலருண்டாகையாலே அக் கொள்கையை மறுத்து ஸகல வைதிக வாக்யங்களுக்கும் துல்ய ப்ராமாண்யமே உள்ளதென்னு மிடத்தை இந்த ச்லோகத்தால் ஸ்தாபித்தருளுகிறார்.

கார்ய பர வாக்யங்களென்றும் ஸித்தபர வாக்யங்களென்றும் வாக்யங்கள் இரு வகைப்படும் ; 'அதைச் செய், இதைச்செய்' என்று காரியத்தை விதிக்கும்படியான வாக்யங்கள் கார்யபர வாக்கியங்களெனப்படும். அங்ஙனல்லாமல் 'அவன் அப்படிப் பட்டவன், இவன் இப்படிப்பட்டவன்' என்றாற்போலே உள்ள நிலைமையை உரைக்

கும்படியான வாக்யங்கள் ஸித்தபர வாக்யங்களெனப்படும். இவற்றுள் முக்தின கார்யபர வாக்யங்களுக்கே ப்ராமாண்யமுண்டென்பர் பூர்வதந்த்ரிகள். எனென்னில்; ஒரு பெரியவன் மற்றொரு சிறுவனை நோக்கி 'காம் ஆநய' [பசுவைக் கொண்டுவா] என்றால் அதைக்கேட்ட அவன் பசுவைக் கொண்டு வருகிறான்; பெரியவன் சொன்னதை யும் சிறியவன் செய்ததையும் கேட்டுங் கண்டு மிராநின்ற உதாஸீநனான ஒரு அவ்யுத் பந்நன், 'பெரியவர் இரண்டு பதங்களைச் சொன்னார்: அதைக்கேட்ட சிறுவன் பசுவைக் கொணர்ந்தான்; ஆகையாலே அவ்விருபதங்களுள் ஒரு பதத்திற்குப் பசுவும், மற்றொரு பதத்திற்குக் கொண்டுவரவேணுமென்கிற விதியும் பொருளாயிருக்கின்றது போலும்' என்று உணருகிறான். ஆனால், இன்ன பதத்திற்கு இன்னது அர்த்தமென்று பகுத் துணர்ந்திலன். மறுபடியும் அப் பெரியவன் "காம் பதாந, அச்வமாநய" [பசுவைக் கட்டிவிடு; குதிரையைக் கொண்டுவா] என்ன; அதைக்கேட்டு சிறுவன் அப்படியே பசுவைக் கட்டிவிட்டுக் குதிரையைக் கொணர்ந்தமைகண்ட இந்த அவ்யுத்பந்நன் அப் பெரியவர் முன்பு சொன்ன வாக்ய ஸந்நிவேசத்தையும் இப்போது சொன்ன வாக்ய ஸந்நிவேசத்தையும், இரண்டு ஸமயங்களிலும் சிறியவன் செய்த காரியங்களை யும் உற்றுநோக்கி இன்னின்ன பதங்களுக்கு இன்னின்னது பொருள் என்று பகுத் துணர வல்லவனாகிறான். ஆகவே இப்படிப்பட்ட கார்யபரவாக்யங்களுக்கே வ்யுத்பத் தியை உண்டாக்கத்தக்க ஸாமர்த்திய மிருப்பதனால் இவைபோல்வனவான கார்யபர வாக்யங்களே ப்ரமாணமாகும். இங்ஙனன்றிக்கே எப்போதும் ஸித்தமாகவேயிருக் கின்ற விஷயங்களைக் கூறும் வாக்யங்களினால் வ்யுத்பத்தி பிறக்க வழியில்லாமையாலே அவை அப்ரமாணமேயாகும்—என்கிறார்கள்.

இப்பக்ஷம் ஸ்ரீ பாஷ்யத்தில் விரிவாகக் கண்டிக்கப்பட்டிருக்கின்றது. பூர்வபக்ஷி உபபாதித்தபடியேதான் வ்யுத்பத்தி பிறக்குமென்ன வொண்ணாது. வ்ருத்த வ்யவ ஹாரந் தவிர வேறிடங்களிலும் கோசங்களாலும் ஆப்த வாக்யங்களாலும் மாதா பித்ரு ப்ரப்ருதிகளின் சிக்ஷையாலும் ஆகவிப்படி பலவகைகளாலே வ்யுத்பத்தி பிறக்கக் காண்கிறோமாகையாலே கார்யபர வாக்யங்கள் போலே ஸித்தபர வாக்யங்களும் வ்யுத் பாதகங்களாய்ப் ப்ரமாணமாகக் குறையில்லை. இப்பூர்வபக்ஷ ஸித்தாந்தங்களை நெஞ்சிற் பதிய வைத்துக்கொண்டு இந்தச்லோகத்தின் கருத்தை உய்த்துணரவேணும்.

[அத்ராஸ்தே நிதிரிதிவதித்யாதி]. வேதத்தில், "ध्यायीत, उपासीत, युञ्जीत" என்றாற்போலே விதிபரங்களாகவும், "नाप्सु मूत्रपुरीषं कुर्यात्, न निष्ठीवेत्, न विवसन स्नायात्" என்றாற்போலே நிஷேதபரங்களாகவுமுள்ள வாக்யங்களே க்ரமேண ப்ரவ்ருத்திக்கும் நிவ்ருத்திக்கும் உபயுக்தங்களாகுமாகையாலே இப்படிப்பட்ட வாக்யங்களே ப்ரமாண மாகும்; இங்ஙனன்றிக்கே எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குண விபூதி சரித்ராதி களைக் கூறுகின்ற வேத வாக்யங்கள் கார்ய பரங்களன்றிக்கே ஸித்தபரங்களாகை யாலே அவை ப்ரமாணமாகமாட்டாவேயென்ன; ஒரு குறையுமின்றிக்கே ப்ரமாணமாக வற்று என்கிறார்.

[குணரூபவ்ருத்தவாதாஃ ஸித்தார்த்தா அபி] ஞானம் ஆநந்தம் முதலிய திருக் கல்யாண குணங்களையும் திவ்யமங்கள விக்ரஹ வைலக்ஷண்யத்தையும் ஸ்ருஷ்டி முத லிய வ்யாபாரங்களையும் பற்றிப்பேசுகின்ற வாக்யங்கள் ஸாத்யபரங்களன்றிக்கே ஸித்தபரங்களாயிருந்தபோதிலும். [புமர்த்தபூதே த்வயி அத்ராஸ்தே நிதிரிதிவத் ஸமந்வயந்தே] 'அத்ர நிதிராஸ்தே' [இவ்விடத்தில் நிதியுண்டு] 'புத்ரஸ்தே ஜாதஃ' [உனக்குப் பிள்ளை பிறந்தது.] 'பிதா தே ஸுகமாஸ்தே' [உன் தந்தை இனிது வாழ்கிறார்] இத்யாதிகளான ஸ்வரூபபரவாக்யங்களானவை புருஷார்த்தாவபோத கங்களாய்க் கொண்டு கார்யபர வாக்யங்கள்போலவே ப்ரமாணமாயிருப்போலே.
"सत्यं ज्ञानमनन्तं ब्रह्म, यः सर्वज्ञः सर्ववित्, परास्य शक्तिर्विविधैव श्रूयते, य एषोऽन्तरादित्ये हिरण्मयः

पुरुषो दृश्यते, तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी, अजायमानो बहुधा विजायते'' இத்யாதிகளான பல்லாயிரம் ஸ்வரூபபர வாக்யங்களும் "ज्योतिष्टोमेन स्वर्गकामो यजेत" இத்யாதிகளான கார்ய பரவாக்யங்கள்போலே ப்ரமாணங்களாகக் குறையில்லாமையாலே இவை ஸ்வத: புருஷார்த்தபூதரான தேவரீரிடத்தில் தாராளமாக அந்வயிக்கின்றன.

[ஏஷாம் உபாஸாபலவிதிபிர் நவிசேஷ:]. एषाम्—गुणरूपवृत्तवादानामित्यर्थः. குணம் ரூபம் சேஷ்டிதம் முதலானவற்றை ப்ரதிபாதிக்கின்ற ஸித்தபரவாக்யங்களுக்கு: "श्रोतव्यो मन्तव्यो द्रष्टव्यो निदिध्यासितव्यः, ब्रह्मविदाप्नोति परम्'' இத்யாதிகளான உபாஸநவிதாயக பலபோதகவாக்யங்களாலே அதிசயமுண்டாவதில்லை யென்றபடி. இதன் கருத்தை விவரிப்போம் :—கர்ம காண்டத்தில் "वायव्यं श्वेतमालभेत भूतिकामो वायुर्वै क्षेपिष्ठा देवता'' என்று ஓதப்பட்டுள்ளது; இதில் "वायव्यं श्वेतमालभेत भूतिकामः'' என்கிற விதிவாக்யமானது ப்ரவர்த்தகபரமாகையாலே ஸ்வத:ப்ரமாண மென்றும் "वायुर्वै क्षेपिष्ठा देवता'' என்கிற அர்த்தவாத வாக்யமானது ப்ரவ்ருத்தி நிவ்ருத்திபோதகமல்லாவிடினும் விதி வாக்ய சேஷமாய்—விதிவாக்யத்தோடு ஏகவாக்யத்வத்தை அடைந்ததாய்க் கொண்டு ப்ரமாணமாகிறது என்றும் நிர்வஹிக்கிறுப்போலே; இங்கும் குணரூபசேஷ்டாபர வாக்யங்கள் ஸ்வத:ப்ரமாணமல்லாவிடினும் "श्रोतव्यो मन्तव्यो द्रष्टव्यो निदिध्यासितव्यः, ब्रह्मविदाप्नोति परम्'' இத்யாதிகளான உபாஸநவிதாயகபலபோதகவாக்யங்களோடு ஏகவாக்யத்வத்தை [சேஷத்வத்தை] அடைந்தனவாய்க் கொண்டு ப்ராமாண்யமாகிற அதிசயத்தைப் பெறுகின்றன என்று நிர்வஹிக்கவேண்டிய அருமையுமில்லை; கீழ்ச்சொன்ன விதமாக ஸ்வத:ப்ராமாண்யமே நிர்வஹிக்கக் குறையில்லை யென்றபடி.

இவ்விஷயம் ஸ்ரீபாஷ்யத்தில் ஜிஜ்ஞாஸாதிகரணத்தின் முடிவிலும் ஸமந்வயாதிகரணத்திலும் இரண்டுபடியாக அருளிச்செய்யப்பட்டுள்ளது; இந்த ச்லோகம் பெரும்பாலும் ஸமந்வயாதிகரண பாஷ்யப்ரக்ரியையை அநுஸரித்ததென்னுமிடம் ச்லோகத்திலேயே முதல் பாதத்தாலும் 'ஸமந்வயந்தே' என்கிற (तत्तु समन्वयात् என்கிற ஸூத்ர ஸ்மாரக) க்ரியாபத ப்ரயோக ஸ்வாரஸ்யத்தாலும் ஸூசிதம். "समन्वयः—सम्यगन्वयः; पुरुषार्थतया अन्वय इत्यर्थः। परमपुरुषार्थभूतस्य अनवधिकातिशयानन्दस्वरूपस्य ब्रह्मणोऽभिधेयतया अन्वयात् तत्—शास्त्रप्रमाणकत्वं सिद्ध्यत्येवेत्यर्थः।" என்று தொடங்கியுள்ள ஸ்ரீபாஷ்யஸூக்திகள் முழுதும் இந்த ச்லோகத்தின் ஸுஸ்பஷ்ட தாத்பர்யஜ்ஞாநத்திற்கு மிகவும் அநுகூலங்கள். "ब्रह्मस्वरूपतद्विशेषणानां दुःखासंभिन्नदेशविशेषरूपस्वर्गादिवत् रात्रिसत्रप्रतिष्ठादिवत् अपगोरण-शतयातनासाध्यसाधनभाववच्च कार्योपयोगितयैव सिद्धेः।" இத்யாதி ஜிஜ்ஞாஸாதிகரண பாஷ்ய ஸ்ரீஸூக்திகளும் குறிக்கொள்ளத்தக்கன.

ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளை போதிக்கும்படியான வாக்யங்களுக்கே ப்ராமாண்யமுண்டு என்றதைக்கண்டிப்பது மாத்திரமே ஜிஜ்ஞாஸாதிகரண பாஷ்ய விவக்ஷிதம். ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி போதகமாயிருந்தாலும் புருஷார்த்தாந்வயபோதமுண்டாகாத வளவில் அந்த வாக்யம் ப்ரயோஜநபர்யவஸாயியாக மாட்டாமையாலே, ப்ரயோஜந பர்யவஸாயிவாக்யத்திற்கே ப்ராமாண்ய முண்டென்று கொள்ளவேணுமென்றும், பரப்ரஹ்மஸ்வரூப ரூபகுண விபூதிசேஷ்டித ப்ரதிபாதக வேதாந்த வாக்யராசிகள் அநவதிகாதிசயாநந்த ஜநகங்களாய்க் கொண்டு பரமப்ரயோஜந பர்யவஸாயிகளாகையாலே

'தவ வேச்மநி விஹரஸ்தி' இத்யாதி வாக்யங்கள் போலே அவையும் ப்ரமாணங்களே யென்று ஸமர்த்திப்பதில் நோக்குடையது ஸமந்வயாதிகரண ஸ்ரீபாஷ்யம்.

[உபாஸாபலவிதிபி:] உபாஸநத்துக்கு விதி உண்டேயொழிய பலத்துக்கு எங்கும் விதி கிடையாதே; அப்படியிருக்க இங்கு 'உபாஸாபலவிதிபி:' என்று எங்ஙனே அருளிச் செய்யலாமென்று சிலர் சங்கிக்கக்கூடும். பலம் விதிவிஷயமன்றென்பது வாஸ்தவமே. ஸாதநவிதாயகவாக்யத்திலேயே பலச்ரவணமுமுண்டாகையாலே உபாஸநாம்சே விதியையும் பலாம்சே ப்ரதிபாதநமாத்ரத்தையும் விவக்ஷித்து 'உபாஸாபல விதிபி:' என்றருளிச் செய்தாரென்றுணர்க. "ब्रह्मविदाप्नोति परम्" என்ற ஒரே வாக்யத்தில் ப்ரஹ்மவேதநமாகிற ஸாதநத்தின் ப்ரதிபாதநமும் ததவாப்தியாகிற பலத்தின் ப்ரதிபாதநமு மிருக்கிறபடி காண்க.

उपासाफलविधिभि: -- फलप्रतिपादनविशिष्टोपासनविधायकवाक्यैरित्यर्थ:—என்னலாம்.

நான்காவது பாதத்திற்கு வேறுவகையாகவும் சிலர் பொருள் நிர்வஹிப்பர்கள்;- குணரூபவ்ருத்தவாதங்களுக்கு உபாஸாபலவிதிகளோடே வைலக்ஷண்யமில்லை; அதாவது—உபாஸநவிதாயகவாக்யங்களும் பலப்ரதிபாதகவாக்யங்களும் எப்படி அந்யசேஷமாகாதே ஸ்வத:ப்ரமாணங்களாகின்றனவோ, அப்படியே குணரூபவ்ருத்தவாதங்களும் ஸ்வத:ப்ரமாணமாகின்றன வென்கை. 'உபாஸாபலவிதிப்ய:' என்று பஞ்சம்யந்தமாக இருந்தால் இப்பொருள் ஸ்வரஸ ப்ரதீதமாகும்.

ஆக இந்த ச்லோகத்தால்—எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுணவிபூதி சேஷ்டிதங்களைப் பேசுகின்ற உபநிஷத்வாக்யங்கள் ஸித்தபரங்களாயிருந்தாலும் பரமப்ரயோஜநபூதனை எம்பெருமானிடத்தில் அந்வயிக்கையாலே ததுபாஸநவிதாயக வாக்யங்கள் போலே இவையும் ஸ்வத:ப்ரமாணமாகக் குறையில்லை யென்றதாயிற்று. (௨௨)

देहो देहिनि कारणे विकृतयो जातिर्गुणा: कर्म च द्रव्ये निष्ठितरूपबुद्धिवचनास्तादात्म्यात् तथेदं जगत् ।
विश्वं त्वय्यभिमन्यसे जगदिषे तेनाद्वितीयस्तत: मायोपाधिविकारसङ्करकथा का नाम रङ्गेश्वर ! ॥२३॥

தேஹோ தேஹிநி காரணே விக்ருதயோ ஜாதிர் குணா: கர்ம ச
த்ரவ்யே நிஷ்டிதரூபபுத்திவசநாஸ் தாத்ஸ்த்யாத் ததேதம் ஜகத்,
விச்வம் த்வய்யபிமந்யஸே ஜகதிஷே தேநாத்விதீயஸ் தத:
மாயோபாதிவிகாரஸங்கரகதா கா நாம ரங்கேச்வர ! (23)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கேச்வர! | வாரீர் திருவரங்கநாதரே!, | ததா | அவ்விதமாகவே |
| தேஹ: | சரீரமானது | இதம் | இந்த |
| தேஹிநி | ஆத்மாவினிடத்திலும், | விச்வம் ஜகத் | எல்லாவுலகத்தையும் |
| விக்ருதய: | (கார்யரூபமான) விகாரங்களானவை | த்வயி | தேவரீரிடத்தில் |
| காரணே | தங்கள் காரணவஸ்துவினிடத்திலும், | அபிமந்யஸே | (நிஷ்டிதரூப புத்திவசநமாம்படி) கல்பித்திருக்கிறீர்; |
| ஜாதி: குணா: கர்ம ச | ஜாதியும் குணமும் கருமமும் | தேந | ஆகையினாலே |
| த்ரவ்யே | த்ரவ்யத்தினிடத்திலும் | அத்விதீய: | அத்விதீயராக |
| தாத்ஸ்த்யாத் | ஒருபோதும் விட்டு நீங்காதிருக்கும் விசேஷணமென்கிற காரணத்தினால் | ஜகதிஷே | சொல்லப்பட்டீர்; |
| நிஷ்டிதரூப புத்திவசநா: | ரூபத்தின் அநுபவம் வ்யவஹாரம் என்றுமிவை நிலைத்திருக்கப்பெற்றுள்ளன; | தத: | ஆதலால் |
| | | மாயா உபாதி விகார ஸங்கர கதா | மாயை, உபாதி, விகாரம் என்றுமிவற்றின் ஸம்பந்தப்பேச்சானது |
| | | கா நாம | ஏது? (அது பிசகு என்றபடி.) |

* * *—ஸித்தபரவாக்யங்களுக்கும் ப்ராமாண்ய முண்டென்று கீழ்ச்லோகத்தில்
ஸ்தாபித்தருளினாராய், இதில் அத்விதீயச்ருதிக்கு அர்த்தநிர்வாஹ மருளுகிறார்.

சாந்தோக்ய உபநிஷத்தில் (6—2—1.) “सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम्”
என்று ஓதப்பட்டுள்ளது. ப்ரஹ்மம் ஒன்றே ஸத்யமானதென்றும் மற்றெல்லாப்
பொருளும் பொய்யென்றும் கூறுகின்ற அத்வைதவாதிகள் இந்த வேதவாக்யத்தை
முக்கிய ப்ரமாணமாகக் காட்டுவர்கள். இதில் ‘அத்விதீயம்’ என்ற ஒருபதம் முக்கிய
மானதாகக் கொள்ளப்படும். ப்ரஹ்மம் ஒன்றே உளது, மற்றொன்றும் இல்லை
யென்பதாக இப்பதத்தால் விளங்குகின்றதென்பர் அத்வைதிகள். ‘ப்ரஹ்மமும் ஸத்
யம், மற்றெல்லாப் பொருளும் ஸத்யமே’ எனக் கொள்ளும் விசிஷ்டாத்வைதிகளும்
மற்றவர்களும் இதற்கு என்ன சொல்லுகிறார்கள்? என்பதை இங்கு நாம் சுருங்கச்
சொல்வோம் ;—

‘அத்விதீயம்’ என்கிற பதத்திற்கு ஸம்ஸ்க்ருத வியாகரண சாஸ்த்ரத்தை
யொட்டி இரண்டுவிதமாக வ்யுத்பத்தி கூறலாம் ; ந த்விதீயம், அத்விதீயம்’ என்று
விக்ரஹம் செய்தால் தத்புருஷஸமாஸமாகும். ‘ந வித்யதே த்விதீயம் யஸ்ய, (அல்லது)
யஸ்மிந்’ என்று விக்ரஹம் செய்தால் பஹுவ்ரீஹிஸமாஸமாம். இவ்விரண்டு வழியில்
நிஷ்பந்நமாகின்ற பதத்தால் ‘ப்ரஹ்மம் ஒன்றே உளது, மற்றொன்றுமில்லை’ என்ற
பொருள் கிடைக்கமாட்டாது. இங்கு அத்விதீயபதம் ப்ரஹ்மவிசேஷணமா யிருக்கின்
றது. ஆகவே பொருள் பொருந்தச் சொல்லவேணும். அத்விதீயபதத்தின் முதலி
லுள்ள நஞ்ஞுக்கு இங்கு மூவகையான பொருள் கூறலாம்; அவையாவன—வேறானது,
ஒப்பானது, மாறானது, என்பனவாம்: “तत्सादृश्यमभावश्च तदन्यत्वं तदल्पता । अप्राशस्त्यं
विरोधश्च नञर्थाः षट् प्रकीर्तिताः ॥” என்பர் வையாகரணர். அத்விதீயம்—இரண்டாவது
பொருளில் வேறானது, இரண்டாவது பொருளுக்கு ஒப்பானது, இரண்டாவது பொரு
ளுக்கு மாறானது என்பதாக அர்த்தமாகும். இம்மூன்று விதமான அர்த்தத்திலும்
ப்ரஹ்மந் தவிர வேறொன்றுமில்லை யென்று ஏற்படமாட்டாது. முதல் அர்த்தத்தில்
ப்ரஹ்மம் இரண்டாவது பொருளைக்காட்டிலும் வேறானது என்றதாகும். அப்பொழுது
இரண்டாவது பொருள் ஒன்று உண்டென்றும் ப்ரஹ்மம் அதனில் வேறுபட்டதென்றும்
தோன்றுமே யொழிய, ப்ரஹ்மந்தவிர வேறொன்றுமே கிடையாதென்று தோற்ற
மாட்டாது. இரண்டாவது அர்த்தத்தில், ப்ரஹ்மம் இரண்டாவது பொருளோடு
ஒக்குமென்றால் அப்போதும் இரண்டாவது பொருள் இல்லை யென்று ஏற்படமாட்
டாது. உபமாநவஸ்துவும் உபமேய வஸ்துவும் தனித்தனி இருந்தாலொழிய உவமை
கூறமுடியாது. முகம் சந்திரனைப் போன்றது என்றால் உபமாநமான சந்திரனும்
உபமேயமான முகமும் வெவ்வேறு வஸ்துவென்று ஏற்பட்டே தீருமன்றோ. இனி,
மூன்றாவது அர்த்தத்தில், ப்ரஹ்மம் இரண்டாவது பொருளுக்கு மாறானது [விருத்த
மானது] என்று சொல்லப்படும்போதும் இரண்டாவது பொருள் ஒன்று இருந்தே
யாகவேணும். ஆகவே இவ்வர்த்தத்திலும் இரண்டாவது பொருள் இல்லையென்
றேற்படாது. ஆக இம்மூன்றுவிதமான அர்த்தங்களிலும் இரண்டாவது பொருளின்
உண்மை ஏற்படுமேயல்லது இல்லாமை ஏற்படவழியேயில்லை.

இனி நஞ்ஞுக்கு அபாவம் அர்த்தமென்று கொள்ளப்பார்த்தால் அத்விதீய
மென்பதற்கு இரண்டாவது பொருளில்லாமை என்று அர்த்தமாகும். அப்போது
அத்விதீய மென்பது விசேஷணபதமாகமாட்டாது. விசேஷ்யபதம் வேறாகி இது
விசேஷணமாத்ரமாயிருக்கையாலே இங்கு அபாவத்தை அர்த்தமாகக் கூறுவது
பொருந்தாது.

இனி, தத்புருஷஸமாஸத்தைவிட்டு பஹுவ்ரீஹிஸமாஸத்தை வைத்துக்கொண்
டாலும் ப்ரஹ்மந்தவிர வேறொன்றுமில்லை யென்று ஏற்படவழியில்லை. ‘நாஸ்தி த்வி

தீயம் யஸ்ய தத்' என்று பஹுவ்ரீஹி செய்தால் ப்ரஹ்மத்தோடு ஸம்பந்த முள்ள இரண்டாவது வஸ்துவில்லையென்று ஏற்பட்டாலும் வேறு வஸ்துவே இல்லை யென்றேற்பட மாட்டாது.

" सत्यं ज्ञानमनन्तं ब्रह्म " என்று வேதமானது ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் கூறுவதால் அந்த லக்ஷணம் ப்ரஹ்மத்தோடு ஸம்பந்த முடையதாயிருக்கவேணும். அந்த லக்ஷணத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் ஸம்பந்தமேயில்லையானால் அது லக்ஷணமேயாக மாட்டாது. அந்த லக்ஷணத்திற்கு ப்ரஹ்ம ஸம்பந்தமுடைய இரண்டாவது பொருள் இல்லை யென்று காட்டக்கூடாது. 'ந த்விதீயம் யஸ்மிந் தத்' என்று பஹுவ்ரீஹி செய்தால் ப்ரஹ்மத்தில் இரண்டாவது பொருள் இல்லை என்றதாகும். 'இங்குப் பானை யில்லை' என்றால் இங்கு என்று குறிப்பிடும் ஓரிடத்தில் பானை யில்லையென்று ஏற்படுமே யன்றி எங்குமே யில்லை யென்பதாக ஏற்படாது. ஒரு வஸ்துவை இல்லை யென்று நிஷேதிக்கும்போது அந்த வஸ்து எங்காவது ஓரிடத்தில் இருந்தாகவேண்டும். 'முயற் கொம்பு இல்லை' 'மலடி மகன் இல்லை' என்று நாம் சொல்லுவதிலும் முயல் இல்லை யென்றாவது கொம்பு இல்லை யென்றாவது, மலடி இல்லை யென்றாவது மகன் இல்லை யென்றாவது ஏற்படமாட்டாது. முயலுக்கும் கொம்புக்கும், மலடிக்கும் மகனுக்கும் ஸம்பந்தமில்லை என்பதாக ஏற்படும். எதை இல்லை யென்கிறோமோ அது எங்காவது ஓரிடத்தில் ப்ரஸித்தமாயிருக்கவேண்டும். ஆகவே, 'ப்ரஹ்மத்தில் இரண்டாவது பொருள் இல்லை' என்று சொன்னால் அது எங்குமே யில்லையென்று ஏற்பட வழி யில்லை. ப்ரஹ்மத்தில் இல்லை யென்றால் மற்றோரிடத்தில் இருக்கிறதென்று ஒப்புக் கொண்டதாகவே ஆகும்.

ப்ரஹ்மம் இரண்டாவதல்ல—என்று சொல்வதானால் அது முதலதோ மூன்றாவதோ என்று அபிப்ராய மேற்படுமேயல்லது ப்ரஹ்மம் தவிர மற்றொன்றுமேயில்லை யென்பதாக ஏற்படவே மாட்டாது.

ஆனால் 'அத்விதீயம் ப்ரஹ்ம' என்பதற்குப் பொருளென்? என்று கேட்கலாம். கேண்மின்; சோளமஹாராஜன் உலகத்தில் அத்விதீயனாயிருக்கிறானென்றால் அவனுக்கு நிகரான வேறொருவரில்லை என்று பொருள் கொள்வதுபோல் இங்கும் ப்ரஹ்மம் அத்விதீயமென்றால் ப்ரஹ்மத்திற்கு நிகரானது மற்றொன்றில்லை என்றே பொருள் கொள்ள வேணும். 'சோளராஜன் அத்விதீயன்' என்றால் அவனுக்கு மக்களில்லை, மனைவியில்லை, மனையில்லை, உடுக்கத் துணியில்லை என்று அர்த்தமாகுமோ? அதுவே அர்த்தமானால் அந்த வாக்கியம் சோழ ராஜனைப் பழிப்பதாகுமே யொழியப் புகழ்வதாகுமோ? அத்விதீய சோளராஜன் என்பது புகழ்ச்சொல்லேயன்றிப் பழிச்சொல்லன்று. அதுபோல் இங்கும் அத்விதீயம் ப்ரஹ்ம என்றால் ப்ரஹ்மத்துக்கு ஸமானமான வேறொரு வஸ்துவில்லையென்று அர்த்தமே யொழிய ப்ரஹ்மத்துக்குக் குணமில்லை, விபூதியில்லை, நித்ய தாஸர்களான ஜீவர்களில்லை, உலகமில்லை என்று அர்த்தமாகமாட்டாது. வேதம் முதலிய ப்ரமாணங்களினால் ஸித்தமான ஸகலஜகத்துக்களும் ஜீவாத்மாக்களும் அனந்த குணங்களும் இந்த அத்விதீயம் என்ற சொல்லால் இல்லைசெய்யப்படாது. ப்ரஹ்மத்துக்கு அநந்த குணங்களும் உபயவிபூதியும் அநந்த ஜீவராசிகளும் உண்டென்பது சாஸ்திர ஸித்தம். (न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते) என்கிற வேத வாக்யத்திற்குப் பொருந்தியதே இவ்வர்த்தம். *पादोऽस्य विश्वा भूतानि, त्रिपादस्यामृतं दिवि என்கிற ச்ருதியானது ஸர்வ பூதங்களையும் ஈச்வரனுடைய விபூதியின் ஏகதேசமாகச் சொல்லுகிறது. இப்படி பல ச்ருதி ஸ்ம்ருதி புராணாதிகளால் ஸித்தமாகும் குணங்கள் விபூதிகள் முதலியவற்றை மறுக்காமலும் உலக வியவஹாரத்தை யொட்டியும் அத்விதீயச்ருதிக்கு அர்த்தம் செய்வதில் எவ்விதமான பாதகமுமில்லை. ப்ரஹ்மத்துக்கு ஒப்பான வேறொரு பொருளில்லை யென்பதே அதன் அர்த்தமாகும். இதைவிட்டு, ப்ரஹ்மம் ஒன்றே ஸத்யம், மற்றவை

பெல்லாம்-பொய் என்பதாக ஓர் ஸித்தாந்தத்தை அமைத்துக்கொண்டு அதற்கு உப பலமாக இந்த ச்ருதியை இழுப்பதென்றால பொருத்தமுடையதாக இராது என்பதே உலகத்தை ஸத்யமாகக் கொள்ளும் நம்முதலிகளின திருவுள்ளம்.

ஆக, அத்விதீயச்ருதியை நிர்வஹித்த கட்டளை ஸுகுமாரமதிகளுக்கு எளிதில் க்ரஹிக்கக்கூடியதாயிது. சிறிது புத்தி பரிச்ரமத்தை ஸஹிக்கவல்லவர்களுக்கு நிர்வஹிக்க வேண்டிய கட்டளை இந்தச்லோகத்தில் அருளிச்செய்யப்படுகிறது.

[தேஹோ தேஹிநீத்யாதி] தேஹ: தேஹிநி நிஷ்டிதரூபபுத்தி வசந: தாத்ஸ்த்யாத்; விக்ருதய: காரணே நிஷ்டித ரூபபுத்தி வசநா:, தாத்ஸ்த்யாத்; ஜாதிகுணகர்மாணி த்ரவ்யே நிஷ்டிதரூபபுத்தி வசநாநி, தாத்ஸ்த்யாத்—என்று அந்வயித்துக் கொள்க. तस्मिन् तिष्ठतीति तत्स्थम्; तत्स्थस्य भाव: तात्स्थ्यम्; तस्मात्। அதில் இருப்பதனாலே என்றபடி. बुद्धिश्च वचनं च बुद्धिवचने; रूपस्य बुद्धिवचने—रूपबुद्धिवचने। (रूपविषयकप्रतीतिव्यवहाराविलर्थ) निष्ठिते रूपबुद्धिवचने यस्य स:—निष्ठितरूपबुद्धिवचन:।

[தேஹ: தேஹிநி நிஷ்டிதரூபபுத்திவசந: (குத:?) தாத்ஸ்த்யாத்.] தேவமநுஷ்யாதி சரீரமானது அந்த சரீர விசிஷ்டனான ஆத்மாவினிடத்தில் அபிந்நத்வேந ப்ரதீதி வ்யவஹார விஷயமாயிருக்கின்றது; ஏன்? அப்ருதக்ஸித்த விசேஷணமாகையினாலே. 'தேவோஹம், மநுஷ்யோஹம்' என்றிறே ப்ரதீதியும் வ்யவஹாரமும் உண்டாயிருப்பது. தேஹவாசியான தேவமநுஷ்யாதி சப்தங்களுக்கும் ஆத்மவாசியான அஹம் சப்தத்திற்கும் ஸாமாநாதிகரண்யம் காணப்படாநின்றது; இது எங்ஙனே? [தாத்ஸ்த்யாத்] ஒன்றை ஒன்றுவிட்டுப் பிரியாத விசேஷண விசேஷ்யங்களுக்கு அபிந்நத்வேந ப்ரதீதிவ்யவஹாரங்கள் கூடுமிறே.

[காரணே விக்ருதய:] விக்ருதியாவது விகாரம்; அதாவது—கார்யபூதகடபடாதிகள். அவை ஸ்வகாரண பூதமான மண், நூல் முதலியவற்றில் நிஷ்டிதரூபபுத்திவசநங்களாயுள்ளன; (அதாவது) 'मृत् अयं घट:' என்றும் 'तन्तु: अयं पट:' என்றும் கார்ய காரணங்களுக்கு அபிந்நத்வேந ப்ரதீதிவ்யவஹாரங்களுண்டாகின்றன வென்கை. இதற்கும் காரணமென்னென்னில்; [தாத்ஸ்த்யாத்.]

[ஜாதி: குண: கர்ம ச த்ரவ்யே.] கடத்வம், படத்வம், கோத்வம் என்றாற் போலே சொல்லப்படுகிற ஜாதியென்ன, கருமை வெண்மை செம்மை முதலான குணங்களென்ன, போதல் வருதல் நிற்றல் இருத்தல் கிடத்தல் முதலான கருமங்களென்ன ஆகிய இவை கடபடாதிரூபத்ரவ்யங்களில் நிஷ்டிதரூபபுத்திவசநங்களாயுள்ளன. (அதாவது) अयं गौ: शुक्ल: पट:, रथो गच्छति, என்றாற்போலுள்ள வ்யவஹாரங்களை விவக்ஷித்தபடி. [ததா] இப்படி த்ருஷ்டாந்தமுகத்தால் சிக்ஷித்ததை தார்ஷ்டாந்திகத்திலே உபஸம்ஹரித்துக் காட்டுகிறபடி. தேஹத்துக்கும் தேஹிக்கும், கார்யத்திற்கும் காரணத்துக்கும், ஜாதிகுண கர்மங்களுக்கும் த்ரவ்யத்துக்கும் அப்ருதக்ஸித்தி நிபந்தநமாக ஐக்ய நிர்தேசம் கூடுகிறாப்போலே இந்த ஜகத்தோடு தேவரீரோடு உண்டான அத்விதீயத்வவாதமும் தாத்ஸ்த்யாதேவ ஹேதோ: கூடுமென்று அதிதேசித்தாராயிற்று.

[இதம் விச்வம் ஜகத் த்வயி அபிமந்யஸே] கண்ணில் காண்கிற ஸகல ஜகத்தையும் தேவரீரிடத்தில் ப்ரதிஷ்டிதமாக ஸங்கல்பியாநின்றீர். [தேந] இந்த ஜகத்தினுடைய தேஹமாய் தேவரீர் தேஹியாய், இவையுடைய கார்யமாய் தேவரீர் காரணமாய், இவையுடைய ஜாதிகுண கர்மங்களோபாதியாய் தேவரீர் த்ரவ்யமாய் ஆகவிப்படியிருக்கையாலே யென்கை. * यस्यात्मा शरीरं यस्य पृथिवी शरीरम् இத்யாதியால் சிதசித்துக்கள் பகவானுக்கு

வச்சரீரமென்னுமிடம் விளங்கிற்று. सदेव सोम्येदमग्र आसीत् एकमेवाद्वितीयम् இத்யாதியால் விபாகாநர்ஹ ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்ட ப்ரஹ்மத்திற்கு காரணத்வம் விளங்கிற்று. एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि द्यावापृथिव्यौ विधृते तिष्ठत: இத்யாதியால் ஜகத்தானது ஜாதிகுண கர்மதுல்யயோகக்ஷேமமென்னுமிடம் விளங்கிற்று. तदनुप्रविश्य, सच्च त्यच्चाभवत् । विश्वमेवेदं पुरुषस्तद्विश्वमुपजीवति இத்யாதியால் தாதஸ்த்யமேவ तात्स्थ्यमेव ஸாமாநாதிகரண்ய நிபந்தநம் என்னுமிடமும் அறிவிக்கப்பட்டதாயிற்று.

[தேந அத்விதீயோ ஜகதிஷே] கீழ்ச்சொன்னபடியே சிதசிதந்தராத்மத்வ, தத்காரணத்வ, ததாதாரத்வங்களாலே அநுப்ரவேசபூர்வகமாக ஸ்வபர்யந்தபர்யவஸித நாமரூப வ்யாகரணப்ரவீண புருஷாந்தரரஹிதன் என்பதே அத்விதீய சப்தார்த்தமென்று நிர்வஹித்ததாயிற்று.

[மாயோபாதீத்யாதி] நிர்விசேஷ சிந்மாத்ரமான ப்ரஹ்மமொன்றே மாயாபர பர்யாயமான அவித்யையினாலே ஸ்வகத-நாநாத்வத்தைக் காண்கிறதென்று சங்கரமதம், அந்தஃகரணாத்யுபாதிபேதத்தாலே பிந்நமாகா நின்றதென்று பாஸ்கரமதம். ப்ரஹ்மமே சிதசித்ரூபேண பரிணமிக்கிறதென்று யாதவப்ரகாசமதம். இப்படி அவரவர்கள் மாயோபாதிவிகாரங்களைக் கல்பிப்பதானது அத்விதீயச்ருதிநிர்வாஹார்த்தமேயிறே; இவையொன்றும் கொள்ளாமல்தானே அத்விதீயச்ருதி எளிதாக நிர்வஹிக்கப்படுதலால் [மாயோபாதிவிகாரஸங்கரகதா கா நாம] என்கிறார். ... ... (23)

स्थित्युत्पत्तिप्रवृत्तिग्रसननियमनव्यापनैरात्मनस्ते शेषोऽशेष: प्रपञ्चो वपुरिति भवतस्तस्य चाभेदवादा: ।
सर्वं खल्वैतदात्म्यं सकलमिदमहं तत्त्वमस्येवमाद्या: व्याख्याता रङ्गधामप्रवण ! विजयिभिर्वैदिकैस्सार्वभौमै: ॥२४॥

ஸ்தித்யுத்பத்தி ப்ரவ்ருத்தி க்ரஸநநியமநவ்யாபநைராத்மநஸ் தே
சேஷோசேஷ: ப்ரபஞ்சோ வபுரிதி பவதஸ் தஸ்ய சாபேதவாதா:,
ஸர்வம் கல்வைததாத்ம்யம் ஸகலமிதமஹம் தத்த்வமஸ்யேவமாத்யா:
வ்யாக்க்யாதா ரங்கதாமப்ரவண! விஜயிபிர் வைதிகைஸ் ஸார்வபௌமை: (24)

| | | | |
|---|---|---|---|
| ரங்கதாம ப்ரவண! | திருவரங்கம் பெரிய கோயிலில் ஊற்றமுடையபிரானே! | பவத: | தேவரீருக்கும் |
| ஸ்திதி | ரக்ஷணத்தாலும் | தஸ்ய ச | அவ்வுலகத்திற்கும் |
| உத்பத்தி | ஸ்ருஷ்டிப்பதாலும் | அபேதவாதா: | அபேதத்தைச் சொல்லுமவையான |
| ப்ரவ்ருத்தி | (காரியங்களில்) ப்ரவர்த்தனம் செய்வதாலும் | ஸர்வம் கலு, ஐததாத்ம்யம், ஸகலம் இதம் அஹம், தத்த்வம் அஸி எவம் ஆத்யா: | ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம, ஐததாத்ம்யமிதம் ஸர்வம், ஸகலமிதமஹம் ச வாஸுதேவ:, தத்த்வமஸி ச்வேதகேதோ என்றிவை முதலான ப்ரமாணங்கள் |
| க்ரஸந | (ஸமயத்தில்) திருவயிற்றினுள் கொள்வதனாலும் | விஜயிபி: | ஜயசாலிகளான |
| நியமந | ஒவ்வொரு வஸ்துவிலும் உட்புகுந்து நியமிப்பதாலும் | வைதிகை: ஸார்வபௌமை: | வைதிகத்தலைவர்களினால் |
| வ்யாபநை: | எங்கும் வியாபிப்பதனாலும் | வ்யாக்க்யாதா: | (பொருத்தமுடையனவாக) வியாக்கியானிக்கப்பட்டன. |
| ஆத்மந: | ஸர்வாத்மாவாயிருக்கின்ற | | |
| தே | தேவரீருக்கு | | |
| சேஷ: | சேஷப்பட்டதான | | |
| அசேஷ: ப்ரபஞ்ச: | உலகமுழுவதும் | | |
| வபு: இதி | (தேவரீருக்கு) சரீரமாகாநின்றதென்கிற காரணத்தினால் | | |

* * *—றீம் ச்லோகத்தில் அத்விதீயச்ருதியை நிர்வஹித்தாராய் நின்றார். இனி அபேதவாதங்களுக்கு என்ன கதி யென்ன, அருளிச்செய்கிறாரிதில். *सर्वं खल्विदं ब्रह्म, ऐतदात्म्यमिदं सर्वम्, तत्त्वमसि श्वेतकेतो* இத்யாதி ச்ருதிகளிலும், *सकलमिदमहं च वासुदेवः* இத்யாதிகளான உபப்ரும்ஹணங்களிலும் ப்ரஹ்மத்துக்கும் ப்ரபஞ்சத்துக்கும் ஸாமா நாதிகரண்யநிர்தேசம் காண்கிறதிறே ; இது நிர்வஹிக்கும் புடை ஏதென்னில் ; ஸமஸ்த ப்ரபஞ்சமும் ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்களாலே தேவரீருக்கு சேஷமாய்க்கொண்டு சரீரமா யிருக்கையாலே, சரீரவாசகசப்தம் சரீரிபர்யந்தபோதகமாகை லோகஸித்த மாகையாலே, நியந்தாவாய் வ்யாப்தாவாய் ஆத்மாவான தேவரீரைச் சொல்லுகிற சப் தத்தோடு ப்ரபஞ்சவாசிசப்தங்களுக்கு ஸாமாநாதிகரண்ய நிர்தேசம் உபபந்நமென்று நம் முன்னோர்கள் மூதலித்தார்களென்கிறார்.

இதில் உத்தரார்த்தத்தில் உதாஹரித்தருளியுள்ள உபநிஷத் வாக்யங்களுள் *தத்த்வமஸி என்கிற வாக்யத்தை அத்வைதிகள் தங்களுடைய வாதத்திற்கு மிகவும் முக்கியமானதென்று கொண்டு வாதிக்கிறபடியால் அதிற் சொல்லவேண்டுமவற்றை எளிதாகச் சொல்லுகிறோம் இங்கு. சாந்தோக்யோபநிஷத்தில் ஆறுவது அத்யாயத்தில் எட்டாவது கண்டம் முதல் பதினாறுவது கண்டம் வரை ஒவ்வொரு கண்டத்திலும் இந்தமாதிரியான வாக்கியம் காணப்படுகிறது. பூர்வோத்தர வாக்யங்களோடு சேர்ந்து இந்த வாக்யம் *ऐतदात्म्यमिदं सर्वं तत्सत्यं स आत्मा तत् त्वमसि श्वेतकेतो* என்று ஓதப் பட்டுள்ளது.

இந்த அத்யாயத்தில் மஹர்ஷி உத்தாலகர் தமது குமாரன் ச்வேதகேதுவுக்கு ப்ரஹ்மஸ்வரூபத்தை உபதேசிக்கிறார். எட்டாவது கண்டத்திற்கு முன் ப்ரஹ்மம் ஜகத்துக்கு உபாதாந காரணமும் நிமித்தகாரணமும் ஆகுமென்று சொல்லி அதை விஸ்தரேண த்ருஷ்டாந்தபூர்வகமாக உபதேசிக்கிறார்.

தத் த்வமஸி ச்வேதகேதோ!—இந்த வாக்யத்தில் நான்கு பதங்களுள்ளன. உத்தாலகர் தமது புத்திரனை ச்வேதகேதுவை விளித்து த்வம் தத் அஸி என்று சொல்லு கிறார். அதாவது—ச்வேதகேதுவே! நீ அதுவாயிருக்கிறாய் என்றதாகும். இங்கு த்வம் என்கிற பதத்தால் ச்வேதகேதுவையும் தத் என்கிற பதத்தால் ப்ரஹ்மத்தையும் குறிக் கிறது. ச்வேதகேதுவாகிறான் ஜீவாத்மா. அவனைப் பார்த்து நீ ப்ரஹ்மமாயிருக்கிறாய் என்று சொல்லப்படுகிறது. த்வம் என்பதால் சொல்லப்படும் ஜீவாத்மாவுக்கும் தத் என்பதால் சொல்லப்படும் ப்ரஹ்மத்திற்கும் அபேதம் காட்டுவது இந்த வாக்கியத்தின் முக்கியமான அபிப்ராயமாகும். இதனால், ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றே, இரண்டு பொருள்களல்ல என்றதாக ஏற்படுகின்றது. இது அத்வைதிகள் சொல்லுமது. பேதவாதிகளும் விசிஷ்டாத்வைதிகளும் இதன்மேல் என்ன சொல்லுகிறார்களென் பதை இங்கு நாம் காட்டுவோம்.

ஒருவர் தமது வேலைக்காரனை விளித்து 'கடைவீதியில் இன்ன கடையில் ஐந்து படி ஜலம் கொள்ளும்படியாய் நன்றாய் வெந்து சிவந்த பானை ஒன்று பார்த்து விலை பேசி வைத்திருக்கிறேன், அதைப்போய் வாங்கிவா' என்று சொல்லுகிறார். இங்குக் கடைசியாக 'அதை வாங்கிவா' என்கிற சொற்கள் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. அதை என்கிற சொல்லுக்கு என்னபொருள் கூறவேணும்? அதை என்கிற சொல் லுக்கு—ஐந்துபடி ஜலம் கொள்ளும்படியானதாய் சிவந்த நிறமுள்ளதாய் நன்றாய் வெந்த, அந்தக் கடையிலுள்ள பானையை என்பதே பொருளாகும். வெறும் பானை யென்று மாத்திரம் பொருளாகாது. அந்த வேலைக்காரன் இரண்டுபடி ஜலம் கொள் ளும்படியாய் வேவாத பச்சை நிறமுள்ளதோர் பானையை வாங்கிவருவானாயின் அவன் தனது ஸ்வாமகனுடைய கட்டளைப்படி நடந்தானுவனு? ஆகான்: ஏன்? யஜமானன்

அந்தப்பானையை வாங்கிவரச் சொன்னான்; அந்த என்கிற சொல்லுக்கு அவர் [illegible] எந்த குணங்களுடையதாய்ப் பானையைச் சொன்னாரோ அவ்வெல்லாக் குணங்[illegible]ளோடும் கூடின பானையே அர்த்தமாம். தச்சப்தம் ஸர்வநாம சப்தம். இது முன்பே[illegible] எந்த எந்த குணங்களும் தர்மங்களும் செயல்களும் சொல்லப்பட்டனவோ அந்த [illegible]ல்லாக் குணங்கள் தர்மங்கள் செயல்களோடுங் கூடின முன்பு ப்ரஸ்துதமான வஸ்துவைக் காட்டும்; ஆகையால் தத் த்வமஸி என்னும் வாக்யத்திலுள்ள தத் என்[illegible] பதமும் முன்னே ப்ரஸ்துதமான ஸர்வஜ்ஞமாய் ஸத்யஸங்கல்பமாய் ஸகல ஜகத்[illegible]ரணமா யுள்ள ப்ரஹ்மதைக் காட்டுகின்றது.

இனி த்வம் பதத்தை எடுத்துக்கொள்வோம். நல்ல குலத்திற் பிறந்[illegible] நன்றாய்ப் படித்து வ்ருத்தரான ஓர் ப்ராஹ்மணர் இருந்தார். அவர் ஏதோ பிசகான [illegible]ரு காரியம் செய்துவிட்டார். அதையறிந்த ஒரு ஆப்தர் அவர்பக்கலிற் சென்று 'ஓய்! நல்ல ப்ராஹ்மண குலத்திற் பிறந்து சாஸ்திரங்கள் படித்து இவ்வளவு வய[illegible]துசென்ற நீர். இத்தகைய காரியம் செய்தீரே, இது தகுமா?' என்றார். இதில் நீர் என்கிற சொல் வந்திருக்கிறது. அதன்பொருள் என்ன? ப்ராஹ்மண ஜாதியிலும் நல்லகுலத்திலும் பிறந்து சாஸ்திரங்கள் கற்றறிந்து வயதுசென்ற எதிரில் நிற்கிற அந்த மனிதரே நீர் என்பதன் அர்த்தம். அன்றி, வெறும் மனிதனுவது வெறும் எதிரில் நிற்பவராவது அந்த நீர் என்ற பதத்தின் முழுப்பொருளல்ல. இத்தகைய அர்த்தங்கள் வக்தாவின் அபிப்ராயத்தை அநுஸரித்து ஏற்படுகின்றன. ஆகவே தத் த்வமஸி என்ற வாக்யத்தி லுள்ள த்வம்பதத்திற்கு துஃகசோகக்ரஸ்தனாய் அஜ்ஞானியாய் ஸம்ஸாரியாய் புபுக்ஷு வான ச்வேதகேதுவென்று பெயர்பெற்ற எதிரே நிற்கிற ஜீவாத்மா பொருளாக வேணும். இனி, தத் த்வம் அஸி என்ற மூன்று பதங்களையும் சேர்த்துப் பொருள் கொள்ளப் புகுந்தால், துஃகசோகக்ரஸ்தனாய் அஜ்ஞனாய் ஸம்ஸாரியாய் அசக்தனாய் புபு க்ஷுவாய் ஜீவாத்மாவான நீ நித்யாநந்தஸ்வரூபியாய் ஸர்வஜ்ஞமாய் நித்யமுக்தமாய் ஸர்வசக்தியாய் ஸம்ஸார ஸம்பந்தமில்லாததாய் ஸர்வஜகத்காரணமான அந்த ப்ரஹ்ம மாயிருக்கிறாய் என்று அர்த்தம் விளங்கும்.

இனி, நாம் மேலே விவரித்த பொருள் யுக்தந்தானா என்று விமர்சிப்போம். 'ஜலம் அக்நியே' என்றாவது 'இருளே ஸூர்யன்' என்றாவது ஒருவன் சொன்னால் இதை நாம் யுக்தமென்று அங்கீகரிப்போமல்லோம். ஜலமே நெருப்பானால் குளிர்ச்சி யும் வெப்பமுமாகிய பரஸ்பரவிருத்தமான இரண்டு தர்மங்கள் ஓரிடத்தில் சேர்ந் திருக்க நேரிடும்; குளிர்ச்சியும் வெப்பமும் ஓரிடத்தில் சேர்ந்திருக்கக்கூடுமானால் அவை பரஸ்பரவிருத்த தர்மங்களேயல்ல. ஆகவே, பரஸ்பரவிருத்தமான இரண்டு குணங்களை ஓரிடத்திலிருப்பதாகக் காட்டவல்ல 'ஜலமே நெருப்பு' என்கிற அந்த வாக்யமானது யுக்தி விருத்தமும் ப்ரத்யக்ஷ விருத்தமுமான அர்த்தத்தைக் காட்டு வதால் அப்ரமாணமென்று சொல்லப்படுகிறது. தத் த்வமஸி என்கிற வாக்யமும் ஸர்வஜ்ஞமாய் ஸர்வசக்தமாய் ஸத்யஸங்கல்பமாய் பரமாநந்தநிதியாய் ஸர்வ ஜகத் காரணமாய் நித்யமுக்தமான ப்ரஹ்மமும், அஜ்ஞானியாய் அசக்தனாய் துஃக்கசோகக்ரஸ்த னாய் ஸம்ஸாரியான ஜீவனும் ஒன்று எனக் காட்டுவதாயிருந்தால் பரஸ்பர விருத்த மான மேலேகாட்டிய குணதர்மங்கள் ஒன்றுசேர நேரிடும். ஆன பின்பு இந்த வாக்ய மும் அப்ரமாணமாக வேண்டிவரும். ஆகையால் இந்த வாக்யத்திற்கு அங்ஙனே பொருள் கொள்ளலாகாது.

அத்வைதவாதிகள் இங்கு ஜஹதஜஹல்லக்ஷணை ஸ்வீகரித்து 'ஸோயம் தேவ தத்த:' என்கிறவிடத்திற்போல் நிர்வஹிக்கலாமென்கிறார்கள். ஸோயம் தேவதத்த: என்ற வாக்யத்தில், ஸ: என்பதற்கு, அந்த தேசத்திலும் காலத்திலும் இருந்தவன் என்று பொருள். அயம் என்பதற்கு இந்த தேசத்திலும் காலத்திலுமுள்ளவன் என்றுபொருள்.

இந்த தேசத்திலும் காலத்திலுமுள்ள இந்த தேவதத்தனே அந்த தேசத்திலும் காலத்திலுமிருந்த தேவதத்தனுவான் என்றதாகிறது. இதனால் அந்த தேசத்திலும் காலத்திலுமிருந்த தேவதத்தனுக்கும் இந்த தேசத்திலும் காலத்திலுமுள்ள தேவதத்தனுக்கும் அபேதம் சொல்லப்பட்டதாக ஏற்படுகிறது. இது எப்படி கூடும்? ஸ: என்ற பதத்தால் அத்தேசகாலங்களிலிருந்த தேவதத்தனும் அயம் என்ற பதத்தால் இத்தேச காலங்களிலுள்ள தேவதத்தனும் எடுக்கப்பட்டு இவர்களுக்கு அபேதம் சொல்லப்பட்டால் அவ்விரண்டு தேவதத்தர்களுக்கும் அபேதம் சொல்லப்படுவது போல் அந்த தேசகாலங்களுக்கும் இந்த தேசகாலங்களுக்கும்கூட அபேதம் சொல்லப்பட்டதாக ஏற்படுமே.

தண்டீ த்ருஷ்ட: [தடிக்காரன் பார்க்கப்பட்டான்]. தண்டீ ஆகத: [தடிக்காரன் வந்தான்] என்ற விடங்களில் தண்டீ என்ற பதத்தின் அர்த்தமான தடியும் அதையுடையவனுமாகிற விசேஷண விசேஷ்யங்களிரண்டிலும் த்ருஷ்ட:, ஆகத: என்ற பதங்களின் அர்த்தமான பார்க்கப்படுதல் வருதல் இவை அன்வயிக்கின்றன. தடியையும் அதையுடையவனையும் நாம் பார்க்கும்போதுதான் தண்டீ த்ருஷ்ட: என்கிறோம். தடியின்றி வெறுங்கையனாய் ஒருவன் வந்தால் நாம் தண்டீ ஆகத: என்று சொல்வதில்லை. ஏன்? தண்டீ த்ருஷ்ட: தண்டீ ஆகத: என்றவிடங்களில் த்ருஷ்ட: ஆகத: என்ற பதங்களின் அர்த்தமான பார்க்கையும் வருகையும் தண்டீ என்ற பதத்தின் அர்த்தமான தண்டமென்ன அதையுடையவனென்ன ஆகிய விசேஷண விசேஷ்யங்களிரண்டிலும் அன்வயிப்பதினாலேயே. அதுபோல் ஸோயம் தேவதத்த: என்றவிடத்திலும் ஸ: என்ற பதத்தின் அர்த்தமான அந்த தேசகாலங்களும் ஆங்கிருந்த புருஷனுமாகிய விசேஷண விசேஷ்யங்களிரண்டிற்கும் அயம் என்ற பதத்தின் அர்த்தமான இந்த தேசகாலங்கள் ஈங்குள்ள புருஷன் ஆகிய விசேஷண விசேஷ்யங்களிரண்டிற்கும் அபேதம் தோற்றவேண்டும். அங்ஙனம் தோற்றும்போது அந்த தேசமும் இந்த தேசமும் ஒன்று என்றும் அந்தகாலமும் இந்தகாலமும் ஒன்று என்றும் அந்த தேவதத்தனும் இந்த தேவதத்தனும் ஒன்று என்றும் சொன்னதாகும். அந்த தேவதத்தனும் இந்த தேவதத்தனும் ஒருவனேயாயினும் அந்த தேசகாலங்களும் இந்த தேச காலங்களும் ஒன்றல்லவென்பது ஸர்வஸிர்விவாதம்.

இப்படி ப்ரத்யக்ஷவிருத்தமான அர்த்தத்தை ஸோயம் தேவதத்த: என்ற வாக்யம் காட்டுமானால் அது அப்ரமாணமாகும். ஆகையால் ஸ:, அயம் என்ற இரண்டு பதங்களின் முக்யார்த்தங்களையும் விட்டு இரண்டுக்கும் தேவதத்தன் என்ற விசேஷ்யமாத்திரத்தில் லக்ஷணை கல்பிக்கப்படுகிறது. அந்த தேசகாலங்களில் எந்த தேவதத்தன் இருந்தானோ அவனேயிவன் என்று மாத்திரம் இந்த வாக்கியம் காட்டுகிறது. இதுவே ஜஹதஜஹல்லக்ஷணையாகும். பதத்தின் பொருளில் ஒரு பாகத்தைவிட்டு ஒருபாகத்தில் அந்த பதத்திற்கு லக்ஷணை கல்பித்தால் இது ஜஹதஜஹல்லக்ஷணை எனப்படுகிறது. [ஜஹத் அஜஹத்—விட்டும் விடாமலுமிருப்பது]

ப்ரக்ருதமான தத் த்வமஸி என்றவிடத்திலும் ஜஹதஜஹல்லக்ஷணை கல்பிப்பதால் விரோதத்தைப் போக்கிவிடலாம். தத் என்பதற்கு ஸர்வஜ்ஞனும் ஸர்வசக்தனும் ஸத்யஸங்கல்பனும் ஸகல ஜகத்காரணபூதனும் ஜ்ஞாநாநந்தஸ்வரூபியுமான ப்ரஹ்மம் முக்யார்த்தம். இதில் விசேஷணங்களையெல்லாம் விட்டு ப்ரஹ்மம் என்ற விசேஷ்ய மாத்திரத்தை வைத்துக்கொள்வோம். அதாவது தத்பதத்திற்கு ப்ரஹ்மஸ்வரூபத்தில் லக்ஷணை கல்பிப்போம். அதுபோல் த்வம்பதத்தின் முக்யார்த்தமான அஜ்ஞனும் அசக்தனும் து:கியும் ஸம்ஸாரியுமான ஜீவன் என்றதில் விசேஷணங்களையெல்லாம் விட்டு ஜீவன் என்கிற விசேஷ்யமாத்திரத்தில் லக்ஷணை கல்பிப்போம். இப்பொழுது தத் த்வம் என்றால் ப்ரஹ்மமும் ஜீவனும் என்றதாயிற்று. த்வம் ததஸி என்றதால் ஜீவனை நீ ப்ரஹ்மமாயிருக்கிறாய் என்று சொன்னதாகும். ப்ரஹ்மமும் ஜீவனும் ஒன்று

என்று காட்டுவதே இந்த வாக்யத்தின் முக்யோத்தேச்யம்; இப்போது எவ்விதமான விரோதமுமில்லை—என்கிறார்கள் அத்வைதவாதிகள்.

இப்படி ஜஹதஜஹல்லக்ஷணை கல்பித்து தத்த்வமஸி என்கிற வாக்யத்தின் அர்த்தத்தில் தோன்றுகிற விரோதத்தைப் போக்குவதாகச்சொல்லுவதை யுக்தமென்று புத்திமான்கள் இசையகில்லார். ஜஹதஜஹல்லக்ஷணைக்கு ஸோயம் தேவதத்த: என்கிறவிடம் உதாஹரணமாகத் தகாது. அங்கு லக்ஷணை கல்பிக்கக் காரணமே இடையாது. முக்கியமான அர்த்தத்தில் விரோதம் விளைந்தாலன்றோ லக்ஷணை கல்பிக்க வேண்டும். அங்கு முக்யார்த்தத்தில் எவ்விதமான விரோதமுமில்லை.

தண்ட ஆகத:, தண்ட த்ருஷ்ட: என்கிறவிடங்களில் விசேஷ்ய விசேஷணங்களிரண்டிலும் ஆகத:, த்ருஷ்ட: என்பவற்றின் அர்த்தம் அன்வயிப்பது உண்மையே. ஆனால் எல்லாவிடங்களிலும் இப்படி அன்வயிக்கிறதென்கிற நிர்ப்பந்தமில்லை. தண்டீ ஹத: [தடிக்காரன் கொல்லப்பட்டான்.] என்றவிடத்தில் விசேஷ்ய விசேஷணங்களிரண்டிலும் ஹத: என்பதன் அர்த்தம் அன்வயிப்பதில்லை. கொல்லப்பட்டவன் தடியையுடையவனாயிருந்த புருஷனே யன்றி, தடி கொல்லப்படுவதில்லை. தண்டீ என்கிற பதம் தண்டம் என்கிற விசேஷணத்தையும் புருஷனாகிய விசேஷ்யத்தையும் காட்டுமானாலும் ஹத: என்பதின் பொருள் விசேஷ்யனான புருஷனில் தான் அன்வயிக்கிறது. ஆகையால், எல்லாவிடங்களிலும் விசேஷண விசேஷ்யங்களிரண்டிலும் வினை அன்வயிக்கிறதென்கிற நியதியில்லை. எவ்விடத்தில் விசேஷணத்திலும் அன்வயிப்பதில் பாதகமில்லையோ அங்குத்தான் அன்வயிக்கும். பாதகம் காணப்படுமிடங்களில் அன்வயிப்பதில்லை. ஒருவன் எப்போதும் கையில் தடியையுடையவனாகவேயிருந்து அதனால் தண்டீ என்று ப்ரஸித்திபெற்றுவிடுகிறான்; அப்படிப்பட்டவன் ஒருகால் தடியின்றியே வந்தாலும் தண்டீ ஆகத:, தண்டீ த்ருஷ்ட: என்றே சொல்லத் தடையில்லை. அங்கு விசேஷ்யமாத்திரத்தில்தான் அன்வயம். ஆனபின்பு இந்த த்ருஷ்டாந்தத்தைக்கொண்டு, ஸோயம் தேவதத்த: என்கிறவிடத்தில் ஸ: என்பதன் அர்த்தமான அந்த தேசம் அந்த காலம் தேவதத்தன் ஆகிய மூன்றிலும் அயம் என்பதன் அர்த்தமான இந்த தேசம் இந்த காலம் தேவதத்தன் ஆகிய மூன்றும் அன்வயிக்கவேணுமென்கிற நிர்ப்பந்தம் சொல்லமுடியாது. அந்த தேசகாலங்களும் இந்த தேசகாலங்களும் ஒன்றாயிருக்க முடியாது. ஆகவே, இந்த தேசத்தில் அந்த தேசத்தின் அபேதமும், இந்த காலத்தில் அந்த காலத்தின் அபேதமும் இந்த வாக்யத்தால் காட்டமுடியாது. தேவதத்தன் என்கிற ஒருபுருஷன் அந்த தேசத்திலும் இந்த தேசத்திலும் எப்படியிருக்கக்கூடும் என்று சங்கையுண்டாகலாம். இதற்குக் காலபேதத்தைக்கொண்டு பரிஹாரம் செய்வது அரிதன்று. ஒரு புருஷன் ஒரே காலத்தில் இரண்டிடங்களில் இருக்கமுடியாதேயன்றி வெவ்வேறு காலங்களில் இரண்டு வெவ்வேறிடங்களில் இருப்பதில் விரோதமில்லை. நேற்று காசியிலிருந்தவன் இன்று ப்ரயாகையிலிருக்கமுடியாதா? ஸோயம் தேவதத்த: என்கிற வாக்யமானது முன்பொருநாள் அந்த தேசத்திலிருந்த தேவதத்தனே இன்று இந்ததேசத்திலிருக்கிறான் என்றுதான் காட்டுகிறது. ஒரேகாலத்தில் இரண்டிடங்களிலும் ஒரு தேவதத்தன் இருப்பதாகக் காட்டப்படவில்லை. ஆகவே ஸோயம் தேவதத்த: என்ற வாக்யத்திற்கு முக்கியமான அர்த்தம் சொல்லும்போது எவ்விதமான விரோதமுமில்லையாதலால் அங்கு ஜஹதஜஹல்லக்ஷணை கல்பிக்கவேண்டியதில்லை. இப்படியிருக்கையில் இதை த்ருஷ்டாந்தமாக்கி தத்த்வமஸி என்கிறவிடத்தில் ஜஹதஜஹல்லக்ஷணை கல்பிப்பது பொருத்தமுடையதன்று.

தத் த்வமஸி என்ற வாக்யத்தில் லக்ஷணை கல்பித்து ப்ரஹ்மத்துக்கும் ஜீவனுக்கும் அபேதம் கல்பிப்பதும் அநுசிதம். அப்படி ப்ரஹ்மமும் ஜீவனும் ஒன்று என இசைந்தால் அஜ்ஞத்வம் ஸர்வஜ்ஞத்வம், ஸுகித்வம், து:கித்வம் ஸம்ஸாரித்வம் நித்யமுக்தத்வம் என்றாகியான பல விருத்த தர்மங்கள் ஒரே இடத்தில் இருப்பனவாக

இசையவேண்டிவரும். இந்த தர்மங்களின் பரஸ்பரவிரோதத்தை எவ்விதத்திலும் பரிஹரிக்கமுடியாது. ப்ரஹ்மம் ஸர்வஜ்ஞமாயும் நித்யமுக்தமாயும் ஸுகரூபமுமானது. ஜீவன் அஜ்ஞனும் து:கியும் ஸம்ஸாரியுமாவன். இத்தகைய இரு வஸ்துக்களுக்கும் அபேதம் எங்ஙனே கூடும்? அப்படி அபேதம் ஒப்புக்கொண்டால் ஸர்வஜ்ஞமான ப்ரஹ்மமே அஜ்ஞமாயிருக்கிறதென்றும், நித்யமுக்தமான ப்ரஹ்மமே நித்ய ஸம்ஸாரியாயிருக்கிறதென்றும் நித்யாநந்த ஸ்வரூபியான ப்ரஹ்மமே பரமது:கியானதென்றும் ஒப்புக்கொண்டதாகும். அது சாஸ்திரத்திற்கும் யுக்திக்கும் விருத்தமானதாம்.

இனி, ஸர்வஜ்ஞமாய் நித்யமுக்தமாய் ஆநந்தமயமாய் ஜகத்காரணமாயிருப்பது சுத்தப்ரஹ்மமென்றும், மாயையென்கிற உபாதியோடுகூடிய ப்ரஹ்மம் அஜ்ஞமாய் ஸம்ஸாரியாய் து:கியாய் கார்யமாயிருக்கின்றதென்றும் பிரதிபக்ஷிகள் ஸமாதானம் கூறுவர்; இது கூடாது; ஸச்சிதாநந்தஸ்வப்ரகாசமான ப்ரஹ்மஸ்வரூபத்தில்மாயை என்கிற உபாதியின் ஸம்பந்தமே உண்டாகமுடியாது. ப்ரகாசமயனான ஸூர்யனிடத்தில் இருளின் ஸம்பந்தமுண்டாவது எப்படி கூடாதோ அப்படியே ஸ்வப்ரகாசமான ப்ரஹ்மத்திலும் மாயா ஸம்பந்தம் பொருந்தாது. ஸ்வப்ரகாசமான ப்ரஹ்மத்தில் மாயாஸம்பந்த முண்டாகக் கூடுமானால் ப்ரஹ்மம் ஸ்வப்ரகாசமாகமாட்டாது. இருளை அகற்றமுடியாதவன் ஸூர்யனாவனோ?

ப்ரஹ்மத்திற்கு மாயா ஸம்பந்தம் உண்டாகக் கூடுமென்றே வைத்துகொள்வோம், ஆனாலும் இதனால் சுத்தப்ரஹ்மம் வேறாய் மாயாவிசிஷ்ட ப்ரஹ்மம் வேறாய் விடுமா? ப்ரஹ்மஸ்வரூபம் ஒன்றுதான், இரண்டன்று. ஆனபின்பு அந்த ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு மாயா ஸம்பந்தம் ஒப்புக்கொள்வதால் மாத்திரம் எவ்வித ஸமாதானமும் ஏற்படாது. மாயாவிசிஷ்ட ப்ரஹ்மஸ்வரூபத்தில் ஒப்புக்கொண்ட அஜ்ஞாநம், ஸம்ஸரணம், து:க்கம் முதலிய தோஷங்களெல்லாம் சுத்தப்ரஹ்மத்தில் இருப்பதாகவே ஆகும்.

ப்ரஹ்மம் அகண்டமானது. அதில் ஒருபாகம் மாயா ஸம்பந்தமுடையதென்றும் மற்றொருபாகம் சுத்தமானதென்றும் சொல்லமுடியாது. ஏகதேசத்தில் மாயா ஸம்பந்தத்தை ஒப்புக்கொண்டு அவ்விடத்தில் அஜ்ஞாநாதிகளைக் கல்பிப்பதும் மற்றொரு தேசத்தை சுத்தமாகவைத்து அதில் ஜ்ஞாநாநந்தாதிகள் இருப்பதாகக் கல்பனை செய்வதும் பொருத்தமுடையதன்று. அது ஒருமனிதனுக்கு ஒரு அவயவத்தில் வ்ரணம் ஏற்பட்டு அதனாலாகிய துயரமும், மற்றொரு அவயவத்தில் சந்தனம்பூசி அதனாலாகிய ஸுகமும் இருப்பதாக ஒப்புக்கொள்வது போலாகும். அகண்டமான ப்ரஹ்மத்தை இருதுண்டாகச் செய்தாலொழிய இவ்வித கல்பனைகளால் யாதொரு ஸமாதானமும் ஏற்படாது.

சுத்தப்ரஹ்மம் ஜ்ஞாநாநந்த ஸ்வரூபியானது; மாயா விசிஷ்ட ப்ரஹ்மம் அஜ்ஞாநது:காதிகளுடையது என்று சொல்லி ப்ரஹ்மத்தை நிர்தோஷமாக ஸ்தாபிக்க முயல்வதானது, கையில் தடி பிடித்திருந்த ஒருவனைக் கத்தியால் வெட்டிவிட்டு 'நான் தடிக்காரனைக் கொன்றேனேயன்றி மனிதனைக் கொல்லவில்லை' யென்று சொல்லிக் கொலைப்பாதகத்திலிருந்து மீள முயல்வது போலாகும். த்ருஷ்டாந்தத்தில் தடிக்காரன் எப்படி மனிதனில் வேறல்லவோ, அப்படியே மாயா விசிஷ்டம் சுத்த ப்ரஹ்மத்தினில் வேறல்ல; எப்படி தடிக்காரனைக் கொல்வது தடியுடைய அம்மனிதனைக் கொல்வதாகுமோ அப்படியே மாயாவிசிஷ்ட ப்ரஹ்மத்தை அஜ்ஞாநாதிகளுடையதாகச் சொல்வது ப்ரஹ்மத்தை அஜ்ஞாநாதிகளுடையதாகச் சொல்வதேயாகும். ஆகையால் இக்கல்பனைகளால் எவ்விதமாயும் விரோதபரிஹாரம் பெறமுடியாது.

விசிஷ்டாத்வைதவாதிகள் இவ்வாக்யத்திற்குப் பொருள் வேறுவகையாகக் கூறிப் பொருந்தி வைக்கிறார்கள். மனிதன், பசு, மிருகம் ஆதியாயுள்ள சப்தங்க

பாஞ்சபௌதிகமான சரீரத்தையே முக்கியமாகக் காட்டுமானாலும் 'மனிதன் ஸுகியா யிருக்கிறான்' 'மிருகம் துக்கிக்கிறது' என்றிவ்வாறு சொல்லும்போது மனித சரீரத்தையுடைய ஆத்மாவையும் மிருகசரீரத்தையுடைய ஆத்மாவையும் காட்டுகின்றன வென்பது அனைவருமிசைந்த விஷயம். பாஞ்சபௌதிகமான சரீரங்களுக்கு ஸுகமும் துக்கமும் கூடாதாகையால் அந்த வ்யவஹாரங்களில் மனிதன் மிருகம் முதலிய சப்தங்கள் சரீரத்தோடு கூடிய ஆத்மாவைக் காட்டியே தீரும். அல்லாதபோது அவ்வாக்கியங்கள் அப்ராமாணிகங்களாகும். இந்த த்ருஷ்டாந்தங்களால், சரீரவாசியான சப்தங்கள் சரீரவிசிஷ்ட ஆத்மபர்யந்தம் காட்டக்கூடியவையென்பது விளங்கிற்றாகும். ப்ரஹ்மம் ஸர்வ வ்யாபகமானது. ஜடம் சேதநன். ஆகிய இரண்டுவகைப் பொருள்களிலும் ப்ரஹ்மம் வியாபித்து நிறைந்திருக்கிறது. பாஞ்சபௌதிகமான மானிட சரீரத்தில் ஜீவாத்மா உள்ளே வியாபித்து அச்சரீரத்தைத் தன்னுடைய இருப்பால் தரித்து நின்று எப்படி தன்னிஷ்டம்போல் அச்சரீரத்தை நடத்துகிறானோ அப்படியே ப்ரஹ்மமும் ஜடம் சேதநனாகிய எல்லாப் பொருள்களிலும் உள்ளே வியாபித்துத் தன்னிருப்பால் அவற்றைத் தரித்து நின்று தன்னிஷ்டப்போல் அவற்றை நடத்துகிறபடி. ஆகையால் ஜீவாத்மாவுக்குப் பாஞ்சபௌதிகமான பிண்டம் எப்படி சரீரமோ அப்படியே ப்ரஹ்மத்திற்கு எல்லாப் பொருளும் சரீரமாம். "यस्य पृथिवी शरीरम् । यस्यात्मा शरीरम्" என்றுதியான வேதவாக்கியங்களில் ப்ருதிவீ முதலிய எல்லா ஜடப்பொருள்களும் ஆத்மாவும் ப்ரஹ்மத்தின் சரீரங்களென்று சொல்லப்பட்டுள்ளது. சரீரவாசியான சப்தம் சரீரியான ஆத்மாவையும் காட்டுமென்று முன்னே நிரூபித்தாய்விட்டது. தத்த்வமஸி என்கிற விடத்தில் தத் என்ற பதம் ஜகத்காரணமாய் ஸர்வஜ்ஞமாய் ஸர்வசக்தமான ப்ரஹ்மத்தைக் காட்டுகிறது. த்வம் என்று அங்கு ச்வேதகேதுவைப் பார்த்து அவருடைய பிதா ஸம்போதித்துரைக்கிறார். ஆகையால் த்வம் என்னும் பதம் முதலில் எதிரே நிற்கும் சரீரத்தோடுகூடிய ஆத்மாவைக்காட்டி அந்த ஆத்மாவுக்கும் அந்தராத்மாவாய் அந்த ஆத்மாவைச் சரீரமாகவுடைத்தான ப்ரஹ்மத்தை முடிவில் காட்டுகிறது. ஆகவே த்வம் என்றால் ச்வேதகேதுவைச் சரீரமாகவுடைய ப்ரஹ்மம் என்று அர்த்தமாம்.

ஜகத்காரணமாய் தத் என்று சொல்லப்பட்ட ப்ரஹ்மமும் ச்வேதகேதுவென்கிற ஆத்மாவைச் சரீரமாகவுடைய த்வம் என்னும் பதத்தால் காட்டப்பட்ட ப்ரஹ்மமும் ஒன்று என்பதாக தத்த்வமஸிவாக்யத்தால் ஏற்படுகிறது. இப்போது தத்த்வமஸி, வாக்யார்த்தத்தில் எவ்விதமான விரோதமுமில்லை. ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று எனச் சொல்லுவதாயிருந்தால் தான் கீழே காட்டியபடி விருத்த தர்மங்கள் ஓரிடத்திற்சேர வேண்டியதாயேற்படும். ஜகத்காரணமான ப்ரஹ்மமும் ச்வேதகேதுவைச் சரீரமாகவுடைய ப்ரஹ்மமும் ஒன்று எனக் கூறும்போதும் எவ்விதமான பாதகமுமில்லை.

இப்படி இந்த ப்ரஹ்மமும் அந்த ப்ரஹ்மமும் ஒன்றெனச் சொல்லவேண்டிய காரணமென்னவென்று கேட்கலாம். கேண்மின்: இந்த தத்த்வமஸிவாக்யம் ஸத்வித்யாப்ரகரணத்திலிருக்கிறது. அங்கு காரியமும் காரணமும் ஒன்றென விஸ்தரேண நிரூபிக்கப்பட்டிருக்கிறது. 'ஜகத்துக்குக் காரணமும் ப்ரஹ்மமே, ஜகத்தும் ப்ரஹ்மமே' எனப்போதிப்பதே அந்த ப்ரகரணத்தின் முக்கியமான உத்தேச்யம். ப்ரஹ்மம் ஸூக்ஷ்ம ரூபமாய் ஜகத்துக்குக் காரணமாகிறது; அதுவே ஸ்தூல ரூபம் தரித்துக் காரியமாய்க் கொண்டு ஜகத்தாக நிற்கிறது. பாலனே யுவாவாகவும் வ்ருத்தனாகவும் ஆகிறான். பாலசரீரத்தையுடைய ஜீவன் யுவாவாகும்போது ஜீவனில் எவ்விதமான மாறுபாடும் உண்டாகாதுபோனாலும் அவனுடைய சரீரம் பருத்து யுவாவஸ்தையை யடைய அந்த ஜீவன் யுவாவாகிறதுபோல் ஸூக்ஷ்மமான ஜடப்பொருளிலும் ஜீவனிலும் அந்தராத்மாவாய் நின்ற ப்ரஹ்மம் ஸ்தூலரூபத்தையடைந்த ஜடப் பொருள்களிலும் ஜீவனிலும் அந்தராத்மாவாயிருந்து ஜகத்தாகிறது. யுவாவஸ்தையையடைந்தவனுக்கு பாலனாயிருந்தவனே காரணம். அதுபோல் ஸ்தூல ஜகத்தாயிருக்கும்

ப்ரஹ்மத்துக்கு ஸூக்ஷ்ம சரீரியாய் நின்ற அவனே காரணம். இப்படி கார்யகாரணங்களின் அபேதத்தைக் காட்டுகிறது அந்த ஸத்வித்யாப்ரகரணம்.

ஆகையால், அங்கு ஜகத்காரணமாய் தத் என்று சொல்லப்பட்டதான ப்ரஹ்மமும் ஸ்தூல ஜகத்துளடங்கிய ஸ்வேதகேதுவைச் சரீரமாகவுடைய த்வம் என்று சொல்லப்பட்ட ப்ரஹ்மமும் ஒன்று எனக் காட்டப்படுகிறது. ஆக தத்த்வமஸிவாக்யம் கார்யகாரணரூபமான ப்ரஹ்மம் ஒன்றெனக் காட்டாநின்றமையால் எவ்விதமான விரோதமுமில்லை.

உலகத்தில் சரீரவாசியான சப்தங்கள் சரீரியான ஆத்மாவில் முக்யமாகவே ப்ரயோகிக்கப்படுவதால் எல்லாப் பொருள்களையும் சரீரமாகவுடைய ப்ரஹ்மத்தை த்வம் என்ற ஜீவவாசி சப்தத்தால் குறிப்பிடுவதும் முக்கியமான ப்ரயோகமேயாம். இவ்விதமாக நிர்வாஹம் செய்யுமிடத்து அர்த்தபாதமில்லாமலிருப்பதோடு சப்தத்தின் முக்யத்வத்திற்கும் பாதமேற்படுவதில்லை. சப்தம் கௌணார்த்தத்தைக் காட்டுகிறதென்று சொல்லவேண்டியதேயில்லை. லோகவ்யவஹாரத்துக்கு அநுகுணமாய் சப்தங்களின் முக்யார்த்தத்தை வைத்துக்கொண்டே விரோதமில்லாமல் நிர்வாஹம் ஏற்படுகிறது. தத் த்வம் என்ற இரண்டு பதங்களாலும் ப்ரஹ்மம் இரண்டு விதமான ஆகாரத்தையுடையதாய்க் காட்டப்படுகிறது. தத்பதத்திற்கு, கீழே சொல்லியபடி ஜகத்காரணத்வாதி குணங்களோடு கூடிய ப்ரஹ்மம் அர்த்தம். த்வம்பதத்திற்கும் முன் சொல்லியபடி அஜடத்வாதிகளையுடைய ச்வேதகேதுவென்கிற ஆத்மாவைச் சரீரமாகவுடைய ப்ரஹ்மம் அர்த்தம். ஆகவே இரண்டு பதங்களாலும் காட்டப்படும் விசேஷ்யமான ப்ரஹ்மம் ஒன்றாயிருந்தாலும் வெவ்வேறு குணதர்மங்களோடு கூடியதாய் அதைக் காட்டுவதால் இரண்டு பதங்களுக்கும் அர்த்தபேதமிருக்கிறது. ஆகையால் இப்பதங்கள் ஸமாநாதிகரணபதங்களாயிருப்பதிலும் எவ்விதமான பாதகமுமில்லை.

எவ்விதமான அர்த்தவிரோதமுமின்றி முக்கியமான சப்தார்த்தத்தையே வைத்துக்கொண்டு இவ்விதமாக முக்கியமான நிர்வாஹம் செய்யக்கூடியதாயிருப்பதால் வேறுவிதமான நிர்வாஹங்கள் பொருத்தமுடையனவல்லவென்று நம் ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள்.

இப்படி விஸ்தரித்துச் சொல்லவேண்டிய விஷயங்களையே இந்த ச்லோகம் சுருங்கச் சொல்லாநின்றதென்றுணர்க. ... ... (24)

सराजकमराजकं पुनरनेकराजं तथा यथाभिमतराजकं जगदिदं जजल्पुर्जडाः ॥
अवशचित्रतातरतमत्वतर्काङ्क्षिका श्रुतिश्चिदचिती त्वया वरद ! नित्यराजन्वती ॥२५॥

ஸராஜகமராஜகம் புநரநேகராஜம் ததா யதாபிமதராஜகம் ஜகதிதம் ஜஜல்புர் ஜடா:,
அவசசித்ரதாதரதமத்வதர்க்காங்க்ஷிகா ச்ருதிச் சிதசிதீ த்வயா வரத ! நித்யராஜந்வதீ. (25)

ஹே வரத ! — வரமளிக்கும் ஸ்ரீரங்கநாதரே !
ஜடா: — மூடர்கள்
இதம் ஜகத் — இவ்வுலகத்தை
ஸராஜகம் — (அநுமானத்தால் ஸித்திக்கிற) ஈச்வரனோடு கூடியதாகவும்
அராஜகம் — ஈச்வரனற்றதாகவும்
அநேகராஜம் — பல ஈச்வரர்களையுடையதாகவும்
யதாபிமத ராஜகம் — அவரவர்களுடைய அபிமானத்துக்குத்தகுதியாகக் கல்பிக்கப்பட்ட ஈச்வரனையுடையதாகவும்
ஜஜல்பு: — பிதற்றினார்கள் ;
அவச சித்ரதா தரதமத்வ தர்க்க அங்க்ஷிகா — பாதந்திரர்களுக்கே உண்டாகக்கூடிய விசித்திரத்தன்மையென்ன ஏற்றத்தாழ்வு பெற்றிருக்கும் தன்மையென்ன இவற்றைப்பற்றின அநுகூலதர்க்கத்தைத் துணைகொண்ட
ச்ருதி: — வேதமானது
சிதசிதீ — சேதநாசேதநங்களை
த்வயா நித்ய ராஜந்வதீ — தேவரீராகிற நல்ல ஈச்வரனை எப்போதுமுடையவைகளாக
ஜகௌ — ஓதிற்று.

அத்வைதப்ரதிபாதகங்களான வேதவாக்யங்களை நிர்வஹித்தார் இஶ்லோகத்தில். பரம புருஷன் சேதநாசேதநங்களை சரீரமாகக்கொண்டிருப்பதுதான் ஸமாநாதிகரணநிர்தேசத்திற்கு ஹேதுவென்று நிரூபித்துத் தலைக்கட்டினார். சேதநாசேதந நியாமகத்வரூபமான ஸர்வேச்வரத்வம் ஸ்ரீமந்நாராயணனொருவனுக்கேயுள்ளதென்று ஸ்தாபிக்கிறார் இதில்.

இவ்வுலகத்திற்கு ஈச்வரனேயில்லையென்று வாதிப்பாரும், அநுமாநஸித்தனான ஈச்வரனுண்டென்று வாதிப்பாரும், த்ரிமூர்த்திஸாம்யத்தை வாதிப்பாரும், தங்களுக்கு அபிமதமான ஒரு தெய்வத்தை ஈச்வரனாக வாதிப்பாருமாய் இப்படி வேதப்பொருளை வியாகுலபடுத்திவிட்டார்கள் பலர்—என்றருளிச் செய்கிறார் பூர்வார்த்தத்தில். [ஸராஜகம்] இது நையாயிகர்களுடைய பக்ஷத்தைச் சொன்னபடி. राज्ञा सहितम्—सराजकम्। ஈச்வரனோடு கூடியது என்றபடி. வேதாந்திகளான நாமும் 'ஜகத்து' ஸராஜகம்' என்றுதானே சொல்லுகிறோம்; இது பரமதமானபடி யென்னென்னில்; "ஜடா: ஜஜல்பு:" என்று தலைக் கட்டுகையாலும் ஸமபிவ்யாஹாரத்தாலும் இது பரமதமேயாகும். நையாயிகர்கள் ஈச்வரனுளனென்று அங்கீகரிக்கச் செய்தேயும் சாஸ்த்ரயோநித்வாதிகரணப்படியே கொள்ளுகையன்றிக்கே 'अङ्कुरादिकं सकर्तृकं कार्यत्वात् घटवत्' என்றாற்போலே அநுமானத்தையிட்டு அதடியாக ஈச்வரனைக் கல்பிக்கிறார்களத்தனையாகையாலே இங்கே ஸராஜகம் என்றது அவர்களையாயிற்று. ஈச்வரனை ஜகத்துக்கு நிமித்தகாரணமாத்திரமாக அங்கீகரிப்பவர்களிறே அவர்கள் தாம்.

[அராஜகம்.] பூர்வமீமாம்ஸகர்கள் நிரீச்வரவாதிகளென்று ப்ரஸித்தராயிருப்பர்கள். தேவதாநிராகரணம் பண்ணிப்போருகிறார்களாயிற்று அவர்கள்.

[அநேகராஜம்.] *முதலாந்திருவுருவம் மூன்றென்பர்* (பெரிய திருவந்தாதி) என்கிறபடியே அரி அயன் அரன் மூவரும் ஜகத்துக்கு ஈச்வரர்கள் என்கிற த்ரிமூர்த்திஸாம்யவாதிகளின் பக்ஷத்தைப் பேசுகிறபடி. [யதாபிமதராஜகம்] 'हिरण्यगर्भः समवर्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत्' என்றதை மேலெழுந்தவாரியாகக் கண்டுவைத்து ஹிரண்யகர்ப்பனான பிரமனே ஈச்வரனென்பாரும், 'एक एव रुद्रो न द्वितीयाय तस्थे', 'शिवश्चासच्छिव एव केवलः' இத்யாதி ச்ருதிகளைக் கண்டு சிவனே ஈச்வரனென்பாருமாய் உண்டான அவ்வோ தேவதாந்தரபாரம்யவாதிகளின் பக்ஷத்தைச் சொன்னபடி. ஆக இங்ஙனே அவரவர்கள் மனம்போனவாறாக மயங்கிப் பேசி நின்றார்கள்; இவற்றிலொன்றும் யதாவஸ்த்திதமான வேதார்த்தமன்று என்றாராயிற்று முன்னடிகளால். இனி உண்மையான வைதிக ஸித்தாந்தத்தை உத்தரார்த்தத்தில் அருளிச் செய்கிறார்.

ஸ்ரீரங்கநாதனே! உலகத்திலுள்ள ஸமஸ்தமான சேதநாசேதநப்பொருள்கட்கும் தேவரீர் ஒருவர்தாமே ஈச்வரனென்னுமிடம் ச்ருதிஸித்தம் என்கிறார். அவசித்ரதா தரதமத்வ தர்க்காங்க்ஷா ச்ருதி: சிதசிதீ த்வயா நித்யராஜந்வதீ ஜகௌ என்று அந்வயிப்பது. ச்ருதியானது சேதநாசேதநங்களை தேவரீராகிற நித்யேச்வரனையுடையவைகளாகச் சொல்லுகின்றது என்றபடி. 'एको ह वै नारायण आसीन्न ब्रह्मा नेशानः', 'विश्वमेवेदं पुरुषस्तद्विश्वमुपजीवति। पतिं विश्वस्यात्मेश्वरं शाश्वतं शिवमच्युतम्। नारायणं महाज्ञेयं विश्वात्मानं परायणम्, नारायण परं ब्रह्म तत्त्वं नारायणः परः। नारायण परो ज्योतिरात्मा नारायणः परः। यच्च किंचिज्जगत्यस्मिन् दृश्यते श्रूयतेऽपि वा। अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः' இத்யாதி ச்ருதிசதங்களாலே ப்ரஹ்ம ருத்ராதி பாரம்ய நிஷேதபூர்வகமாக புருஷோத்தமனான ஸ்ரீமந்நாராயணனுக்கே காரணத்வ ப்ரதிபாதந புரஸ்காரேண சிதசிதீச்வரத்வம் ஓதப்பட்டதென்கை.

அவச சித்ரதா தாரதமத்வ தர்க்காங்கிகா என்ற ச்ருதிவிசேஷணத்தின் தாத்பரியம் ஏதென்னில்: चित्रता च तरतमत्वं च चित्रतातरतमत्वे ; अवशानां चित्रतातरतमत्वे ; [तयोर्विषये] यः तर्कः, सः अङ्गं यस्याः सा -என்று வ்யுத்பத்தி கொள்க. அவசமென்றது அஸ்வதந்த்ர மென்றபடி ; கர்மபரவசமென்றவாறு. கர்மபரவசர்களாயுள்ளவர்களுக்கு சித்ரத்வ மாவது—தேவமநுஷ்யத்வாதிவைசித்ர்யம்; தரதமத்வமாவது ஜ்ஞாநசக்த்யாதி தாரதம்யம்: இவை விஷயமான அநுகூல தர்க்கத்தை ஸஹகாரியாகக் கொண்டிருக்கை யாவது—'ஜகத்து ஸ்வதந்த்ரமாயிருக்குமேயானால் கர்மக்ருத தேவாதி வைசித்ர்யத்தை யும் ஜ்ஞாநசக்த்யாதி தாரதம்யத்தையும் உடைத்தாயிராது' என்கிற தர்க்கத்தைத் துணைகொண்டிருக்கை. இந்த ஜகத்து பரதந்த்ரமன்றாகில் விசித்திரமாகவும் நிம் நோந்நதமாகவும் கூடாதென்கிற தர்க்கத்தாலும் ச்ருதியாலும் ஸ்ரீமந்நாராயண னுடைய ஸர்வேச்வரத்வம் ஸித்தித்ததென்றவாறு.

[த்வயா] धान्येन धनवान् என்றவிடத்திற்போல அபேதார்த்தக த்ருதீயை. (25)

ब्रह्माद्याःसृज्यवर्गे भ्रुकुटिभटतयोद्घाटिता नावतारप्रस्तावे तेन न त्वं न च तव सदृशा विश्वमेकातपत्रम् ।
लक्ष्मीनेत्रा त्वयेति श्रुतिमुनिवचनैस्त्वत्परैरर्पयामः श्रीरङ्गाम्भोधिचन्द्रोदय ! जलमुचितं वादिकौतस्कुतेभ्यः ॥२६॥

ப்ரஹ்மாத்யாஸ் ஸ்ருஜ்யவர்க்கே ப்ருகுடிபடதயோத்காடிதா நாவதார
ப்ரஸ்தாவே, தேந ந த்வம் ந ச தவ ஸத்ருசா விச்வமேகாதபத்ரம்,
லக்ஷ்மீநேத்ரா த்வயேதி ச்ருதிமுநிவசநைஸ் த்வத்பரைரர்ப்பயாம:
ஸ்ரீரங்காம்போதிசந்த்ரோதய ! ஜலமுசிதம் வாதிகௌதஸ்குதேப்ய:. (26)

| | | | |
|---|---|---|---|
| ஹே ஸ்ரீரங்க அம்போதி சந்த்ர உதய | ஸ்ரீரங்கமாகிற கடலுக்கு சந்திரனுதித்தாற்போல் ஸம்ருத்தி யளிக்கும்பெருமானே !, | தவ ஸத்ருசா: ச ந | தேவரீரை யொத்தவர்களு மல்ல ; |
| ப்ரஹ்ம ஆத்யா: | பிரமன் முதலான தேவர்கள் | லக்ஷ்மீநேத்ரா | திருமகள் கொழுநரான |
| ப்ருகுடி படதயா | (தேவரீருடைய) புருவநெறிப்புக்குக் கைகட்டிக்காத்திருப்பவர்களாதலால் | த்வயா | தேவரீராலே |
| | | விச்வம் | இவ்வுலகமெல்லாம் |
| | | ஏக ஆதபத்ரம் | அத்விதீய சாஸனமுடையது |
| | | இதி | என்று |
| ஸ்ருஜ்யவர்க்கே | படைக்கப்படுமவர்களின் வகுப்பில் | த்வத்பரை: | தேவரீரையே விஷயமாகவுடைய |
| உத்காடிதா: | ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கிறார்கள் ; | ச்ருதி முநி வசனை: | வேதங்களையும் மஹர்ஷிவசனங்களையுங்கொண்டு |
| அவதார ப்ரஸ்தாவே | (ராமக்ருஷ்ணாதி) அவதாரங்கள் சொல்லுமிடத்தில் | வாதிகௌதஸ்குதேப்ய: | குதர்க்கவாதிகளின் பொருட்டு |
| ந (உத்காடிதா:) | (அவர்கள் கூறப்பட்டிருக்க) வில்லை ; | உசிதம் ஜலம் | அவர்களுக்குத் தகுந்த தர்ப்பண ஜலத்தை |
| தேந | ஆகையினால் | | |
| த்வம் ந | (அவர்கள்) தேவரீர் அல்ல ; | அர்ப்பயாம: | தருகிறோம். |

இந்த ச்லோகம் கீழ்ச்லோகத்திற்கே விவரணமாயிருக்கின்றது. பிரமன் முதலா னோர் ஈச்வரர்களல்லரோ? हिरण्यगर्भस्समवर्तताग्रे இத்யாதி ச்ருதிகளாலே அவர்களுடைய பாரம்யமும் ப்ரதிதமாகாநின்றதில்லையோவென்ன; அவர்கள் 'यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै' என்றும் 'ब्रह्मणः पुत्राय ज्येष्ठाय' என்றும் ஸ்ருஜ்யகோடியில் பக வச்சாலநாநுவர்த்திகளாக வெளியிடப்பட்டுள்ளார்களத்தனை போக்கி அவதாரப்ர கரணங்களில் தேவரீருடைய அவதாரங்களாகவும் சொல்லப்பட்டிலர்; இப்படி தேவ

ரவதாரங்களல்லாமையாலே அவர்கள் தேவரல்ல ; ஸ்ருஜ்யராகையாலே தேவரீரோடு ஒத்தவர்களுமல்லர் ; सहस्रशीर्षापुरुष: वेदाहमेतं पुरुषं महान्तम् இத்யாதி ப்ரமாணங்களைக்கொண்டு ச்ரிய:பதியான தேவரீராலேயே இந்த ஜகத்து ஸநாதமென்று அறுதியிடாநின்ற நாங்கள் ச்ருதியை விட்டு குதர்க்கமாத்ரத்தையே அவலம்பித்திருக்கின்ற துர்வாதிப்ரேதங்களுக்கு ஜலாஞ்ஜலி விடாநின்றோமென்கிறார். ... (26)

दोषोपधावधिसमातिशयानसंख्यानिर्लेपमङ्गलगुणौघदुघाष्षडेता: ।

ज्ञानैश्वरीशकनवीर्यबलार्चिषस्त्वां रङ्गेश ! भास इव रत्नमनर्घयन्ति ॥२७॥

தோஷோபதாவதிஸமாதிசயாநஸங்க்ய நிர்லேபமங்கலகுணௌகதுகாஷ் ஷடேதா:,
ஜ்ஞாநைச்வர்சகநவீர்யபலார்ச்சிஷஸ் த்வாம் ரங்கேச ! பாஸ இவ ரத்நமநர்க்கயந்தி. (27)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கேச ! | ஸ்ரீரங்கநாதரே ! | துகா: | சுரக்கின்ற |
| தோஷ — | குற்றமென்ன | ஏதா: | இந்த |
| உபதா — | உபாதியென்ன | ஜ்ஞாந ஐச்வர்ய சகந வீர்ய பல அர்ச்சிஷ. | ஞானம் ஐச்வர்யம் சக்தி வீர்யம் தேஜஸ் என்கிற |
| அவதி — | எல்லையென்ன | | |
| ஸம — | ஸத்ருசவஸ்துவென்ன | | |
| அதிசயாந — | மேற்பட்டவஸ்துவென்ன | ஷட் | ஆறு குணங்கள் |
| ஸங்க்யா — | எண்ணிக்கை யென்ன | த்வாம் | தேவரீரை |
| நிர்லேப | (ஆகிய இவற்றின்) ஸம்பந்தமில்லாத | ரத்நம் பாஸ: இவ அநர்க்கயந்தி | ரத்நத்தை ஒளிகள் பெருமைப் படுத்துவதுபோலப் பெருமைப் படுத்துகின்றன. |
| மங்கலகுண — | கல்யாண குணங்களின் | | |
| ஓக — | ஸமூஹத்தை | | |

ஆக இவ்வளவும் ப்ரமாணப்ரமேய பரிஷ்காரம் செய்தருளினாராயிற்று. பாஹ்ய குத்ருஷ்டி நூல்களைக் கழித்து வேதங்களே பரமப்ரமாணமென்று ஸ்தாபித்து, அவர் தெய்வங்களைக் கழித்து ஸ்ரீரங்கநாதனே பரதேவதையென்று ஸ்தாபித்தருளின வநந்தரம் அப்பெருமானுடைய திருக்குணங்களையும் தத்பரிவாஹரூபங்களான திருவவதாரங்களையும் அநுபவிக்கக் கோலி, முந்துறத் திருக்கல்யாண குணங்களிலே வாய் வைக்கிறார். உயர்வற வுயர்நலமுடையவனான எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்கள் * संख्यातुं नैव शक्यन्ते கணக்கறு நலத்தனன்* என்கிறபடியே கணக்குக்கு எட்டாதவைகளானாலும் ‘ तवानन्तगुणस्यापि षडेव प्रथमे गुणा: ’ இத்யாதிப்படியே ஜ்ஞாந சக்திபலைச்வர்யவீர்யதேஜஸ்ஸுக்களென்ற குணஷட்கம் பகவச்சப்தார்த்தநிர்வாஹகமாகையாலே அந்த ஆறு குணங்களையும் மேல் ச்லோகந் தொடங்கி க்ரமேண விவரிக்கப் புகுகிறாராய், இதில் ஸமுதாயத: அந்த குணங்களால் தேவரீர் பெருமதிப்புப் பெறுகின்றீரென்கிறார்.

தோஷ என்று தொடங்கி துகா: என்னுமளவும் ஓரே ஸமஸ்தபதம். இங்ஙனன்றிக்கே, தோஷோபதாவதிஸமாதிசயா: என்றும், நஸங்க்யா: என்றும், நிர்லேப... துகா: என்றும் மூன்று பதமாகப் பிரித்து ஸம்ஸ்க்ருதவ்யாக்யாதா வியாக்கியானித்தது ஒரு படியாலும் பொருந்தத் தக்கதன்று.

குற்றமற்றவைகளும் உபாதியற்றவைகளும் எல்லையற்றவைகளும் ஒப்பற்றவைகளும் உயர்த்தியற்றவைகளும் கணக்கற்றவைகளுமான தயாக்ஷாந்த்யௌதார்யாதி கல்யாணகுணங்கள் யாவை, அவற்றுக்கு ஊற்றுவாயாக ஜ்ஞாநாதிஷட்குணங்கள் இருக்கின்றன என்பது இந்த ஸமஸ்தபதத்தின் கருத்து. தத்வத்ரயத்தில் ஈச்வர ப்ரகரணத்தில்—“இவனுடைய ஜ்ஞாநசக்த்யாதி கல்யாணகுணங்கள் நித்யங்களாய் நிஸ்ஸீமங்

களாய் நிஸ்ஸங்க்யங்களாய் நிருபாதிகங்களாய் நித்யங்களாய் ஸமாநாதிகரஹிதங்களாயிருக்கும்'' என்று விட்டு மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி ஸேவிப்பது.

ஜ்ஞானமாவது—*यो वेत्ति युगपत्सर्वं प्रत्यक्षेण सदा स्वतः* என்கிறபடியே ஸர்வகாலத்திலுமுண்டான ஸர்வபதார்த்த ஸாக்ஷாத்காரம். பலமாவது.—* स दाधार पृथिवीं द्यामुतेमाम्, विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत्* இத்யாதிப்படியே உபய விபூதியையும் அநாயாஸேந வஹிக்க வல்லபடிக்கு. * பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமேயாள்கின்ற வெம்பெருமானிறே. ஐச்வர்யமாவது—* क्षरात्मानावीशते देव एकः* என்கிறபடியே இப்படி தரித்த ஜகத்தைத் தன் குடைநிழலின் கீழே அமுக்கி ஆள வல்லவனுகையாகிற நியந்த்ருத்வம். வீர்யமாவது—*न श्रमो न च खेदस्ते जगद्धारणशासने* என்கிறபடியே ஜகத்தாரணநியமநங்களிலே சாரீரமான க்லேசமொன்றுமின்றிக்கேயிருக்கை. சக்தியாவது—*पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते, चेष्टा तस्याप्रमेयस्य व्यापिनोऽव्याहतात्मिका* இத்யாதிப்படியே. ஏறிட்டுக்கொண்டதொரு காரியம் முட்டுப்படாதபடி செய்து தலைக்கட்டவற்றான ஸாமர்த்தியம். தேஜஸ்ஸாவது—* रकारादीनि नामानि रामत्रस्तस्य रावण । रत्नानि च रथाश्चैव त्रासं संजनयन्ति मे ॥ (ஸ்ரீராமா-3-39-17) என்கிறபடியே எதிரிகள் குடல் குழம்பும்படியான மதிப்பு. அன்றிக்கே, பஹுப்ரயத்நஸாத்யமானவற்றை ஸஹகார்யந்தரநிரபேக்ஷமாக அல்ப ப்ரயத்நத்தாலே தலைக்கட்டவல்லவனுகையாகவுமாம். *सम्यक्तु नैव शक्यन्ते गुणा दोषाश्च शार्ङ्गिणः । आनन्त्यात् प्रथमो राशिः अभावादेव पश्चिमः ॥* இத்யாதிப்படியே எண்ணிறந்துள்ள குணகணங்களுக்கு இந்த ஆறு குணங்களும் ஊற்றுவாய் என்னுமிடத்தை இவருடைய திருத்தகப்பனுரான ஆழ்வான்தாமும் வரதராஜஸ்தவத்திலே (15) *षाड्गुण्यं विशदं वलमतुलम्* இத்யாதி ச்லோகத்தாலே அருளிச்செய்தார்.

[ரத்நம் பாஸ இவ த்வாம் ஷடேதா: அநர்க்கயந்தி.] ரத்நத்தை ஒளியானது பெருவிலையனுகச் செய்வதுபோல, தேவரீரை இக்குணங்கள் பெருமைப்படுத்துகின்றனவென்றபடி.

ஸ்ரீ வைகுண்டஸ்தவத்தில் * सर्वस्य चैव गुणतो हि विलक्षणत्वम् * என்றும், ஸுந்தரபாஹுஸ்தவத்தில் *गुणजं गुणिनो हि मङ्गलत्वम्* என்றும், வரதராஜஸ்தவத்தில் *गुणायत्त श्रेष्ठे* என்றுமுள்ள ச்லோகங்களினுல் எம்பெருமானுடைய ஸம்பந்தத்தினுல் குணங்களுக்குப் பெருமையேயன்றி குணங்களினுல் எம்பெருமானுக்குப் பெருமையென்பதில்லை என்று அருளிச் செய்யப்பட்டிருக்க, இந்த ச்லோகத்தில் அதற்கு மாருக எம்பெருமான் குணங்களினுல் வீறுபெறுவதாகச் சொல்லுகிறபடி எங்ஙனேயென்று சங்கிக்க வேண்டா ; இரண்டுபடியும் பேசலாம்படியிறே யிருப்பது. ... ... (27)

युगपदनिशमक्षैः स्वैः स्वतो वाऽक्षकार्ये नियममनियमं वा प्राप्य रङ्गाधिराज ! ।
करतलवदशेषं पश्यसि स्वप्रकाशं तदवरणममोघं ज्ञानमाम्नासिषुस्ते ॥२८॥

யுகபதநிசமக்ஷை: ஸ்வை: ஸ்வதோ வாக்ஷகார்யே
நியமமநியமம் வா ப்ராப்ய ரங்காதிராஜ !
கரதலவதசேஷம் பச்யஸி ஸ்வப்ரகாசம்
ததவரணமமோகம் ஜ்ஞாநமாம்நாஸிஷுஸ் தே. (28)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கராஜ! | ஸ்ரீ ரங்கநாதரே!, | அநிசம் | எப்போதும் |
| (த்வம்) | தேவரீர் | அசேஷம் | (உபய விபூதியிலுமடங்கிய) அனைத்தையும் |
| ஸ்வகை: அக்ஷை: | தனது இந்திரியங்களினாலேயாதல் | யுகபத் | ஏக காலத்தில் |
| ஸ்வத: வா | (இந்திரியங்களின் அபேக்ஷையின்றியே ஸ்வயமாகவேயாதல் | கரதலவத் | உள்ளங்கையைப் பார்ப்பது போல |
| அக்ஷகார்யே | கண் முதலிய இந்திரியங்களின் தொழிலாகிய பார்வை முதலியவற்றில் | பச்யஸி | ஸாக்ஷாத்கரிக்கிறீர்; |
| நியமம் | ஒரு வ்யவஸ்தையையோ | ஸ்வப்ரகாசம் | ஸ்வயமேவ ப்ரகாசிப்பதும் |
| அநியமம் வா | அப்படி வ்யவஸ்தை யொன்றுமில்லாமையையோ | அவரணம் | ஆவரணமற்றதும் |
| ப்ராப்ய | அடைந்து | அமோகம் | யதார்த்தமுமான |
| | | தத் | அந்த ஸாக்ஷாத்காரத்தை |
| | | தே | தேவரீருடைய |
| | | ஜ்ஞானம் | ஞானமாக |
| | | ஆம்நாஸிஷு: | (உபநிஷத்துக்கள்) ஓதி வைத்தன. |

இச்ச்லோகத்தில் நிர்த்தேசிக்கப்பட்ட ஆறுகுணங்களினுடையவும் ஸ்வரூபத்தை அடைவே விவரித்தருள்வதாகத்திருவுள்ளம்பற்றி ஜ்ஞாநகுணஸ்வரூபநிரூபணம் செய்தருளுகிறாரிரண்டு ச்லோகங்களாலே. எப்போதும் ஏககாலத்தில் ஸ்வத ஏவ எல்லாவற்றையும ஸாக்ஷாத்கரிக்கை எம்பெருமானுடைய ஞானமென்றபடி. திருக்கண் முதலான இந்திரியங்களின் வழியாகவாதல் தர்மபூதஜ்ஞாநத்தாலேயாதல், இந்த்ரியங்களிலும் உலகத்தாருடையபடியாக கண்ணாலே ரூபத்தை க்ரஹிப்பது, காதாலே சப்தத்தை க்ரஹிப்பது என்றிப்படியான நியதி கொண்டாதல், எந்த இந்த்ரியத்தாலும் எந்த விஷயத்தையும் க்ரஹிப்பதான அநியமங் கொண்டாதல் ஸகல பதார்த்தங்களையும் ஏகக்ஷணவச்சேதந கரதலாமலகம் போல நித்யமாக தேவரீர் ஸாக்ஷாத்கரிக்கிற ஸாக்ஷாத்காரத்தை ஸ்வப்ரகாசமாயும் ஆவரணரஹிதமாயும் யதார்த்தமாயுமிருந்துள்ள ஜ்ஞாநமென்று உபநிஷத்துக்கள் ஓதுகின்றன என்றாராயிற்று.

ஆக்ஷகார்யே என்றும் பதம் பிரிக்கலாம்; ஆக்ஷமென்று तदुचितवृत्ति ; अक्षसंबन्धिनि कार्ये என்கை. ... ... ... ... (28)

नयनश्रवणो दृशा शृणोषि अथ ते रङ्गपते ! महेशितुः ।
करणैरपि कामकारिणः घटते सर्वपथीनमीक्षणम् ॥२९॥

நயநச்ரவணோ த்ருசா ச்ருணோஷி அத தே ரங்கபதே மஹேசிது:,
கரணைரபி காமகாரிண: கடதே ஸர்வபதீநமீக்ஷணம். (29)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கபதே! | ஸ்ரீரங்கநாதரே!, | கரணை: அபி | மற்ற இந்திரியங்களைக் கொண்டும் |
| நயந ச்ரவண: | கண்களாக ஆகின்ற காதுகளையுடையவராய் | காமகாரிண: | இஷ்டப்படி செய்கின்ற |
| | | மஹேசிது: | விலக்ஷண ஈச்வரனான |
| த்ருசா | திருக்கண்ணாலே | தே | தேவரீர்க்கு |
| ச்ருணோஷி | கேட்கின்றீர்; | ஸர்வபதீநம் | ஸர்வதோமுகமான |
| அத | பின்னையும், | ஈக்ஷணம் | ஸாக்ஷாத்காரமானது |
| | | கடதே | கூடாநின்றது. |

* * *—இச்ச்லோகத்தில் அநியமம் வா ப்ராப்ய என்றதை விவரியா நின்று கொண்டு எம்பெருமான் ஏககாலத்தில் அனைத்தையும் ஸாக்ஷாத்கரிக்கும்படியைத் திடப்படுத்துகிறாரிதில். கண்ணாலே காணத்தான் கூடும், காதாலே கேட்கத்தான்

கூடும் என்றிப்படிப்பட்ட நியமங்கள் ஸாமக்ரியன்றி எம்பெருமானுக்கு இல்லையே; [யசச்ரவண:] नयनेन्द्रियकार्यकरश्रवणेन्द्रियो भवन्नित्यर्थः । செவியாலே காண்பாய். [த்வசா ச்ருணோஷி] கண்ணாலே கேட்பாய். [அத கரணைராபி காமகாரிண:] இரண்டு இந்திரியங்களை யெடுத்துச் சொன்னது மற்றவையும இப்படியேதான் என்று காட்டினபடியே. மற்றுள்ள இந்திரியங்களாலும் திருவுள்ளமானபடி எதையும் க்ரஹிக்கவல்ல தேவரீருக்கு. [ஸர்வபதீநமீக்ஷணம் கடதே] सर्वान् पथो मार्गान् व्याप्नोतीति सर्वपथीनम् : ஸர்வதோதிக்கமான. (அதாவது) லௌகிகஸாக்ஷாத்காரவிலக்ஷணகாரமாய் விச்வங்முகமான ஸாக்ஷாத்காரமானது. [கடதே] * सहस्रशीर्षा पुरुषः सहस्राक्षस्सहस्रपात् । * विश्वतश्चक्षुरुत विश्वतोमुखो विश्वतो हस्त उत विश्वतस्पात् * यस्सर्वज्ञस्सर्ववित् * पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च* இத்யாதி ச்ருதிஸித்தமான பெருமை பொருந்திய தேவரீருக்குக் கூடாததொன்றுண்டோ ?

'ஸார்வபதீநம்' என்று தீர்க்கதியான பாடம் வ்யாகரணத்திற்குச்சேராது. *तस्सर्वादेरित्यादिना खः. *विषयेषु नैष्ठिकानां सर्वपथीना मतिः क्रमते* என்றுன் முராரிமிச்ரனும்.(29)

सार्वज्ञ्येनाज्ञमूलं जगदभिदधतो वारितास्साक्षिमात्रात् सांख्योक्तात्कारणं त्वां परयति भगवन्नैश्वरी रङ्गशायिन् ! ।
अप्रेर्योऽन्यैः स्वतन्त्रोऽप्रतिहति सदसत्कर्मवैचित्र्या विचित्रं यत्रेच्छालेशतस्त्वं युगपदगणयन् विश्वमाविश्चकर्थ ॥ ३०॥

ஸார்வஜ்ஞ்யேநாஜ்ஞமூலம் ஜகதபிதததோ வாரிதாஸ் ஸாக்ஷிமாத்ராத்
ஸாங்க்யோக்தாத் காரணம் த்வாம் பரயதி பகவந் ஐச்வரீ ரங்கசாயிந்,
அப்ரேர்யோந்யைஸ் ஸ்வதந்த்ரோப்ரதிஹதி ஸதஸத்கர்மவைசித்ர்யா விசித்ரம்
யத்ரேச்சாலேசதஸ்த்வம் யுகபதகணயந் விச்வமாவிச்சகர்த்த. (30)

| | | | |
|---|---|---|---|
| ஹேபகவந் ரங்கசாயிந் ! | ஸ்ரீரங்கசாயி பகவானே !, | விசித்ரம் | பலவகைப்பட்ட |
| ஜகத் | இவ்வுலகத்தை | விச்வம் | ஸகலத்தையும் |
| அஜ்ஞ மூலம் | அசேதநத்தினால் படைக்கப்படுவதாக | இச்சாலேசத: | ஸங்கல்ப லேசத்தினால் |
| அபிதத: | சொல்லுகிறவர்கள் | அகணயந் | அவலீலையாக நினைத்தவராய் |
| ஸார்வஜ்ஞ்யேந | தேவரீருடைய ஸர்வஜ்ஞத்வத்தினால் | யுகபத் | ஏக காலத்தில் |
| வாரிதா: | நிரஸிக்கப்பட்டார்கள் | அப்ரதிஹதி | தடையின்றி |
| யத்ர (ஸதி) | யாதொரு ஐச்வர்ய குணமிருக்குமளவில் | ஆவிச்சகர்த்த | படைத்திரோ, |
| அந்யை: | பிறராலே | (ஸா) ஐச்வரீ | அப்படிப்பட்ட ஐச்வர்யமென்கிற குணமானது |
| அப்ரேர்ய: | ஏவப்படாதவராய் | காரணம் | (ஜகத்துக்கு) உபாதாநகாரணமாயிருக்கின்ற |
| ஸ்வதந்த்ர: | ஸ்வாதீநரான | த்வாம் | தேவரீரை |
| த்வம் | தேவரீர் | ஸாங்க்ய உக்தாத் | ஸாங்க்யர்களினால் சொல்லப்பட்ட |
| ஸத் அஸத் கர்ம வைசித்ர்யா | புண்யபாப ரூபகர்மங்களின் விசித்திரவகையினாலே | ஸாக்ஷிமாத்ராத் | ஸாக்ஷிமாத்ரமான புருஷனிற் காட்டில் |
| | | பரயதி | வேறுபடுத்துகின்றது. |

* * * கீழிரண்டு ச்லோகத்தாலும் நிரூபிக்கப்பட்ட ஜ்ஞாநத்தினால் பலித்த அம்சத்தை இதில் முதல் பாதத்தாலே அருளிச்செய்து, மற்ற மூன்று பாதங்களினால், ஐச்வர்யமென்கிற குணத்தின் ஸ்வரூபத்தையும் அதனால் பலிக்கும் அம்சத்தையும் அருளிச்செய்கிறார்.

[ஸார்வஜ்ஞ்யேந] தேவரீர் ஸர்வஜ்ஞரென்றும், ஸர்வஜ்ஞரான தேவரீரே ஜகத்துக்கு மூலமென்றும் ஸித்தித்தபடியாலே. [ஜகத் அஜ்ஞமூலம் அபிதததஃ (துர்வாதிநஃ) வாரிதாஃ கண்டிதா அபூவன்.] 'அசேதநமான ப்ரக்ருதியையே மூலமாகக் கொண்டது ஜகத்து' என்று சொல்லுகின்ற ஸாங்கியர் நிரஸிக்கப்பட்டாராவர். "காபிலர் ப்ரதாநம் காரணமென்றார்கள்; ப்ரதாநம் அசேதநமாகையாலும் ஈச்வரன் அதிஷ்டியாதபோது பரிணமிக்கமாட்டாமையாலும் ஸ்ருஷ்டிஸம்ஹார வ்யவஸ்தை கூடாமையாலும் அதுவும் சேராது." [தத்வத்ரயம்—ஈச்வரப்ரகரணம்.] என்ற ஸ்ரீஸூக்திகளும் அவ்விடத்து வியாக்கியான ஸ்ரீஸூக்திகளும் நோக்கத்தக்கன. 'நிர்விசேஷமாகையாலே அஜ்ஞமான ப்ரஹ்மத்தை மூலமாகவுடையது ஜகத்து' என்று சொல்லுகிற சாங்கராதிகள் நிரஸ்தர் என்றுஞ் சொல்லுவர்கள்.

[ஐச்வரீ காரணம் த்வாம் ஸாங்க்யோக்தாத் ஸாக்ஷிமாத்ராத் பரயதி] ஐச்வர்யமென்னும் குணத்தின் ஸ்வரூபத்தை மேல் உத்தரார்த்தத்திலே அருளிச்செய்கிறாராய் அதனால் பலித்த அம்சத்தை இங்கு முந்துற அருளிச் செய்கிறார். ईश्वरस्य भाव:—ऐश्वरी ஐச்வர்யகுணமானது. என்ன செய்கிறதென்றால்; இதுவும் ஸாங்க்யருடைய வாதத்தை நிரஸிக்கிறதென்கிறார். 'அப்ரஹ்மாத்மிகையான ப்ரக்ருதியானது மஹதாதி கார்யவர்க்கத்தை உண்டாக்கும்போது புருஷன் ஸாக்ஷியாயிருந்து ஸந்நிதிமாத்ரத்தாலே உபகாரகனாகிறான்' என்றாயிற்று ஸாங்கியர் சொல்லுவது. ஜகத்காரணத்வோபயோகியான ஐச்வர்யத்தோடுகூடிய தேவரீர் காரணமாகாநிற்கையால் ஸாங்க்யவாதம் தள்ளுண்டதென்க.

அப்ரேர்யோ ந்யைஃ என்று தொடங்கி ஐச்வர்யமாவது இன்னதென்கிறார். வேறொருவரால் நியமிக்கப்படாதவனாய் நிரங்குசஸ்வதந்த்ரனாயிருந்துகொண்டு விசித்திரமான இந்த ஜகத்து முழுவதையும் தட்டுத்தடங்கலின்றி அவலீலையாய் ஏககாலத்தில் ஸ்ருஷ்டிக்கவல்லனாகைதான் ஐச்வர்யமென்றதாயிற்று. தத்வத்ரயத்திலே— "இவன் காரணமாகிறது அவித்யாகர்மபரதந்த்ர்யோகாதிகளாலன்றிக்கே ஸ்வேச்சையாலே. ஸ்வஸங்கல்பத்தாலே செய்கையாலே இதுதான் வருத்தமற்றிருக்கும்." என்ற ஸூக்திகளுங் காண்க.

[ஸதஸத்கர்ம சைத்ர்யா விசித்ரம்] புண்யபாபரூப கர்மாநுகுணமாக தேவ மநுஷ்ய திர்யகாதிரூபேண ஜநித்தும் அது தன்னிலும் விவிதநீசோச்சபாவசாலியாகவும் இப்படி உச்சாவசமாகவுள்ள ஜகத்தை என்றபடி. चित्रस्य भाव:—चैत्री.

सांख्योक्तात् कारणात् என்றும் பாடமுண்டென்பர். (30)

कार्येऽनन्ते स्वतनुमुखतस्त्वामुपादानमाहुः सा ते शक्तिस्सुकरमितरच्चेति वेलां विलङ्घ्य ।
इच्छा यावद्विहरति सदा रङ्गराजानपेक्षा सैवैषानादतिशयकरी सोर्णनाभौ विभाव्या ॥३१॥

கார்யேநந்தே ஸ்வதநுமுகதஸ் த்வாமுபாதாநமாஹு:
ஸா தே சக்திஸ் ஸுகரமிதரச் சேதி வேலாம் விலங்க்ய,
இச்சா யாவத் விஹரதி ஸதா ரங்கராஜாநபேக்ஷா
ஸைவைஷாநாத் அதிசயகரீ ஸோர்ணநாபௌ விபாவ்யா. 31

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கராஜ! அநபேக்ஷா | ஸ்ரீரங்கநாதனே! ஸ்வதந்த்ரமான | ஸுகரம் இதரத் இதி வேலாம் விலங்க்ய | 'இது செய்யக்கூடியது, இது செய்ய முடியாதது' என்கிற வொரு ஸரம்பை மீறி |
| தே இச்சா | தேவரீருடைய ஸங்கல்பமானது | ஸதா | எப்போதும் |

| | | | |
|---|---|---|---|
| யஸ்ய | என்னும் [முழுவதும்.] | உபாதாநம் | உபாதானகாரணமாக |
| ப்ரவ்ருத்தி | உலாவுகின்றதோ | ஆஹு: | (வைதிகர்கள்) சொல்லுகின்றனர்; |
| ஸா | அப்படிப்பட்ட ஸங்கல்பமே | ஸா சைவ | அந்த சக்திதான் |
| தே | தேவரீருடைய | [illegible] | பாசுபதமத ப்ரக்ரியையிற் காட்டிலும் |
| சக்தி | சக்தியென்கிற குணமாகும். (இப்படிப்பட்ட சக்தி தேவரீருக்கு இருக்கின்றமையால்தான்) | அதிசயகரீ | வ்யாவ்ருத்தி ஸம்பாதகமாயின்றது; |
| அனந்தே கார்யே | எல்லையில்லாத கார்ய வர்க்கங்களில் | ஸா | அந்த சக்தி, |
| ஸ்வ தநு முகத: | தேவரீருடைய சரீரமாகிய சேதநாசேதநத்வாரா | [illegible] | வெத்திப் பூச்சியினிடத்தில் |
| த்வம் | தேவரீரை | விபாவ்யா | காணத்தக்கது. |

* * *—சக்தி என்னும் குணத்தின் ஸ்வரூபத்தை அருளிச்செய்கிறார். ஈச்வரன் தானே உலகுக்கெல்லாம் உபாதாநகாரணமாக இருக்கைதான் சக்தியென்கிறார். உலகில் எந்தக்காரியம் பிறக்கவேணுமானாலும் காரணம் மூவகைப்பட்டிருக்கும்:—நிமித்த காரணம், உபாதாந காரணம், ஸஹகாரி காரணமென்று. இவற்றில் உபாதாநமான வஸ்துவை கார்யரூபேண விகரிப்பிக்கும் கர்த்ருவஸ்து (कर्तृवस्तु) நிமித்த காரணமெனப்படும். கார்ய ரூபேண விகாரப்படுதற்கு யோக்யமான வஸ்து உபாதாநகாரணமெனப்படும். கார்யம் பிறப்பதற்கு உபகரணமான வஸ்து ஸஹகாரி காரணமெனப்படும். கடபடாதிகார்யவஸ்துக்களுக்கு குலால குவிந்தாதிகள் நிமித்த காரணமாய், மண் நூல் முதலியன உபாதாந காரணமாய், தண்ட சக்ரம் வேமதண்டம் முதலியன ஸஹகாரி காரணமாயிருக்கக் காண்கிறோம். இங்ஙனன்றிக்கே ஜகத்தாகிற காரியம் பிறக்குமிடத்து ஈச்வரனே இம் மூவகைக் காரணமுமாவன். எங்ஙனே யென்னில்; बहु स्याम् என்கிற ஸங்கல்ப விசிஷ்டனாய்க்கொண்டு நிமித்த காரணனாயும் நாமரூப விபாக அநர்ஹமாம்படி தன்னுடனே கூடிக்கிடக்கிற ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்டனாய்க் கொண்டு உபாதாந காரணமாயும் ஜ்ஞாந சக்த்யாதி விசிஷ்டனாய்க் கொண்டு ஸஹகாரி காரணமாயுமிருப்பன். இதில் உபாதாந காரணத்வம் ஈச்வரனுக்குப் பொருந்தாதென்று ப்ரபல ப்ரதிபக்ஷிகள் வாதிப்பர்கள். ப்ரஹ்மத்தினுடைய ஜகத் காரணத்வத்தைப் ப்ரதிபாதிக்கிற வேதாந்த ஸூத்திரத்தில் நிமித்த காரணத்வத்தை ஸாதித்தவநந்தரம் * प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात् * என்ற ஸூத்ரத்தாலே உபாதாந காரணத்வத்தையும் பாதராயணர் ஸ்தாபித்து வைத்தார். அப்படிப்பட்ட உபாதாநகாரணத்வம் ஈச்வரனுக்கு சக்தி யென்னும் குணத்தினால் பொருந்துகின்றதென்பது இந்த ச்லோகத்தில் காட்டப்படுகிறது.

ஈச்வரனை உபாதாந காரணமாகக் கொண்டால் அவன்தானே ஜகத்தாகப் பரிணமிக்கிறானென்றதாகும். அப்படியானால் ஈச்வரனுக்கு விகாரித்வம் சொன்னதாகிறது. * अविकाराय शुद्धाय * என்று இவனை நிர்விகாரனாகச் சொல்லுகிற ப்ரமாணங்களோடு விரோதிக்குமே யென்னில், சிதசித்ரூபவிசேஷணவிசிஷ்டனை தானே ஜகத்தாய்ப் பரிணமிக்குமிடத்தில் விசேஷ்யமான ஸ்வரூபத்துக்கு விகாரமில்லாமையாலே நிர்விகாரனென்னக்குறையில்லை யென்று பரிஹரித்தார்கள். ஸ்வரூபத்துக்கு விகாரமில்லையாகில் இவன்தானே ஜகத்தாய்ப் பரிணமிக்கிறானென்ற பரிணாமம் இவனுக்குண்டாம்படி யெங்ஙனே யென்னில்; அப்ருதக்ஸித்தமான சிதசித்ரூபவிசேஷணத்வாரா இவனுக்குப் பரிணாமமுண்டாகிறதென்று ஸமாதாநம் பண்ணினார்கள். அதுவே இங்கு முதல் பாதத்தில் சுருங்கச் சொல்லப்பட்டது.

[ஸாகரமிதரச்சேதித்யாதி.] 'இன்ன காரியம் எளிதாகச் செய்யக்கூடியது, இன்ன காரியம் வருந்திச் செய்யக்கூடியது, இன்ன காரியம் வருந்தியும் செய்ய முடியா

தது' என்கிற வ்யவஹாரங்கள் நம் திறத்திலேயன்றி ஈச்வர விஷயத்திலில்லை யில்லை. அவனுடைய ஸங்கல்பம் எங்கும் அப்ரதிஹதமாகச் செல்லு மென்க. இதுதான் ஷாட்குண்யத்தில் ஒன்றான சக்தியின் ப்ரபாவம். இந்த சக்தியடியாகவே ஈச்வரனுடைய உபாதாந காரணத்வம் நிர்வஹிக்கப்படுகிறது.

[அநபேக்ஷா இச்சா] உலகத்தில் அவித்யாகர்மநிபந்தநமாகவும் பரநியோக நிபந்தநமாகவும் காரணமாகை யுண்டாகையாலே அதனைக் குலைத்து இவனுடைய காரணத்வம் ஸ்வேச்சாதீநமென்று இதனால் காட்டப்படுகிறது.

நநு, ஸ்வரூபத்துக்கு விகாரமின்றியே ஸ்வசரீரபூதவிசேஷணத்வாரா கார்ய ஜாதத்துக்கெல்லாம் இவனே உபாதாநமாகை கூடுமோவென்ன, [ஸோர்ணநாபேஸ விபாவ்யா] என்கிறார். "ஒரு சிலந்திக்குண்டான ஸ்வபாவம் ஸர்வசக்திக்குக் கூடாதொழியாதிறே" என்றார் தத்வத்ரயத்தில் பிள்ளை லோகாசாரியரும். "அல்ப சக்திகமான சிலந்திக்கு ஸ்வரூப விகாரமின்றிக்கேயிருக்கச் செய்தே ஸ்வசரீரபூத விசேஷணமுகத்தாலே தந்துஜாதமான கார்யஜாதத்துக்குத் தான் உபாதாநமாம்படி யுண்டான ஸ்வபாவம், * पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते * என்றோதப்படுகிற ஸர்வசக்திக்குக் கூடாதொழியாதிறே யென்கை. * यथोर्णनाभिस्सृजते गृह्णते च, ऊर्णनाभिर्यथा सूत्रं स्वयं तद्ग्रसते पुनः। तथा सृष्टमखिलं स्वयं तद्ग्रसते हरिः ॥* என்னக் கடவதிறே" என்ற மணவாள மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தியும் காண்க.

நான்காவது பாதத்தில் "ஐசாநாத் அதிசயகர்" என்றதற்குச் சிலர் வேறுவகையான பொருள் கூறுவது பொருந்தாது. இந்த ப்ரகரணத்தில் ஜ்ஞானம் முதலிய ஆறுகுணங்களினுடையவும் ஸ்வரூபத்தை விவரிப்பதுடன் அந்தந்த குணங்களினாலேற்படுகிற பரமதகண்டனத்தையும் கூடவே அருளிச்செய்து வருகிறார். * ஸார்வஜ்ஞ்யேந அஜ்ஞமூலம் ஜகதபிததோ வாரிதாः * என்று கீழும், * பராச்ரிதகாரணவாரணம் * * ஸவிகாரகாரணமிதோ விநிவார்யம் * இத்யாதிகள் மேலும் சொல்லுகிற கணக்கிலே இங்கு (ஐசாநாத் அதியசகரீ) என்றதும் பரமதநிரஸநபரமேயாகவேணும். ஈசாநः—பசுபதிः; ஐசாநம்—பாசுபதமதப்ரக்ரியா. இதி ஸம்க்ஷேபः. (31)

स्वमहिमस्थितिरीश ! भृशक्रियोऽप्यकलितश्रम एव बिभर्षि यत् ।
वपुरिव स्वमशेषमिदं बलं तव पराश्रितकारणवारणम् ॥३२॥

ஸ்வமஹிமஸ்திதிரீச ! ப்ருசக்ரியோபி
அகலிதச்ரம ஏவ பிபர்ஷி யத்,
வபுரிவ ஸ்வமசேஷமிதம் பலம்
தவ பராச்ரிதகாரணவாரணம். (32)

| | | | |
|---|---|---|---|
| ஹே ஈச! | எம்பெருமானே! | ஸ்வம் வபுः இவ | தனது சரீரத்தைப்போல் |
| ஸ்வமஹிமஸ்திதிः (த்வம்.) | தன்னுடையதான மாஹாத்மியத்தில் நிலைநின்றிருக்கப்பெற்ற தேவரீர் | பிபர்ஷி | வஹிக்கின்றீர், |
| | | இதி யத் | என்பது யாதொன்றுண்டு |
| | | (தத்) | அது |
| ப்ருசக்ரியः அபி | அபரிமிதமான சேஷ்டிதங்களையுடையவரா யிருந்தபோதிலும், | தவ | தேவரீருடைய |
| | | பலம் | பலமென்ற குணம்; |
| | | இதம் | இக்குணமானது |
| அகலிதச்ரமः ஏவ | ஆயாஸமுண்டாகப் பெறாதவராகவே | பராச்ரித காரண வாரணம் | அந்யாதிஷ்டிதமாய்க் கொண்டு காரணமாவதை வ்யாவர்த்திப்பிக்கின்றது. |
| அசேஷம் (ஜகத்) | ஸகல லோகத்தையும் | | |

* * *—பல(बल)மென்னும் குணத்தின் ஸ்வரூபத்தையும் பல(फल)த்தையும் இதனாலருளிச்செய்கிறார், சாந்தோக்யோபநிஷத்தில் [7-24-1] * यत्र नान्यत्पश्यति *

என்று தொடங்கி * स भगवः कस्मिन् प्रतिष्ठित इति स्वे महिम्नि * என்று ஓதப்பட்டிரா நின்றது. ஸகல வஸ்துக்களும் ஒரு ஆதாரத்தை அபேக்ஷித்திருக்குமாகையாலே பகவானுக்கும் அங்ஙனம் ஒரு ஆதாரமிருக்கவேணுமே என்றெண்ணிய சிஷ்யன் 'அவனுக்கு எது ஆதாரம்?' என்று குருவைக் கேட்க, அதற்கு அவர் * ஸ்வே மஹிம்நி * என்று விடையளித்தார். ஸ்வே மஹிம்நி ப்ரதிஷ்டித: என்றபடி. பகவான் தம்முடைய மஹிமையையே ஆதாரமாகவுடையவர் என்று கருத்து. "स्वयंदासास्तपस्विन रतिवत् अनाधार इत्यभिप्रायः" என்பது உபநிஷத் பாஷ்யம். ஸ்ரீ பாஷ்யத்திலும் பூமாதிகரணத்தில் * धर्मोपपत्तेश्च * என்னும் ஸூத்ர பாஷ்யத்தில் "स्वे महिम्नीत्यनाधारत्वम्" என்றருளிச் செய்தார். அந்த உபநிஷத்வாக்யத்தைத் திருவுள்ளம்பற்றியே [ப்ரக்ருதச்லோகத்தில் ஸ்வமஹிமஸ்திதி: என்றார் பட்டர். தனக்கு ஒரு ஆதாரமின்றியே யிருந்துகொண்டு அளவுகடந்த வியாபாரங்களைச் செய்தருள்பவனாய் ஸகல சராசரங்களையும் சிறிதும் சிரமமின்றியே தன் சரீரத்தைத் தாங்குவது போலத் தாங்கி நிற்கை என்பது யாதொன்றுண்டு இதுதான் ஸ்ரீரங்கநாதனே! தேவரீருடைய பலமென்று சொல்லப்படுகிறது. இந்த குணத்தினால் தேவரீருக்குத் தேறுவது யாதெனில்; பராச்ரித காரணவாரணம்] உலகத்தில் காணப்படுகிற காரணப்பொருள்களெல்லாம் அந்யாதிஷ்டிதங்களாய்க் கொண்டே கார்யோத்பாதநம் பண்ணக் காண்கின்றோமாதலால், எம்பெருமான் செய்கிற கார்யஸ்ருஷ்டிக்ரமம் அப்படிப்பட்டதன்று; இது லோகவிலக்ஷணம் என்று தெளிவு பிறப்பிப்பதே இந்த குணத்திற்கு ப்ரயோஜநமென்கிறார். வாரணம் என்றது வ்யாவர்த்தகம் என்றபடி. பராச்ரிதகாரணங்களிற் காட்டிலும் தேவரீரை வ்யாவ்ருத்தராக ஆக்குகின்றது இந்த பலமென்கிற குணமென்றாராயிற்று.

अनन्याधारतया समस्तविदचिल्लिवहवहनेऽपि अश्रमत्वं बलम्। पराधिष्ठितकारणेभ्यो भगवतो वैलक्षण्यसंपादनं तत्फलम् ॥ என்றதாயிற்று.

स्वे महिम्नि स्थितिः यस्य सः—स्वमहिमस्थितिः। भृशं क्रियाः यस्य सः भृशक्रियः। (32)

मृगनाभिगन्ध इव यत्सकलार्थान्निजसन्निधेरविकृतो विकुर्वोषि।
प्रियरङ्ग! वीर्यमिति तत्तु वदन्ते सविकारकारणमितो विनिवार्यम् ॥३३॥ வீர்யம

ம்ருகநாபிகந்த இவ யத் ஸகலார்த்தாந்
நிஜஸந்நிதேரவிக்ருதோ விக்ருணோஷி
ப்ரியரங்க! வீர்யமிதி தத் து வதந்தே
ஸவிகார காரணமிதோ விநிவார்யம். (33)

| | | | |
|---|---|---|---|
| ஹே ப்ரிய ரங்க! | அன்புக்கிடமான திருவரங்கத்தையுடைய பெருமானே! | விக்ருணோஷி | விகாரப்படுத்துகின்றீர்; |
| த்வம் | தேவரீர் | (இதி யத்) | என்பது யாதொன்றுண்டோ, |
| ம்ருகநாபி கந்த: இவ | கஸ்தூரியின் பரிமளம்போல | தத் | அதனை |
| (ஸ்வயம்) அவிக்ருத: | தாம் விகாரப்படாதவராகவே | வீர்யம் இதி | வீர்யகுணமென்று |
| நிஜஸந்நிதே: | தமது ஸந்நிதான மாத்திரத்தினால் | வதந்தே | (வைதிகர்கள்) சொல்லுகின்றனர்; |
| ஸகல அர்த்தாந் | ஸமஸ்த பதார்த்தங்களையும் | இத: | இதனால் |
| | | ஸவிகார காரணம் | விகாரத்தையுடைத்தாய்க் கொண்டு காரணமாகின்றமை |
| | | விநிவார்யம் | வ்யாவர்த்திக்க வுரியது. |

* * * இதில், வீர்ய மென்கிற குணத்தின் ஸ்வரூபத்தையும் அதன் காரியத்தையும் அருளிச் செய்கிறார். உலகத்திலுள்ள காரணப்பொருள்கள் காரியங்களைப் படைக்கும்போது தாமும் விகாரப்பட்டுக்கொண்டே நாநாவிகாரசாலி கார்யவர்க்கங்களைப் பிறப்பிக்கக் காண்கிறோம். எம்பெருமானுடைய காரணத்வம் இப்படிப்பட்டதன்று. கஸ்தூரீ பரிமளமானது தான் சிறிதும் விகாரமடையாமலிருந்து கொண்டே ஸ்வஸந்நிதாநத்தாலே பிறருடைய மனங்களை எப்படி விகாரப்படுத்துகின்றதோ அப்படியே பகவான் தான் விக்ருதனாகாமலே ஸகல பதார்த்தங்களையும் விகாரிப்பிக்கின்றானிறே; இது தான் வீர்யமென்பது.

விநிவார்யம் என்றது வ்யவச்சேத்யம் என்றபடி. ஈச்வரன் ஸவிகாரகாரணமன்று என்பதை இந்த வீர்யகுணம் ஸ்தாபித்துத் தருகின்றதென்றபடி.

ப்ரியரங்க !—திருவுள்ளத்திற்கு மிகவுமுகப்பான திருவரங்கம் பெரிய கோயிலை உடையவரே ! என்கை. ... ... ... ... (33)

सहकार्यपेक्षमपि हातुमिह तदनपेक्षकर्तृता ।
रङ्गधन ! जयति तेज इति प्रणतार्तिजित् प्रतिभटाभिभावुकम् ॥३४॥

ஸஹகார்யபேக்ஷமபி ஹாதுமிஹ தத்நபேக்ஷகர்த்ருதா,
ரங்கதந ! ஜயதி தேஜ இதி ப்ரணதார்த்திஜித் ப்ரதிபடாபிபாவுகம். (34)

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கதந ! | திருவரங்கச்செல்வரே ! | தேஜ: இதி | தேஜோ குணமென்ற |
| ஸஹகாரி அபேக்ஷம் அபி | ஸஹகாரி காரணங்களை அபேக்ஷித்திருக்கின்ற காரணத்தையும் | ஜயதி | விளங்குகின்றது; (இக்குணமானது) |
| ஹாதும் | வ்யவச்சேதிக்கும் பொருட்டு | ப்ரணத ஆர்த்திஜித் | ஆச்ரிதர்களின் ஆர்த்திகளைப் போக்கக்கூடியதும் |
| தத் அநபேக்ஷ கர்த்ருதா | அந்த ஸஹகாரிகாரணத்தை எதிர்பாராத காரணத்வம் என்பது யாதொன்றுண்டோ அது தான். | ப்ரதிபட அபிபாவுகம் | எதிரிகளைத் திரஸ்கரிக்கக் கூடியது மானது. |

* * *—இதில் தேஜஸ் என்னும் குணத்தின் ஸ்வரூபத்தையும் ப்ரயோஜநத்தையு மருளிச்செய்கிறார். உலகத்திலுள்ள காரணப்பொருள்கள் எதுவும் ஸஹகார்யாந்தர நிரபேக்ஷமாகக் காரியம் செய்வதில்லை; அநேக ஸாமக்ரிகளை உடன்கொண்டே காரியஞ்செய்யக் காண்கிறோம். ஈச்வரனுடைய காரணத்வம் அப்படிப்பட்டதன்று. ஸ்வஸங்கல்பமாத்ரஸநாதனாய் இதர ஸஹகாரி நிரபேக்ஷனாய் ஸகலத்தையும் நிர்வஹிக்கின்றானாதலால். இதுவே தேஜஸ் எனப்படுகிறது.

ஸஹகார்யபேக்ஷமபி ஹாதும் என்பது இந்த குணத்தின் ப்ரயோஜனத்தைச் சொல்லுவது. सहकारिसापेक्षं लौकिककारणवर्गं व्यवच्छेत्तुमित्यर्थः ।

ப்ரணதார்த்திஜித் ப்ரதிபடாபிபாவுகம் என்றதனால் “परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम्” என்கிறபடியே சிஷ்ட ரக்ஷணா துஷ்ட பரிபாவநம் செய்வதும் இந்த குணத்தின் ஸ்வரூபமென்று ஒரு பக்ஷாந்தரத்தையும் காட்டினபடி யென்பர் பெரியோர். “अप्रमेयं हि तत्तेजो यस्य सा जनकात्मजा” என்ற ஸ்ரீராமாயண ச்லோகத்தில் இந்த அர்த்தம் உத்ரேயம். ... ... ... ... ... (34)

मर्त्योत्तायं विरिञ्चावधिकमुपरि चोत्प्रेक्ष्य मीमांसमाना रङ्गेन्द्रानन्दवल्ली तव गुणनिवहं यौवनानन्दपूर्वम् ।
न स्वार्थं स्प्रष्टुमीष्टे स्खलति पथि परं मूकतायं निलिल्ये हन्तैवं त्वद्गुणानामवधिगणनयोः का कथा चित्तवाचोः ॥

மர்த்யோத்தாயம் விரிஞ்சாவதிகமுபரி சோத்ப்ரேக்ஷ்ய மீமாம்ஸமாநா
ரங்கேந்த்ராநந்தவல்லீ தவ குணநிவஹம் யௌவநாநந்தபூர்வம்,
ந ஸ்வார்த்தம் ஸ்ப்ரஷ்டுமீஷ்டே ஸ்கலதி பதி பரம் மூகதாயம் நிலில்யே
ஹந்தைவம் த்வத்குணாநாம் அவதிகணநயோ: கா கதா சித்தவாசோ:. (35)

| | | | |
|---|---|---|---|
| ரங்கேந்த்ர! | ஸ்ரீரங்க ராஜரே! | ஸ்வ அர்த்தம் | தன்னுடைய உத்தேசத்தை |
| ஆநந்தவல்லீ | (தைத்திரீயோபநிஷத்தி லுள்ள) ஆநந்தவல்லி யென்கிற பகுதியானது | ஸ்ப்ரஷ்டும் | தொடுவதற்கும் [எட்டிப்பரப் பதற்கும்] |
| மர்த்ய உத்தாயம் | மனுஷ்யன் முதற்கொண்டு | ந ஈஷ்டே | ஸமர்த்தமாகிறதில்லை; |
| விரிஞ்ச அவதிகம் | பிரமன் முடிவாக | பதி பரம் | வழியிலேயே |
| | | ஸ்கலதி | தடுமாறி நிற்கின்றது; |
| | | மூகதாயம் | ஊமைபோலே |
| உபரி ச | மேன் மேலும் | நிலில்யே | வாய்மூடி நின்றது; |
| உத்ப்ரேக்ஷ்ய | படியிட்டுச் சொல்லிக்கொண்டு போய் | ஏவம் (ஸதி) | இப்படி யிருக்க, |
| தவ | தேவரீருடைய | த்வத் குணாநாம் | தேவரீருடைய திருக் குணங்களின் |
| யௌவந ஆநந்த பூர்வம் | யௌவநம் ஆனந்தம் முதலிய | அவதி கணநயோ: | பரிச்சேதத்திலும் ஸங்க்யையிலும் |
| குண நிவஹம் | குண ஸமூஹத்தை | சித்த வாசோ: | மன மொழிகளுக்கு |
| மீமாம்ஸமாநா ஸதி | விசாரியா நின்றுகொண்டு | கா கதா | என்ன ப்ரஸக்தி? |
| | | ஹந்த | அந்தோ! |

* * *—ஆக இவ்வளவும், எம்பெருமானே ஜகத்காரணபூதன் என்பதை ஸ்தாபிப்பதற்கு உபயுக்தங்களான ஜ்ஞாந சக்தி பலைச்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களென்கிற ஆறு குணங்களின் ஸ்வரூபத்தை அருளிச் செய்து, புற மதஸ்தர்கள் அங்கீகரிக்கிற காரண வஸ்துக்களிற்காட்டிலுண்டான வைலக்ஷண்யத்தையும் கூடவே காட்டியருளித் தலைக்கட்டி, இதில் ஜ்ஞாந குணத்தின் அவாந்தர ரூபமான ஆநந்தகுணத்தைப்பற்றி அருளிச்செய்யாநின்று கொண்டு, எம்பெருமானுடைய ஆநந்தகுணம் வேதபுருஷனாலும் அளவிடமுடியாததென்று தெரிவிக்கும் முகத்தால் ஸகல குணங்களும் அபரிச்சேத்யங்களே யென்பது தேறுகின்றது என்று அருளிச்செய்கிறார். தைத்திரீயோபநிஷத்தில் ஆநந்தவல்லீ என்றொரு பகுதியுள்ளது. அது எம்பெருமானுடைய திருக குணங்களுள் ஒன்றான ஆநந்த குணத்தைப்பற்றிப் பேசுகின்றது. அந்த ஆநந்தம் இவ்வளவு கொண்டதென்று சொல்ல முடியாதென்பதைக் காட்டுவதற்கு வேதமே ஒருவகையான கல்பனையைச் செய்துவந்திருக்கிறது. (அதாவது) ஒரு மநுஷ்யன்; அவன் நல்ல யௌவநபருவத்திலுள்ளவன்; ஸகல சாஸ்த்ரங்களையும் ஒன்று விடாமல் ஓதிப் பிறர்களுக்கும் ஓதுவிப்பவன்; ஆலஸ்யமின்றி எல்லாக் காரியங்களையும் வழுவாமற் செய்பவன்; தேஹத்திலும் மனத்திலும் திடமுள்ளவன்; இவ்வளவும் வாய்ந்தாலும் தரித்ரனாயிருந்தால் பயனில்லையே, அப்படியன்றிச் செல்வமெல்லாம் நிறைந்த பூமண்டலம் முழுவதையும் செங்கோல் செலுத்தி ஆளும்படியான ஒப்புயர்வற்ற ஸம்பத்தும் வாய்ந்தவன். இப்படிப்பட்ட அதிசயங்கள் நிறைந்த ஒரு மநுஷ்யனிருப்பதாக வைத்து அவனுக்கு உண்டாகக் கூடிய ஆனந்தத்தை முன்னே யெடுத்துக்காட்டி அதைவிட நூறுபங்கு அதிகமான ஆனந்தமுடையவர்களாக மநுஷ்ய கந்தர்வர்களைக் கூறி, அவர்களைவிட நூறுபங்கு அதிகமான ஆனந்தமுடையவர்களாக தேவ கந்தர்வர்களைக் கூறி, இப்படியே நூறு நூறு பங்கு அதிகமான ஆனந்தமுள்ளவர்களாக வரிசையாய் சிரலோகலோகபித்ருக்களையும் ஆஜாநஜதேவர்களையும் கர்மதேவர்களையும் தேவர்களையும் இந்திரனையும் ப்ருஹஸ்பதியையும் ப்ரஜாபதியையும் சொல்லிவந்து அந்த ப்ரஜாபதியின் ஆனந்தத்தைவிட நூறுபங்கு அதிகமான ஆனந்தமுடையது பரப்ரஹ்மம் என்று

சொல்லப்பார்த்து 'பரப்ரஹ்மத்தின் ஆனந்தத்தை இவ்வளவு மட்டமாகவா சொல்லி விடுகிறது!' என்று குறைப்பட்டு * यतो वाचो निवर्तन्ते * என்றபடி மறுபடியும் திரும்புகிறதாம்; அதாவது கீழ்ச்சொல்லிக்கொண்டு வந்த ப்ரக்ரியையில் கடைசியாக மானவனொரு ப்ரஜாபதி சொல்லப்பட்டானே அவனை அடுத்த பர்யாயத்தில் மநுஷ்ய ஸ்தானத்திலே நிறுத்தி அவன் முதலாக ப்ரஜாபதியளவும் சொல்லிக் கொண்டுபோய் அந்த ப்ரஜாபதியின் ஆனந்தத்தை விட நூறுபங்கு அதிகமான ஆனந்தம் பரப்ரஹ்மத்தினுடையது என்று சொல்லி முடிக்கப்பார்த்து அதுவும் கூடாமையாலே பழையபடியே மறுபடியும் ஒரு பர்யாயம் திரும்புவது—இப்படியே அந்தாதியாக இன்றைக்கும் புந: புநராவ்ருத்தியிலேயே கிடக்கின்றனவாம் வேதங்கள். [இவ் விஷயம் ஸ்தோத்ர ரத்நத்திலும் * उपर्युपर्यब्जभुवोऽपि पूरुषान् * என்ற ச்லோகத்தில் விரிவாக அருளிச் செய்யப்பட்டது. ஆங்கு அடியேனுடைய ரத்நப்ரபா வியாக்கியானத்தில் ஆக்ஷேப ஸமாதானங்களுடன் மிக்க விசதீகரண முள்ளது; ஆதலால் இங்கு ஸங்க்ரஹிக்கப்பட்டது. அங்கே கண்டு கொள்வது.]

உபநிஷத்தில் * यतो वाचो निवर्तन्ते * என்று சொல்லப்பட்டிருத்தலால், இதில் [வாச: நிவர்த்தந்தே—வாக்கு திரும்பிக்கொண்டே யிருக்கின்றன] என்று வர்த்தமான காலமாக ப்ரயோகிக்கப்பட் டிருப்பதனால் 'தேயேசதம்' என்றே பலபல பர்யாயங்கள் பல்லூழி யூழிதொறும் ஓதப்பட்டே வருகின்றதென்றும், ப்ரஹ்மானந்தத்தைப் பரிச்சேதித்துச் சொல்லியாயிற்றென்று தலைக்கட்டின பாடில்லை யென்றும் ஆசார்யர்களின் திருவுள்ளம்.

ஸ்தோத்ர பாஷ்யத்தில் ஸ்ரீதேசிகன் "ते ये शतमित्यनुक्रमात्—प्रत्यक्षश्रुतिपठितानुक्रमेण अविद्यमानासंख्यातपाठपर्यायाभ्यूहं कृत्वेति भावः ।" என்றருளிச் செய்திருப்பதைக் கொண்டு * उपरि चोत्प्रेक्ष्य मीमांसमाना * என்ற விதற்குப் பொருள் தெளிக.

'நிவர்த்தந்தே' என்ற வர்த்தமானநிர்தேசஸ்வாரஸ்யத்தைக் கொண்டே "ஸ்வார்த்தம் ஸ்ப்ரஷ்டுமீஷ்டே" என்றும் "ஸ்கலதி பதி பரம்" என்றும் "மூகலாயம் நிலீலயே" என்றும் ப்ரௌடவாதஸாணியில் அருளிச் செய்யப்பட்டது.

मूकलायम्—मूकवदित्यर्थः । * उपमाने कर्मणि चेति णमुल् । 35

न्यधायिषत ये गुणा निधिनिधायमारण्यकेषु अमी म्रदिमचातुरीप्रणतचापलक्षान्तयः ।
दयाविजयसौन्दरीप्रभृतयोऽपि रत्नौघवत् जगद्व्यवहृतिक्षमा वरद ! रङ्गरत्नापणे ॥३६॥

ந்யதாயிஷத யே குணா நிதிநிதாயமாரண்யகேஷு
அமீ ம்ரதிமசாதுரீப்ரணதசாபலக்ஷாந்தய:
தயாவிஜயஸௌந்தரீப்ரப்ருதயோபி ரத்நௌகவத்
ஜகத்வ்யவஹ்ருதிக்ஷமா: வரத ரங்கரத்நாபணே. (36)

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத! | வரமளிக்கும் பெருமானே!, | தயா- | தயையென்ன |
| ஆரண்யகேஷு- | உபநிஷத்துகளில் | விஜய- | வெற்றியென்ன |
| யே குணா: | யாவை சில குணங்கள் | ஸௌந்தரீ- | ஸௌந்தர்யமென்ன |
| நிதிநிதாயம் | நிதிபோல [ரஹஸ்யமாக] | ப்ரப்ருதய: அபி | இவை முதலானவைகளும் |
| ந்யதாயிஷத | ப்ரதிபாதிக்கப்பட்டுள்ளனவோ | ரத்ந நௌகவத் | ரத்னக் குவியல்போல |
| அமீ | இந்த | | |
| ம்ரதிம- | ஸௌகுமார்யமென்ன | ரங்க ரத்ந ஆபணே | ஸ்ரீரங்க (கர்ப்பக்ருஹ) மாகிற ரத்னக் கடையிலே |
| சாதுரீ- | அகடிதகடநா சக்தி யென்ன | | |
| ப்ரணதசாபல- | ஆச்ரிதப்ரவண்ய மென்ன | ஜகத் வ்யவஹ்ருதிக்ஷமா: | உலகர்க்கெல்லாம் வ்யவஹாரயோக்யங்களாக வுள்ளன. |
| க்ஷாந்தய: | க்ஷாந்தி யென்ன இவைகளும் | | |

★ ★ ★—இப்படி வேதாந்தங்களில் வாக்குக்கும் நெஞ்சுக்கும் நிலமல்லவாக ஓதப்
பட்ட திருக்குணங்கள் நம் பெரிய பெருமாள் பக்கலிலே அனைவர்க்கும் காணலாம்படி
இராநின்றன வென்கிறார். ஆரண்யகமென்று உபநிஷத்துக்களைச் சொல்லுகிறது;
ஆரண்யத்தில் ஓதப்பட்டவையென்று காரணப்பெயர். ப்ருஹதாரண்யக மென்றே
ஒரு உபநிஷத்துக்குப் பெயர் இருப்பதும் நோக்கத்தக்கது. எம்பெருமானுடைய
ஸௌகுமார்யம் ஸாமர்த்தியம் ஆச்ரிதப்ராவண்யம் பொறுமை அருள் ஸுசீலத்வம்
ஸௌந்தர்யம் முதலான எந்தத்திருக்குணங்கள் உபநிஷத்துக்களிலே நிக்ஷேபித்து
வைப்பது போல் வைக்கப்பட்டிருக்கின்றனவோ, [அதாவது—ரஹஸ்யமாக ப்ரதி
பாதிக்கப் பட்டிருக்கின்றனவோ] அந்தக் குணங்களானவை, ரத்னக்கடையிலே ரத்னங்
கள் ஸகல ஜனங்களுக்கும் ஸாக்ஷாத்கார யோக்யங்களாக இருக்குமா போல, திருவரங்
கம் பெரிய கோயிலிலே எளிதில் காணக் கிடைக்கின்றன வென்றுராயிற்று. கடல்
முதலான விடங்களிலே மறைந்து கிடக்கின்ற நவரத்னங்களே கடைத்தெருவில்
மலிந்து கிடப்பது போல் உபநிஷத்துக்களில் தேடிப் பிடிக்க வேண்டிய குணங்களே
ஸ்ரீரங்கநாதன் பக்கலிலே எளிதாக அநுபவிக்கக் கூடியவையாயுள்ளன என்றபடி.
குணங்களை ரத்னங்களாகவும் கோயிலை ரத்னக்கடையாகவும் திருவுள்ளம் பற்றி யரு
ளிச் செய்தவிது மிகவும் அழகு.

[ஜகத்ப்ரவ்ருத்திக்ஷமா:] எல்லாரும் தாங்களும் கண்டு பிறர்க்கும் காட்டலாம்
படி ப்ரஸித்தங்கள் என்றபடி. ஜகத் என்ற ஸ்தாநத்திலே ஜகு: என்றும் பாட
முண்டு; அப்போது இத்யாஹு: என்றபடி.

न्यधायिषत—(நி என்கிற உபஸர்க்கத்தோடு கூடின) डुधाञ् धारणपोषणयोः என்கிற
தாதுவில் கர்மணிலுங் ப்ரதம புருஷ பஹுவசந ரூபம். निधिनिधायम्—निधिवदित्यर्थः ।
उपमाने कर्मणिचेति णमुल् प्रत्ययः । म्रदिमा—मार्दवम् । அதாவது ஸௌகுமார்யம்—ஆச்ரிதர்
களின் பிரிவைப் பொறுக்கமாட்டாமை. சாதுரீ—அகடித கடநா ஸாமர்த்தியம்.
चतुरस्य भावः —चातुरी । ... ... ... (36)

यमाश्रित्यैवात्मम्भरय इव ते सद्गुणगणाः प्रथन्ते सोऽनन्तस्ववशघनशान्तोदितदशः ।
त्वमेव त्वां वेत्थ स्तिमितवितरङ्गं वरद भोः स्वसंवेद्यस्वात्मद्वयसबहुलानन्दभरितम् ॥३७॥

யமாச்ரித்யைவாத்மம்பரய இவ தே ஸத்குணகணா:
ப்ரதந்தே ஸோநந்தஸ்வவசகநசாந்தோதிததச:,
த்வமேவ த்வாம் வேத்த ஸ்திமிதவிதரங்கம் வரத! போ:
ஸ்வஸம்வேத்யஸ்வாத்மத்வயஸபஹுலாநந்தபரிதம். (37)

| | |
|---|---|
| போ வரத! | வரமளிக்கும் பெருமாளே! |
| தே | அப்படிப்பட்ட |
| ஸத்குணகணா: | கல்யாணகுண ராசிகள் |
| ஆத்மம்பரய: இவ | வயிறுதாரிகள் போல |
| யம் த்வாம் | யாவரொரு தேவரீரை |
| ஆச்ரித்ய எவ | அவலம்பித்தே |
| ப்ரதந்தே | ப்ரவ்ருத்தியை யடைகின்றனவோ |
| ஸ: | அப்படிப்பட்ட |
| அநந்த- | நிரவதிகமாய் |
| ஸ்வவச- | தனக்கே அநுபாவ்யமாய் |
| கந- | நிரந்தரமான |

| | |
|---|---|
| சாந்தோதிததச: | சாந்தோதிததசையையுடையீரான |
| த்வம் எவ | தேவரீரே |
| ஸ்திமித விதரங்கம் | நிச்சலமாய் அலையோய்ந்த கடல் போன்றும் |
| ஸ்வ ஸம்வேத்ய | தானே அநுபவிக்கக் கூடியதாய் |
| ஸ்வாத்மத்வயஸ | தன்னோடொத்த அளவுடையதாய் |
| பஹுல | எல்லையில்லாததான |
| ஆநந்த | ஆநந்தத்தினால் |
| பரிதம் | பூர்ணமுமான |
| த்வாம் | ஸ்வஸ்வரூபத்தை |
| வேத்த | அநுபவிக்கின்றீர். |

* * * [யமாச்ரித்யேத்யாதி.] எம்பெருமானுக்கு நித்யோதிததசை என்றும் சாந்தோதிததசை என்றும் இரண்டு அவஸ்தைகள் உண்டு. அவற்றில் அகிலஹேய ப்ரத்யநீகமாய் கல்யாணைக தாநமா யிருக்கிற ஸ்வஸ்வரூபத்தின் வைபவத்தைத் தான் அநுபவித்து மகிழும் நிலைமை நித்யோதிததசை எனப்படும்; தன் விபூதியை அநுபவித்து மகிழும் நிலைமை சாந்தோதிததசை எனப்படும்; தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில்-"நித்யோதிதசாந்தோதிதாதிபேதங்கள்...துரவதர(दुरवधर)ங்களும் குஹ்யதமங்களுமாயிருக்கையாலே சொல்லுகிறிலோம்" என்றார் பிள்ளை லோகாசார்யர். வேதாந்த தேசிகனும் ந்யாயஸித்தாஞ்ஜந நித்யவிபூதி பரிச்சேதத்திலே "ईश्वरशरीरे च सूक्ष्मव्यूहविभवादिभेदा: श्रीमत्पाञ्चरात्रादिभि: प्रपञ्चिता अवगन्तव्या:" என்று வழிகாட்டிவிட்டு "संग्रहस्तु" என்று தொடங்கி "परस्मिन्नेव शान्तोदितादिविभागोऽपि वाच्य:" என்று தலைக்கட்டியருளினார். சில அர்வாசீநக்ரந்தங்களை விமர்சிக்குமிடத்து இந்த நித்யோதிததசைக்கும் சாந்தோதிததசைக்கும் நியதவிஷயவ்யவஸ்தை துஷ்கரமாகத் தோற்றுகிறது. "பாஹ்யேந்த்ரிய நிக்ரஹம் சமம், அந்தரிந்த்ரிய நிக்ரஹம் தமம்; என்றொரு நியதியின்றிக்கே இரண்டு அர்த்தத்திலும் இரண்டு பதங்களையும் மாறாடி வ்யவஹரிப்பது முண்டாளுப்போலே அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாநஸ்வஸ்வரூபாநுபவதசை, விபூத்யநுபவதசை என்கிற இரண்டு அர்த்தங்களிலும் நித்யோதிததசை சாந்தோதிததசை என்னும் பதங்களை மாறாடி வ்யவஹரிப்பது முண்டென்று விளங்குகின்றது. பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளில் இப்படிப்பட்ட விவேசநம் விளங்கவில்லை. வேதாந்ததேசிகனருளிய வரதராஜபஞ்சாசத் ஸ்தோத்திரத்தில் "संचिन्तयन्त्यखिलहेयविपक्षभूतं शान्तोदितं शमवता हृदयेन धन्या:। नित्यं परं वरद! सर्वगतं सुसूक्ष्मं निष्पन्दनन्दथुमयं भवत: स्वरूपम्॥ (16) என்ற ச்லோகத்தின் வியாக்கியானத்திலே ஒருவர் लीलाविभूतिनिर्वाहक संकल्पविशिष्टं शान्तोदितशब्देन, नित्यविभूतिनिर्वाहक संकल्पविशिष्टं च नित्योदितशब्देन निरूढलक्षणया उच्यत इति संप्रदाय:। என்றெழுதியுள்ளார். இவ்விஷயத்திலே பகவச் சாஸ்த்ரத்தில் எங்ஙனம் சொல்லப்பட்டிருக்கிறதென்று ஆராய்ந்துபார்த்து நிஷ்கர்ஷிக்க வேணும். தத்வத்ரயத்தில் "நித்யோதிதசாந்தோதிதாதிபேதமும்" என்ற விடத்திற்கு வியாக்கியானமருளிச் செய்யாநின்ற மணவாள மாமுனிகள்—"நித்யோதித சாந்தோதிதாதிபேதமாவது * नित्योदितात्संबभूव तथा शान्तोदितो हरि: * இத்யாதியில் சொல்லுகிறபடியே நித்யமுக்தாநுபாவ்யராய் நித்யோதிதஸம்ஜ்ஞகராயிருக்கிற பரவாஸுதேவரும், அவர் பக்கலில் நின்றும் உத்பந்நராய் ஸங்கர்ஷணவ்யூஹகாரணமாய் சாந்தோதிதஸம்ஜ்ஞகராயிருக்கும் வ்யூஹ வாஸுதேவரும் முதலான வாஸுதேவ மூர்த்தியில் பேதமும்" என்றருளிச் செய்தார். இதையடியொற்றி ந்யாயஸித்தாஞ்ஜந வியாக்கியானத்தில் * नित्योदितात्संबभूव तथा शान्तोदितो हरि: *इत्याद्युक्तप्रकारेण मुक्तानुभाव्यनित्योदितसंज्ञकपरवासुदेवोत्पन्न: शान्तोदितसंज्ञको व्यूहकारणहेतुभूतो वासुदेव इत्यर्थ: என்று ரங்கராமாநுஜஸ்வாமி யெழுதியுள்ளார். இவற்றை நோக்குமிடத்து அர்வாசீநோக்திகள் நிராதார மென்று விளங்குகின்றது. இனி இவ்விஷயத்தில் இன்னமும் விசதமாக உணரவிரும்புவார் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

இனி இந்த ச்லோகத்தின் கருத்து:—கீழ்ச்சொன்ன ஞானம் முதலிய திருக்குணங்கள் யாதொரு தேவரீருடைய ஸ்வரூபத்தை ஆச்ரயித்தே ஸத்தை பெறுகின்றனவோ, அப்படிப்பட்ட ஸ்வரூபத்தையுடைய தேவரீரே சாந்தோதிதத்தசையையுடையீராய்க்கொண்டு ஸ்வமாத்ராநுபாவ்யமாய் ஸ்வஸத்ருசபரிமாணமாய் விபுலமான ஆநந்தத்தாலே பூர்ணமாய் அலையோய்ந்த கடல் போன்றுள்ள அந்த நிலைமையை தேவரீரே அநுபவியாநின்றீர் என்றதாயிற்று.

[ஆத்மம்பரய இவ] "उभावात्मंभरिः कुक्षिंभरिः स्वोदरपूरकः" என்று அமரகோசம். ஆத்மம்பரர்களாகத் தம்வயிற்றை வளர்ப்பவர்கள் ஒரு பெரிய ஆச்ரயத்தைப்பற்றி நின்று ஜீவிப்பதுபோலே திருக்குணங்களெல்லாம் பகவத் ஸ்வரூபத்தைப்பற்றி நின்று ஸத்தை பெறுகின்றனவென்று காட்டினபடி. [அநந்தஸ்வவச கஸசாந்தோதிததஸ:] சாந்தோதிததசைக்கு மூன்று விசேஷணங்கள்: ஷாட்குண்ய பரிபூர்ணஸ்வவைபவாநுபவரஸதையாகிய அந்த சாந்தோதிததசையானது நிரவதிகமாயும், ஸ்வேனைவ அநுபாவ்யமாயும், நிரந்தரமாயுமுள்ளது என்றபடி. [த்வமேவ த்வாம் வேத்த] தைத்திரீய காடகச்ருதிவாக்யமான விதனை அப்படியே ப்ரயோகித்தருளினர். [ஸ்திமிதவிதரங்கம்] ஆழ்வான் "प्रशान्तानन्तात्मानुभवजमहानन्दमहिमप्रसक्तस्तैमित्यानुकृतवितरङ्गार्णवदशम्" என்று வரதராஜஸ்தவத்திலும். "अतिपतितावधिस्वमहिमानुभवप्रभवत्सुखकृतनिस्तरङ्गजलधीयितनित्यदशम्" என்று ஸுந்தர பாஹுஸ்தவத்திலும் அருளிச் செய்தது இங்கு ஸ்மரிக்கத்தகும். [ஸ்வஸம்வேத்ய ஸ்வாத்மத்வயஸபஹுஸாநந்தபரிதம்.] स्वात्ममात्रानुभाव्येन, उभयविभूतिव्यापकत्वस्वरूपसमानप्रमाणेन, अपरिच्छिन्नेन च आनन्देन पूर्णं त्वाम्—इत्यर्थः। स्वात्मद्वयस என்றவிடத்தில் प्रमाणार्थे द्वयसच् प्रत्यय மென்றுணர்க.

ஆக இந்த ச்லோகத்தில்—ஸமஸ்தகல்யாண குணநிதியாய், எம்பெருமானுக்கு ஸ்வாநுபவ விஷயமாய் விபுவான ஸ்வஸ்வரூபத்தளவாய், அபரிச்சிந்நமான ஆனந்தம் நிரம்பப் பெற்றதாய் அலையற்ற ஆரமுதக் கடல் போன்றுள்ளதான சாந்தோதித தசை வாசா அநுபவிக்கப்பட்டதாயிற்று. ... ... ... (37)

आक्रामैश्वरगन्धमीशसदृशंमन्या स्तवेन्द्रादयः मुह्यन्ति त्वमनावधो निरवधेर्भूम्नः कणेहत्य यत्।
चित्रीयेमहि नात्र रङ्गरसिक! त्वं त्वन्महिम्नः परः वैपुल्यान्महितः स्वभाव इति वा किंनाम सात्म्यं न ते॥३८॥

ஆக்ராமைச்வரகந்தமீசஸத்ருசம்மந்யாஸ் தவேந்த்ராதய:
முஹ்யந்தி த்வமநாவிலோ நிரவதேர் பூம்ந: கணேஹத்ய யத்,
சித்ரீயேமஹி நாத்ர ரங்கரஸிக! த்வம் த்வந்மஹிம்ந: பர:
வைபுல்யாந்மஹிதஸ் ஸ்வபாவ இதி வா கிம் நாம ஸாத்ம்யம் ந தே. (38)

| | | | |
|---|---|---|---|
| ரங்க ரஸிக! | திருவரங்க வாழ்ச்சியில் சுவை யறிந்த பெருமானே! | யத் அத்ர | என்கிற இவ்விஷயத்தில் |
| இந்த்ர ஆதய: | இந்திரன் முதலான தேவர்கள் | வயம் ந சித்ரீயேமஹி | யாம் ஆச்சரியப்படக்கடவோ மல்லோம்; |
| ஐச்வரகந்தம் | ஐச்வர்யத்தில் லவலேசத்தை | | (ஏனென்னில்) |
| ஆக்ராம | அடைந்து | த்வம் | தேவரீருடைய ஸ்வரூபமான து |
| ஈசஸத்ருசம் மந்யா: | ஸர்வேச்வரரான தேவரீரோடொக்கத் தங்களை நினைத் தவர்களாய் | த்வத் மஹிம்ந: | உமது பெருமையான ஸ்வபாவத்திற் காட்டிலும் |
| முஹ்யந்தி | மயங்குகிறார்கள். [கர்வப்படுகிறார்களென்றபடி] | பர: இதி வா | மேம்பட்டது என்று சொல்ல லாமா? |
| த்வம் | தேவரீர் | | (அல்லது) |
| நிரவதே: | எல்லையற்றதான | ஸ்வபாவ: | (தேவரீருடைய), ஸ்வபாவமானது |
| பூம்ந: | பெருமையை | வைபுல்யாத் | (முன் சொன்ன) ஸ்வரூப வைபவத்திற் காட்டிலும் |
| கணேஹத்ய | ஒரு பொருளாக மதியாமல் | மஹித: இதி வா | மேம்பட்டது என்று சொல்ல லாமா? |
| அநாவில: (அஸி) | கலக்கமலிருக்கிறீர். [கர்வப்படாமலிருக்கிறீர்] | | |

(எப்படியும் சொல்லரி யிருக்கையாலே). | ஸிம் ஈாம | எதனான்
தே தேவரீருக்கு | ந ஸாத்ம்யம் | தாங்கவொண்ணாதது?

* * *—[ஆக்ராயைச்வரகந்தம்] இந்திரன் முதலான தேவர்களின் ஸர்வேச்வரனுக்குள்ள திருக்குணங்களிலே ஏகதேச மாத்திரத்தையே கொண்டிருந்தும் மார்பு நெறிப்பு மிகவு முடையரா யிரா நின்றார்கள்; எம்பெருமான் அளவுகடந்த வைபவங்களையுடையனாயிருந்துவைத்தும் சிறிதும் அஹங்காரமற்றிரா நின்றான்; இதற்கு என்ன காரணமென்னில், 'நிறைகுடம் தளும்பாது' என்று உலகில் ஒரு பழமொழி வழங்குவதுண்டே: அதுபோல, பரிபூர்ண வைபவமுடையனா யிருக்கையே எம்பெருமான் அஹங்காரப் படாமைக்குக் காரணம்; அரை குறை வைபவமுடைத்தா யிருக்கையே பிறர் அஹங்காரப் படுதற்குக் காரணம் என்று நிரூபிக்கப்படுகிறது இந்த ச்லோகத்தில். ஹே ரங்கரஸிக! இந்த்ராதய: தவ ஐச்வரகந்தமாக்ராய ஈசஸத்ருசம் மந்யா: முஹ்யந்தி இந்திரன் முதலிய தேவர்கள் ஸ்ரீரங்கநாதராகிய தேவரீருக்குள்ள ஐச்வர்யத்திலே அணுமாத்திரத்தைப் பெற்றவர்களாய் அதனால் ஸர்வேச்வரரான தேவரீரோடொக்கத் தங்களை நினைத்தவர்களாய் தங்கள் நிலைமை இன்னதென்று தெரிந்துகொள்ள மாட்டாதே அறிவு கலங்கி அஹங்காரப் பட்டொழிகின்றார்கள். [த்வம் து நிரவதே: பூம்ந: கணேஹத்ய அநாவில:] தேவரீரோ வென்னில் எல்லை கடந்த ஐச்வர்யத்தையுடையீரா யிருக்கச் செய்தேயும் அந்தச் செல்வத்தை த்ருணமாக நினைத்துச் சிறிதும் அஹங்காரக் கலக்கமில்லாதேயிரா நின்றீர். [இதி யத் அத்ர வயம் ந சித்ரீயேமஹி] இவ்விஷயத்தில் யாம் ஆச்சரியப்படக் கடவோமல்லோம். ஏனென்னில்: [த்வம் த்வந் மஹிம்ந: பர: இத்யாதி.] இதன் கருத்தாவது :—எம்பெருமானுடைய ஸ்வரூபம் ஸ்வபாவம் என்ற இரண்டனுள் எது பெரிது என்று பார்க்குமிடத்து, ஸ்வரூபத்தைப் பார்த்தால் இதுவே ஸ்வபாவத்திற்காட்டிலும் பெரிது என்று தோன்றும்; ஸ்வபாவத்தைப் பார்த்தாலோ இதுவே ஸ்வரூபத்திற் காட்டிலும் பெரிது என்று தோன்றும்; ஒன்றுக்கொன்று தோல்வியில்லாதபடி இரண்டும் ப்ருஹத்துக்களாகையாலே எதுவும் ஸாதிக்கக் கூடியதா யிருக்கின்றது. மற்ற தெய்வங்களுக்கு இப்படி யில்லாமையாலே கொந்தளிப்பு உண்டாகின்றதென்றவாறு.

[கணேஹத்ய] * कणेमनसी श्रद्धाप्रतीघाते * என்கிற பாணிநிஸூத்ரம் இங்கு உணரத் தக்கது. ... ... ... ... ... (38)

षाड्गुण्याद्वासुदेवः पर इति स भवान्मुक्तभोग्यो बलाढ्यात् बोधात्संकर्षणस्त्वं हरसि वितनुषे शास्त्रमैश्वर्यवीर्यात् ।
प्रद्युम्नस्सर्गधर्मौ नयसि च भगवन् । शक्तितेजोनिरुद्धः बिभ्राणः पासि तत्त्वं गमयसि च तथा व्यूह्य रङ्गाधिराज ॥

ஷாட்குண்யாத் வாஸுதேவ: பர இதி ஸபவாந் முக்தபோக்யோ பலாட்யாத்
போதாத் ஸங்கர்ஷணஸ்த்வம் ஹரஸி விதநுஷே சாஸ்த்ர மைச்வர்யவீர்யாத்,
ப்ரத்யும்நஸ் ஸர்க்கதர்மௌ நயஸிச பகவந்! சக்தி தேஜோநிருத்த:
பிப்ராண: பாஸி தத்வம் கமயஸி ச ததா வ்யூஹ்ய ரங்காதிராஜ! 39

| | | | |
|---|---|---|---|
| ஹே பகவந் ரங்காதிராஜ! | எம்பெருமானுகிய ஸ்ரீரங்கநாதரே! | பர: வாஸுதேவ: இதி | பரவாஸுதேவர் என்று வழங்கப்பட்டவராகி |
| ஸபவாந் த்வம் | பூஜ்யரான தேவரீர் | முக்த போக்ய: (அஸி) | முக்தர்களுக்கு அநுபவ்யராகிறீர்; |
| வ்யூஹ்ய | வாஸுதேவாதி வ்யூஹரூபேண அவதரித்து | பல ஆட்யாத் போதாத் | பலத்தோடு கூடின ஞானத்தோடு(கூடி) ஞானமும்பலமுமாகிற இரண்டு குணங்களையுடையவராய்க்கொண்டு] |
| ஷாட்குண்யாத் | (ஞானம் முதலிய) ஆறு குணங்களோடுகூடி | | |

| | | | |
|---|---|---|---|
| ஸங்கர்ஷண: | ஸங்கர்ஷண மூர்த்தியாகி | சக்தி தேஜ: | சக்தி தேஜஸ்ஸுக்களாகிற இரண்டு குணங்களை |
| ஹரஸி | ஸம்ஹாரத் தொழிலை நடத்துகிறீர்; | பிப்ராண: | உடையவராகி |
| சாஸ்த்ரம் விததிஷே | சாஸ்த்ரத்தையும் அளிக்கின்றீர்; | அநிருத்த: | அநிருத்த மூர்த்தியாய் |
| ஐச்வர்ய வீர்யாத் | ஐச்வர்ய வீர்யங்களோடு (கூடி) | பாஸி | ரக்ஷணத்தொழிலை நடத்துகிறீர்; |
| ப்ரத்யும்ந: | ப்ரத்யும்ந மூர்த்தியாகி | ததா | அப்படி |
| ஸர்க்க தர்மௌ நயஸி ச | ஸ்ருஷ்டியையும் பண்ணி தர்மத்தையும் ப்ரவர்த்திப்பிக்கிறீர்; | தத்வம் கமயஸி ச | தத்வஜ்ஞாந ப்ரதாநமும் பண்ணுகிறீர். |

* * *—[ஷாட்குண்யாத்] பரவாஸுதேவன் பக்கலில்தான் ஞானம் முதலிய ஆறு திருக்குணங்களும் புஷ்கலங்கள்; ஸங்கர்ஷணன் முதலிய மூன்று வ்யூஹ மூர்த்திகளிலோ வென்னில் தத்தத்க்ருத்யாநுகுணமாக இரண்டிரண்டு குணங்களே பிரகாசிப்பவை—என்கிறது இந்த ச்லோகத்தில்.

பின்னை லோகாசார்யர் தத்வத்ரய-ஈச்வரப்ரகரணத்தில்—"பரத்வத்தில் ஜ்ஞாநாதிகள் ஆறும் பூர்ணமாயிருக்கும்; வ்யூஹத்தில் இவ்விரண்டு குணம் ப்ரகடமாயிருக்கும். அதில் ஸங்கர்ஷணர் ஜ்ஞாந பலங்களிரண்டோடுங் கூடி ஜீவதத்வத்தை அதிஷ்டித்து அத்தை ப்ரக்ருதியில் நின்றும் விவேகித்து ப்ரத்யும்நாவஸ்தையையும் பஜித்து சாஸ்த்ரப்ரவர்த்தநத்தையும் ஜகத் ஸம்ஹாரத்தையும் பண்ணக் கடவராயிருப்பர்; ப்ரத்யும்னர் ஐச்வர்ய வீர்யங்களிரண்டோடுங்கூடி மநஸ்தத்வத்தை அதிஷ்டித்து தர்மோபதேசத்தையும் மநுசதுஷ்டயம் தொடக்கமான சுத்த வர்க்க ஸ்ருஷ்டியையும் பண்ணக் கடவராயிருப்பர். அநிருத்தர் சக்தி தேஜஸ்ஸுக்களிரண்டோடும் கூடி ரக்ஷணத்துக்கும் தத்வஜ்ஞாந ப்ரதாநத்துக்கும் காலஸ்ருஷ்டிக்கும் மிச்ரஸ்ருஷ்டிக்கும் கடவராயிருப்பர்" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகளும் அவற்றின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளும் இங்கு நோக்கத் தக்கவை.

"இக்குணங்களெல்லாம் ஸர்வகாலத்திலும் ஸ்வரூபாச்ரிதங்களாயிருக்கும். பரவ்யூஹாதி விபாகங்களில் குணநியமம் சொல்லுகிறதெல்லாம் அவ்வோ ரூபங்களை அநுஸந்திப்பார்க்கு ஸர்வேச்வரன் ஆவிஷ்கரிக்கும் குணவிசேஷங்கள் சொல்லுகைக்காகவத்தனை" என்ற ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார ஸ்ரீஸூக்தியும் இங்கு அறியத்தக்கது.

ஐச்வர்யவீர்யாத்; சக்திதேஜ: என்ற இரண்டு பதங்களும் த்விவசநாந்தமாக இருக்கவேண்டுமே, ஏகவசநாந்தமாக இருப்பது பொருந்துமோ என்று சிலர் சங்கிப்பார்கள்; * सर्वो द्वन्द्वो विभाषयैकवद्भवति * என்பது வையாகரண பரிபாஷையாதலால் ஏகவசநாந்தமாகவு மிருக்கத் தகுதி யுண்டு. ... ... (39)

जाग्रत्स्वप्नाद्यलसतुरीयप्रायध्यातृक्रमवदुपास्यः । स्वामिन् ! तत्तत्सहपरिबर्हश्चातुर्व्यूह्यं वहसि चतुर्धा ॥ ४० ॥

ஜாக்ரத்ஸ்வப்நாத்யலஸதுரீய ப்ராயத்யாத்ருக்ரமவதுபாஸ்ய:,
ஸ்வாமிந் தத்தத்ஸஹபரிபர்ஹ: சாதுர்வ்யூஹம் வஹஸி சதுர்த்தா. 40

| | | | |
|---|---|---|---|
| ஸ்வாமிந் | ஸ்ரீரங்கநாதரே! | உபாஸ்ய: | உபாஸிக்கத் தகுந்தவராய் |
| ஜாக்ரத்ப்ராய | விழித்துக்கொண்டிருப்பாரும் | தத் தத் ஸஹ பரிபர்ஹ: | தகுதியான பரிச்சதங்களையுடையவராய் |
| ஸ்வப்நப்ராய | உறங்கிக்கொண்டிருப்பாரும் | சதுர்த்தா | நால்வகையாக |
| அலஸப்ராய | ஸுஷுப்தியிலிருப்பாரும் | சாதுர்வ்யூஹம் | வ்யூஹசதுஷ்டயத்தை |
| துரீயப்ராய | மூர்ச்சாதசையிலிருப்பாருமான | வஹஸி | வஹிக்கின்றீர். |
| த்யாத்ருக்ரமவத் | த்யானம் செய்பவர்களின் ரீதிகளையுடைய அதிகாரிகளாலே | | |

* * *—[ஜாக்ரதித்யாதி] கீழ்ச் சொன்ன விதமான வ்யூஹசதுஷ்டயத்திற்கும் தனித்தனியே அவாந்தரவ்யூஹங்கள் நான்கு உள்ளவுகை ஸ்ரீ பாஞ்சராத்ர ப்ரஸித்தி யிருப்பதால் அதனைச் சுருங்க வருளிச் செய்கிறார் இந்த ச்லோகத்தில். ஜாக்ரத் ஸ்வப்நாத்யலஸதுரீயப்ராயா: யே த்யாத்ருக்ரமா: தத்வத்பி: உபாஸ்ய: என்று கொள்க. உபாஸகர்களின் ரீதி நான்கு வகையாக வகுக்கப்படுகின்றது. 1. ப்ரபுத்தாதிகாரியின் க்ரமம் ஜாக்ரத்ப்ராய க்ரமம். 2. அவ்வதிகாரியைவிட சிறிது குறைந்த ப்ரபோதமுடைய அதிகாரியின் க்ரமம் ஸ்வப்நப்ராயக்ரமம். 3. அவனிற்காட்டிலும் சிறிது குறைவான போதமுடைய அதிகாரியின் க்ரமம் அத்யலஸப்ராயக்ரமம். 4. மிகவும் ஸ்வல்பமான போதமுடைய அதிகாரியின் க்ரமம் துரீயப்ராயக்ரமம். ஆகவிப்படி நால்வகைகொண்ட அதிகாரிகள் உபாஸிப்பதற்குத் தகுதியாக நால்வகை ரூபங்களை நான்கு வ்யூஹமூர்த்திகளும் கொள்ளுகிறார்கள். இங்ஙனே ஒவ்வொரு மூர்த்தியும் நான்கு படிகளைக் கொண்டால் ஆஹத்ய வ்யூஹமூர்த்திகள் பதினாறு என்றதாகும். இதுவே சாதுர்வ்யூஹம் வஹஸி சதுர்த்தா என்பதனால் சொல்லப்படுகிறது. "वासुदेवादि व्यूह-चतुष्टयमपि प्रत्येकं चतुर्धा व्यूह्यावतिष्ठते। एवमवस्थानं जाग्रदादिक्रमचतुष्टयविशिष्टाधिकारिचतुष्टयोपासन-सौकर्यायेत्युक्तं भवति। 40

अचिदविशेषितान् प्रलयसीमनि संसरतः करणकलेवरैर्घटयितुं दयमानमनाः।
वरद! निजेच्छयैव परवानकरोः प्रकृतिं महदभिमानभूतकरणावलिकोरकिणीम्॥ ४१॥

அசிதவிசேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத:
கரணகளேபரைர் கடயிதும் தயமாநமநா:,
வரத! நிஜேச்சயைவ பரவாநகரோ: ப்ரக்ருதிம்
மஹதபிமாநபூதகரணாவளிகோரகிணீம். 41

Vide Gita

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத! | வரந்தரும் பெருமானே!, | ப்ரக்ருதிம் | மூலப்ரக்ருதியை |
| ப்ரளயஸீமநி | பிரளயகாலத்தில் | மஹத் | மஹான் என்ன |
| அசித் அவிசேஷிதாந் | அசேதநத்திற் காட்டிலும் வாசி யற்றவர்களாய் | அபிமாந | அஹங்காரமென்ன |
| ஸம்ஸரத: | அலைகின்ற ஜீவாத்மாக்களை | பூத | பஞ்ச பூதங்களென்ன |
| கரணகளேபரை: | இந்திரியங்களோடும் சரீரங்களோடும் | கரண | இந்த்ரியங்களென்ன (இவற்றினுடைய) |
| கடயிதும் | சேர்க்க | ஆவளி | வரிசையாகிற |
| தயமாநமநா: | திருவுள்ளமிரங்கினவனாய் | கோரகிணீம் | அரும்புகளையுடையதாம்படி |
| நிஜ இச்சயா ஏவ பரவாந் | ஸ்வஸங்கல்ப பராதீனனாய் | அகரோ: | பண்ணினாய். |

* * *—[அசிதவிசேஷிதாந்] நித்யர்களான சேதநர்களுக்கு ஸ்ருஷ்டியாவது அவர்களைக் கரணகளேபரங்களோடு சேர்ப்பதுதான் என்றும், அதுவும் பரமக்ருபையினாலே எம்பெருமான் செய்து போருவதென்றும் அருளிச் செய்கிறார். பிரளய வெல்லையிலே கரணகளேபர சூந்யர்களாய் ஒரு ப்ரவ்ருத்தியும் பண்ணமாட்டாமே மூலப்ரக்ருதியிலே மங்கிக்கிடக்கிற ஸம்ஸாரி சேதநர்களை நோக்கி மிகவும் திருவுள்ளமிரங்கி, செவி வாய் கண் மூக்கு உடல் முதலியவற்றோடே அவர்களைச் சேர்ப்பித்தருளக் கருதி, கேவலம் தம்முடைய ஸங்கல்ப பரதந்த்ரராய் மூலப்ரக்ருதியை மஹதஹங்கார தந்மாத்ரபூதபஞ்சக கர்மேந்த்ரிய ஜ்ஞாநேந்த்ரியவர்க்கங்களாகிற கோரகங்களை [அரும்புகளை] உடையதாகச் செய்தருளாநின்றீர் ஸ்ரீரங்கநாதரே!.

இந்த ச்லோகத்தை யடியொற்றியே ஸ்ரீ தேசிகனும் தயாசதகத்தில் "अविद्विशिष्टान् प्रलये जन्तूनवलोक्य जातनिर्वेदा । करणकलेबरयोगं वितरसि वृषशैलनाथकरुणे त्वम् ॥" என்றருளிச்செய்தார்.

நிஜேச்சயைவ பரவாந்—தன்னுடைய இச்சை யொன்றுக்கே வசப்பட்டவனுக என்றபடி. தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில்—"இவன் காரணமாகிறது அவித்யா கர்மபர நியோகாதிகளாலன்றிக்கே ஸ்வேச்சையாலே" என்று பிள்ளை யுலகாசிரியர் அருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம். [ப்ரக்ருதிமித்யாதி] * अजामेकां लोहित-शुक्लकृष्णां बह्वीं प्रजां जनयन्तीं सरूपाम् * என்று உபநிஷத்து ஓதியுள்ளபடியே ஸத்வரஜஸ் தமோ குணமயியாய், மாயா அவித்யா முதலான பெயர்களை யுடையதாய் ஜகத்ஸ்ருஷ்டிக்கு உபகரண பூதமான ப்ரக்ருதியை மஹான் முதலிய இருபத்துமூன்று விக்ருதிகளை யுடையதாகச் செய்தீர் என்றபடி. ... ... ... (41)

निम्नोन्नतं च करुणं च जगद्विचित्रं कर्म व्यपेक्ष्य सृजतस्तव रङ्गशेषिन् ।
वैषम्यनिर्घृणतयोर्न खलु प्रसक्तिः तद्ब्रह्मसूत्रसचिवाः श्रुतयो गृणन्ति ॥ ४२ ॥

நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச ஜகத் விசித்ரம்
கர்ம வ்யபேக்ஷ்ய ஸ்ருஜதஸ் தவ ரங்கசேஷிந்,
வைஷம்யநிர்க்ருணதயோர் ந கலு ப்ரஸக்திః
தத் ப்ரஹ்மஸூத்ரஸசிவாః ச்ருதயோ க்ருணந்தி. 42

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்க சேஷிந்! | ஸ்ரீரங்கநாதரே! | தவ | தேவரீருக்கு |
| விசித்ரம் கர்ம | (சேதநர்களின்) பலவகைப் பட்ட கருமங்களை | வைஷம்ய நிர்க்ருணதயோः | பக்ஷபாதமென்ன நிர்தயத்வமென்ன இவற்றுக்கு |
| வ்யபேக்ஷ்ய | அநுஸரித்து | ப்ரஸக்திः ந கலு | அவகாசமேயில்லை ; |
| ஜகத் | உலகத்தை | தத் | என்னும் விஷயத்தை |
| நிம்நோந்நதம் ச | மேடு பள்ளமாகவும் | ப்ரஹ்ம ஸூத்ர ஸசிவாः ச்ருதயः | ப்ரஹ்மஸூத்ரத்தைத் துணை கொண்ட உபநிஷத்துக்கள் |
| கருணம் ச | இரங்கத்தகுந்ததாகவும் | | |
| ஸ்ருஜதः | படைக்கின்ற | க்ருணந்தி | ஓதுகின்றன. |

* * *—நிம்நோந்நதஞ்ச.] உலகத்தைப் படைப்பது கருணையினாலேயாகில் தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவராதி விஷமஸ்ருஷ்டி எங்ஙனே கூடும்? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாகும் இந்த ச்லோகம். ஸ்ருஷ்டிக்கிறவளவில் ஸகல ஆத்மாக்களையும் ஒருபடியாக வல்லாமல் தேவ மநுஷ்யாதி பேதங்களோடு கூடச் சிலரை மூடர்களாகவும் சிலரை வித்வான்களாகவும், சிலரை ஸுகமே அநுபவிப்பவர்களாகவும் சிலரை துக்கமே அநுபவிப்பவர்களாகவும் இப்படி ஸ்ருஷ்டித்தால், ஸர்வஸமனுய்ப் பரம தயாளுவா யிருக்கிற எம்பெருமானுக்கு எல்லாரளவிலும் ஒத்திராமையாகிற வைஷம்யமும், துःகிகளாக ஸ்ருஷ்டிக்கையாலே பரதுःகாஸஹிஷ்ணுத்வமாகிறக்ருபை யில்லாமையும் வாராதோ? என்பது சங்கை. இந்த விஷமஸ்ருஷ்டி அவரவர்களது கருமங்களுக்கு அநுகுணமாகையாலே வைஷம்ய நைர்க்ருண்யங்களுக்கு ப்ரஸக்தியில்லை யென்று பரிஹாரம். தத்வத்ரயத்தில்—"சிலரை ஸுகிகளாகவும் சிலரை துःகிகளாகவும் ஸ்ருஷ்டித்தால் ஈச்வரனுக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள் வாராதோ வென்னில், கர்மமடியாகச் செய்கையாலும் மண்தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப் பண்ணும் மாதாவைப் போலே ஹிதபரனாய்ச் செய்கையாலும் வாராது." என்று பிள்ளை யுலகாசிரியர் அருளிய ஸ்ரீஸூக்திகளும் அங்கு மணவாளமாமுனிகளின் வியாக்யான ஸ்ரீஸூக்திகளும் இங்குக் காணத்தக்கவை.

[ப்ரஹ்மஸூத்ரஸசிவா: ச்ருதய:]—ஸசிவ: என்று மந்த்ரிக்குப் பெயர். துணை கொண்ட வேதங்கள் என்றபடி. என்பது கருத்து. ப்ரஹ்மஸூத்ரத்தைத் துணைகொண்ட வேதங்கள் என்றபடி. சாரீரகமீமாம்ஸையில் (2—1—34) "वैषम्यनैर्घृण्ये न सापेक्षत्वात्" என்ற ஸூத்ரமும் "साधुकारी साधुर्भवति पापकारी पापो भवति पुण्यः पुण्येन कर्मणा भवति पापः पापेन कर्मणा" என்கிற ப்ருஹதாரண்யகோபநிஷத்வாக்யமும் உணர்க. (42)

स्वाधीने सहकारिकारणगणे कर्तुश्शरीरेऽथवा भोक्तुस्स्वानुविधापराधविषयोः राज्ञो यथा शासितुः ।
दातुर्वाऽर्थिजने कटाक्षणमिव श्रीरङ्गसर्वस्व ! ते स्रष्टुस्सृज्यदशाव्यपेक्षणमपि स्वातन्त्र्यमेवावहेत् ॥ ॥ ४३ ॥

ஸ்வாதீநே ஸஹகாரிகாரணகணே கர்த்துச் சரீரேதவா
போக்துஸ் ஸ்வாநுவிதாபராதவிஷயோ: ராஜ்ஞோ யதா சாஸிது:,
தாதுர் வார்த்திஜநே கடாக்ஷணமிவ ஸ்ரீரங்கஸர்வஸ்வ! தே
ஸ்ரஷ்டுஸ் ஸ்ருஜ்யதசாவ்யபேக்ஷணமபி ஸ்வாதந்த்ர்யமேவாவஹேத். 43

| | | | |
|---|---|---|---|
| ஹே! ஸ்ரீரங்க ஸர்வஸ்வ | ஸ்ரீரங்கத்தையே ஸர்வஸ்வமாகவுடைய பெருமானே! | கடாக்ஷணம் இவ | எதிர் பார்த்திருத்தல் போலவும் |
| ஸ்ரஷ்டு: | ஸ்ருஷ்டி கர்த்தாவான | போக்து: | போகங்களை அநுபவிப்பவனான ஜீவனுக்கு |
| தே | தேவரீருக்கு | ஸ்வாதீநே சரீரே கடாக்ஷணம் இவ | தனக்கு அதீநமான சரீரத்திலுண்டான எதிர்பார்த்திருத்தல் போலவும், |
| ஸ்ருஜ்யதசாவ்யபேக்ஷணம் அபி | ஸ்ருஷ்டிக்கப்படுகிற ஆன்மாக்களின் கர்ம விபாகதசையை எதிர்பார்த்திருப்பதும் | சாஸிது: | நியாமகனான |
| ஸ்வாதந்த்ர்யம் ஏவ | ஸ்வாதந்திரியத்தையே | ராஜ்ஞ: | அரசனுக்கு |
| ஆவஹேத் | நிலை நிறுத்தும்: (எப்படி போலவென்னில்) | ஸ்வ அநுவிதா அபராத விஷயோ: | தன்னையநுஸரித்திருப்பதும் தன்னிடத்தில் குற்றம் செய்வதுமாகிய காரியங்களிலுண்டான |
| கர்த்து: | (பானை துணி முதலிய காரியப் பொருள்களை நிருமிப்பவனான குயவன் முதலிய மனிதனுக்கு | கடாக்ஷணம் யதா | எதிர்பார்த்திருத்தல் போலவும் |
| ஸ்வாதீநே | தனக்கு வசப்பட்ட | தாது: | உதாரனான பிரபுவுக்கு |
| ஸஹகாரி காரணகணே | (மண் தண்ணீர் தண்டம் சக்கரம் முதலிய) உதவிக்காரணப் பொருள்களிடத்திலுண்டான | அர்த்திஜநே | யாசகர்களிடத்திலுண்டான |
| | | கடாக்ஷணம் இவ | எதிர்பார்த்திருத்தல்போலவும். |

* * * [ஸ்வாதீநே] எம்பெருமான் சேதநர்களின் கருமங்களுக்குப் பரதந்த்ரனாயிருந்து கொண்டு ஸ்ருஷ்டிகளை நடத்துகிறானென்னில், அவன் நிரங்குசஸ்வதந்த்ரன் என்பது குலையுமே என்கிற சங்கையைச் சில த்ருஷ்டாந்தங்கள் காட்டிப் பரிஹரிக்கிறாரிதில். ஸ்ரஷ்டு: ஸ்ருஜ்யதசாவ்யபேக்ஷணமபி ஸ்வாதந்த்ர்யம் ஆவஹேதேவ (ந து தத் விஹும்பேத்) ஸ்ருஷ்டி கர்த்தாவான எம்பெருமான் கரணகளேபரப்ரதாநம் பண்ணப் பெறுகிற உயிர்களின் கருமபரிபாகதசையை யநுஸரித்து ஸ்ருஷ்டித்தாலுங்கூட, ஏதாவதா, அவனுடைய ஸ்வாதந்திரியம் பங்கமடையாது; நிலைபெற்றதேயாகும். இதற்கு மூன்று பாதங்களில் நான்கு த்ருஷ்டாந்தங்கள் காட்டப் படுகின்றன; இந்த ச்லோகத்தின் தாற்பரியம் ஸம்ஸ்க்ருத வித்வான்களுக்கும் எளிதில் புலப்படாததலால் மூன்று வடமொழியிலே வியாக்கியான முரைக்கப்படுகிறது. இதிலுள்ள ஸப்தம்யந்த பதங்களை ஸதிஸப்தமியாகக்கொண்டு சிலர் வியாக்கியானிப்பது உசிதமாகத் தோன்றவில்லை. அப்போது பொருள் பொருந்தாது. கடாக்ஷணமென்கிற பதத்தை ஒவ்வொரு த்ருஷ்டாந்த வாக்யத்திலும் கூட்டி அந்வயிக்கவேணும். கடாக்ஷணமாவது வீக்ஷண

மாய் இங்கு அபேக்ஷணத்தைச் சொல்லுகிறது. "मधुव्रतो नेक्षुरकं हि वीक्षते" என்ற விடத்திற்போல.

[कर्तुः] घटपटादिनिर्माणनिपुणस्य कुलालादेः [स्वाधीने सहकारिकारणगणे कटाक्षणमिव] घटपटादिरूपकार्यकरण सहकारिभूतेषु मृत्पिण्डसलिलदण्डचक्रादिषु स्वाधीनेषु वस्तुषु या अस्ति प्रतीक्षा सा कर्तुः कुलालादेः स्वातन्त्र्यभङ्गकरी यथा न भवति तथा इत्यर्थः । यद्यपि कुलालः सहकारिकारणवस्तूनि प्रतीक्ष्यैव घटशरावादिकं करोति ; तथाऽपि तावता तस्य स्वातन्त्र्यं न व्याहन्यते खलु । तद्वदिहापि । [भोक्तुः स्वाधीने शरीरे कटाक्षणमिव] नानाविधान् भोगान् अनुभवितुः पुरुषस्य तादृशानुभवानुकूलशरीरप्रतीक्षणं दृश्यते । नैतत्तस्य स्वातन्त्र्यभञ्जकं भवितुमलम् । तद्वदेवात्रापि । [शासितुः राज्ञः स्वानुविधापराधविधयोः कटाक्षणमिव] स्वानुविधाच अपराधविधाच स्वानुविधापराधविधे ; तयोः इति सप्तम्यन्तपदमिदम् । विधयः इति प्रथमाबहुवचनान्तपदत्वेन ग्रहणं तु नैव युज्यते । अत्रेदं हृदयम् । नियन्ता राजा स्वकीयशासनस्य अनुवर्तनमतिवर्तनं च प्रतीक्ष्यैव अनुग्रहं निग्रहं च प्रयच्छति । सैषा प्रतीक्षा न खलु राज्ञः स्वातन्त्र्यभङ्गाय कल्पते । तद्वदेवात्रापि । [दातुः अर्थिजने कटाक्षणमिव] उदारः पुमान् अर्थिजनाभावे नैव स्वकीयमौदार्यमाविष्कर्तुमर्हति । तदर्थमर्थिजनप्रतीक्षा भवति तस्य । नैतावता उदारस्यास्य स्वातन्त्र्यं भज्यते । एवमेव निरङ्कुशस्वतन्त्रस्य भगवतोऽपि सृज्यजीवकर्मविपाकप्रतीक्षणमपि न तावत् स्वातन्त्र्यभञ्जकं भवतीत्युक्तं भवति । इदमवधेयम् । "तत्तत्कर्मानुगुणतयैवाहं सृष्टिं करवाणि" इति स्वतन्त्रेण भगवता संकल्पितम् । स्वातन्त्र्यमूलकतादृशसंकल्पानुरोधेन तत्तत्कर्मव्यपेक्षणं यत् क्रियते भगवता, नेदं तदीयस्वातन्त्र्यव्याघातकारि भवेत् । पदार्थान्तरसापेक्षत्वे हि स्वातन्त्र्यभञ्जकं वक्तव्यं चोद्यकारैः । तत्तु न घटत इति लोकदृष्ट्याऽपि ज्ञायते । सहकारिकारणभूतवस्तुसापेक्षत्वं किं कुलालस्य स्वातन्त्र्यं व्याहन्ति ? शरीरसापेक्षत्वं किं भोक्तुरात्मनः स्वातन्त्र्यं व्याहन्ति ? सेवकजनैः क्रियमाणानां साध्वसाधुकर्मणामवेक्षणं किं राज्ञः स्वातन्त्र्यं लुम्पति ? अर्थिजनसापेक्षत्वं किमुदारस्य स्वातन्त्र्यमवकुण्ठयति ? नैव । स्वायत्तवस्त्वन्तरसापेक्षत्वं न स्वातन्त्र्यभञ्जकमिति प्रभिर्दृष्टान्तैस्सिद्धे चेतनकर्मसापेक्षत्वमपि न भगवतः स्वातन्त्र्यस्य भञ्जकं भवतीति सर्वमनवद्यम् ॥

பானை பண்ணுவதற்கு உதவிக் காரணங்களாகிய தண்டம் சக்கரம் மண் தண்ணீர் முதலியவை குயவனுக்கு ஸ்வாதீனமான பொருள்களே; அவையில்லாமல் அவன் பானை செய்யமுடியாது. அவற்றை யெதிர்பார்த்துத் தான் அவன் பானை செய்கிறான் என்கிற இவ்வளவால் அவனுடைய ஸ்வாதந்திரியத்திற்குக் கொத்தை வருமோ? வாராது.

எது கிடைத்தாலும் அதை அநுபவிக்கக் கூடியவன் ஜீவன்; அவன் சரீரமில்லாமல் எதையும் அநுபவிக்க முடியாது. சரீரத்தை அவன் எதிர்பார்க்க வேண்டியவன் என்கிற இவ்வளவால் அவனுடைய ஸ்வாதந்திரியத்திற்குக் கொத்தை வருமோ? வாராது.

ஸ்வதந்த்ரனான அரசன் நிக்ரஹாநுக்ரஹங்களைச் செய்வதற்கு ப்ரஜைகளின் தப்புக்காரியங்களையும் நல்ல காரியங்களையும் எதிர்பார்க்கவேண்டியிருக்கிறது. இதனால் அவனுடைய ஸ்வாதந்திரியத்திற்குக் கொத்தை வருமோ? வாராது.

உதாரனுக யிரப்பு யாசக ஜனங்களை யெதிர்பார்த்தே தானம் செய்யவேண்டி யிருக்கிறது; இதனால் அவனுடைய ஸ்வாதந்திரியம் பழுதுபடுமோ?—இவை போலவே ஸ்ருஷ்டி காலத்தில் சேதந கருமவிபாகத்தை எம்பெருமான் எதிர்பார்ப்பதும் அவனுடைய ஸ்வாதந்திரியத்திற்குக் குறைசெய்ய வல்லதன்று—என்றதாயிற்று.

இங்கே சிலர் சங்கிக்கக் கூடியதொன்றுண்டு:—உண்மையில் ஸ்வதந்திரனுகிய எம்பெருமானுக்கு—உண்மையில் பரதந்திரர்களான குலாலன், ஜீவாத்மா, அரசன், உதாரன் என்பவர்களை த்ருஷ்டாந்தமாக இட்டுக்கூறுதல் பொருந்துமோவென்று. (எம்பெருமான் தவிர மற்ற) யாவரும் எம்பெருமானுக்குப் பரதந்திரர்களே யென்பது வாஸ்தவம். அவ்விஷயம் இந்த ச்லோகத்தில் மறுக்கப்படவில்லை. குயவன் பரமாத்மாவுக்குப் பரதந்திரனுயினும் ஸஹகாரி காரணங்களுக்குப் பரவசனல்லன்; ஜீவாத்மாவும் சரீரத்திற்குப் பரவசனல்லன்; அரசன் ப்ரஜைகளுக்குப் பரவசனல்லன்; உதாரன் யாசகனுக்குப் பரவசனல்லன். ஆனால், குயவன் ஸஹகாரி காரணங்களைக் கொண்டே காரியம் நடத்தவேண்டியவனு யிருப்பதாலும், ஜீவன் சரீரத்தைக் கொண்டே போகங்களைப் பெறவேண்டியவனுயிருப்பதாலும், அரசன் ப்ரஜைகளின் நன்மை தீமைகளை எதிர்பார்த்தே நிக்ரஹாநுக்ரஹங்களைச் செய்யவேண்டியவனுயிருப்பதாலும் உதாரன் யாசகனைப் பார்த்தே தானஞ் செய்யவேண்டியவனுயிருப்பதாலும் மேற்கூறிய குலாலாதிகளுக்கு ஸஹகாரிகாரணுதி விஷயத்தில் பாரதந்திரியம் சங்கிக்கப்பட்டு ஆராய்ச்சியினால் அது கண்டிக்கப்பட்டுப் போய்விடுகிறது. அதுபோலவே எம்பெருமானுக்கும் கர்மவிபாகஸாபேக்ஷத்வமும் முதலில் ஸ்வாதந்த்ர்ய பஞ்ஜகமாக சங்கிக்கப்பட்டுப் பின்பு ஆராய்ச்சியினால் அது தள்ளுண்டதாகிறது என்று கொள்க.

'ஸ்வாதீநே' என்கிற விசேஷண பதம் நான்கிடத்திலும் அநுஷங்கித்துக் கொள்ள வுரியது. இது ஸாபிப்ராய விசேஷணம், தன்னுடைய கட்டளைக்கு உட்படிந்து நடக்குமியல்வுடைய வஸ்துக்களை எதிர்பார்ப்பதானது ஒருகாலும் தன் ஸ்வாதந்திரியத்தை மாற்றமாட்டாது என்பதை இவ்விசேஷணம் நன்கு நிலைநாட்டும்.

இந்த ச்லோகத்தின் கருத்தை இன்னமும் விரிய வுரைக்கலாம்; இன்னமும் சில சங்கா ஸமாதானங்களும் இங்குச் செய்யவேண்டியவை யுண்டு; விரிவுக்கு அஞ்சி நிற்கின்றோம். .... ... ... ... ... (43)

प्रलयसमयसुप्तं स्वं शरीरैकदेशं वरद चिदचिदाख्यं स्वेच्छया विस्तृणानः ।
खचितमिव कलापं चित्रमातत्य धून्वन् अनुशिखिनि शिखीव क्रीडसि श्रीसमक्षम् ॥ ४४ ॥

ப்ரலயஸமயஸுப்தம் ஸ்வம் சரீரைகதேசம்
வரத! சிதசிதாக்யம் ஸ்வேச்சயா விஸ்த்ருணாநः,
கசிதமிவ கலாபம் சித்ரமாதத்ய தூந்வந்
அநுசிகிநி சிகீவ க்ரீடஸி ஸ்ரீஸமக்ஷம்.

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத! | வரந்தரும் பெருமானே! | அநுசிகிநி | மயிற்பேடையின் எதிரே |
| ப்ரளய ஸமய ஸுப்தம் | பிரளயகாலத்தில் ஒடுங்கிப் போன | சித்ரம் | நானாவர்ணமான |
| சித் அசித் ஆக்யம் | சேதநா சேதநாத்மகமான | கலாபம் | தோகையை |
| ஸ்வம் சரீர ஏக தேசம் | தனது திருமேனியின் ஏக தேசத்தை | கசிதம் இவ | ஆகாசத்தை யளாவியதுபோல |
| ஸ்வ இச்சயா | தன் ஸங்கல்பத்தினுல் | ஆதத்ய | விரித்து |
| விஸ்த்ருணாநः | விவித விசித்ர ஜாத் ரூபமாகப் பரப்பா நின்று கொண்டு, | தூந்வந் | உதறுகின்ற |
| | | சிகீ இவ | ஆண்மயில் போல |
| | | ஸ்ரீஸமக்ஷம் | பிராட்டியின் முன்னிலையில் |
| | | க்ரீடஸி | தேவரீர் விளையாடா நின்றீர். |

* * * [ப்ரலயஸமயேத்யாதி] கீழ் * அசிதவிசேஷிதாந் என்ற ச்லோகத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஜகத் ஸ்ருஷ்டியாவது எப்படிப்பட்டதென்றால், குலாலாதிகள் கடபடாதிகளை ஸ்ருஷ்டிக்குமிடத்து நிமித்த காரண பூதர்களாக இருக்கின்றார்களே அப்படி எம்பெருமானும் இந்த ஜகத்துக்கு நிமித்த காரண மாத்திரமாக இருந்து கொண்டு ஸ்ருஷ்டிப்பதன்று; பின்னையோவென்னில், ஸூக்ஷ்ம சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மமான தான் ஸ்தூல சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மமாக விரிவு பெறுவதே ஸ்ருஷ்டியாகும் என்கிற அர்த்தத்தை இந்த ச்லோகத்தில் ஒரு சமத்காரமாக அருளிச்செய்கிறார். நிமித்த காரணத்வத்தோடு உபாதாந காரணத்வமும் எம்பெருமானுக்கு உள்ளதென்னுமிடம் இதனால் வ்யக்தமாகும்.

பிரளய காலத்தில் உறக்கங் கொண்டதுபோல் ஒடுங்கிப்போய் தேவரீருடைய திருமேனியில் ஏக தேசமாய்க் கிடந்த சேதநா சேதநப் பொருள்களை ஸ்வஸங்கல்பத்தினாலேயே விவிதவிசித்ரஜகதாகாரேண பரிணமிப்பியா நின்ற தேவரீர் பிராட்டியின் திருமுன்பே விளையாடா நின்றீர்; இந்த விளையாட்டு எங்ஙனேயிரா நின்றதென்னில், ஆண் மயிலானது தன் உடலுக்குள்ளே ஒடுங்கி யிருக்கின்ற தோகைகளை நன்கு விரித்துப் பேடையின் எதிரே ஆடுவதுபோலே யிரா நின்றது.

இந்த மயில் த்ருஷ்டாந்தத்தினால் ஒரு விசேஷார்த்தம் கிடைக்கும்; அதாவது— கலாபம் ஆண் மயிலுக்கு உண்டே யல்லது பெண் மயிலுக்குக் கிடையாது; அதுபோல் ஜகத் காரணத்வமும் எம்பெருமானுக்குண்டே யல்லது பிராட்டிக்கு இல்லை யென்பதாம்.

[खचितम्] खे—आकाशे, चितं—व्याप्तम्. (44)

भूयोभूयस्त्वयि हितपरेऽप्युत्पथानात्मनीनस्रोतोमग्नानपि पथि नयंस्त्वं दुराशावशेन ।
रुग्णे तोके स्व इव जननी तत्कषायं पिबन्ती तत्तद्वर्णाश्रमविधिवशः क्लिश्यसे रङ्गराज ॥ ४५ ॥

பூயோபூயஸ் த்வயி ஹிதபரேப்யுத்பதாநாத்மநீந
ஸ்ரோதோமக்நாநபி பதி நயந் த்வம் துராசாவசேந.
ருக்ணே தோகே ஸ்வ இவ ஜநநீ தத்கஷாயம் பிபந்தீ
தத்தத்வர்ணாச்ரமவிதிவச: க்லிச்யஸே ரங்கராஜ. 45

| | |
|---|---|
| ஹே ரங்கராஜ | ஸ்ரீரங்கநாதனே ! |
| த்வயி | தேவரீர் |
| பூய: பூய: | மேன்மேலும் |
| ஹிதபரே அபி | சேதநர்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்வதிலேயே நோக்குடையவராய் இருக்கச் செய்தேயும் |
| உத்பத அநாத்மநீந ஸ்ரோத: மக்நாந் அபி | நன்கு கரையில்லாததும் ஆத்மாவுக்குத் துன்பம் தருவதுமான துஷ்கர்ம ப்ரவாஹத்தில் மூழ்கிக் கிடப்பவர்களையும் |
| துராசா வசேந | ஏதோ நப்பாசையினால் |
| பதி | நல்வழியில் |
| நயந் | நடத்த விரும்பினவராய், |
| ஸ்வே தோகே ருக்ணே ஸதி தத்கஷாயம் பிபந்தீ ஜநநீ இவ | தன் குழந்தை நோயாளியாயிருக்கும்போது அது குடிக்க வேண்டிய கஷாயத்தைத் தான் குடிக்கிற தாய்போல |
| தத் தத் வர்ண ஆச்ரம விதி வச: | அந்தந்த வர்ணாச்ரமாசாரங்களை நியமிக்கின்ற சாஸ்த்ரங்களுக்குப் பரவசப் பட்டவராய் |
| க்லிச்யஸே | (தேவரீரும் பலபலகாரியங்களை யனுட்டித்துக் கொண்டு) வருந்துகின்றீர். |

* * * [பூயோபூய இத்யாதி.] ஆகக் கீழ் ச்லோகமளவும் பாஹ்ய குத்ருஷ்டி முதலிய துஷ்ட மதங்களை நிரஸித்தும், வேதம் ஸ்வயம் பிரமாண மென்பதையும் ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகள் வேதோபப்ரும்ஹணார்த்தங்களென்பதையும் நிரூபித்தும், அவற்றால் எம்பெருமானுக்குப் பலித்த ஸர்வஸ்மாத்பரத்வ, ஸர்வஜகத்காரணத்வ,

ததுபயுக்தஜ்ஞாந சக்த்யாதி கல்யாணகுணபரிபூர்ணத்வங்களையும் ஸங்கர்ஷணாதிவ்யூஹ கணக்ருத்யங்களையும் அருளிச் செய்தும் போந்தார். இனி அந்தக் கல்யாணகுணபரீவாஹங்களான திருவவதாரங்களை அநுபவிக்கப் போகிறவராய், பரமான இவ்வுலகை வாழ்விப்பதே அவதாரத்திற்கு முக்கிய ப்ரயோஜனமென்பதை இந்த ச்லோகத்திலருளிச்செய்கிறார்.

[த்வயி பூயோபூய: ஹிதபரே ஸத்யபி] தேவரீர் கரணகளேபரங்களைக் கொடுத்தும் சாஸ்த்ர விளக்கை யேற்றி வைத்தும் இப்படிப் பல படிகளாலே ஹித ப்ரவர்த்தநமே செய்தருளி யிருக்கச் செய்தேயு மென்றபடி. [உத்பத-அநாத்மநீந-ஸ்ரோதோமக்நாநபி (சேதநாந்) துராசாவசேந பதி நயந் ஸந்] சாஸ்த்ர மார்க்கங்களை மீறி அநாத்மஹித துஷ்கர்ம ப்ரவாஹங்களிலே முழுகிக் கிடக்கின்ற சேதநர்களையும் விடமாட்டாத நப்பாசையினாலே அவர்களை நல்வழிப்படுத்தத் திருவுள்ளம் பற்றினவராய் என்றபடி. நயந் என்றதை நிக்ஷேப: அல்லது நேஷ்யந் என்றபடியாகக் கொள்க. [தத்தத்வர்ணாச்ரமவிதிவச: க்லிச்யஸே] ப்ராஹ்மணாதி வர்ணங்களென்ன ப்ரஹ்மசர்யாத்யாச்ரமங்களென்ன இவற்றிற்கு நியதங்களான ஆசாரங்களை விதிக்கின்ற சாஸ்த்ரங்களுக்கு தேவரீர் பரவசராயிருந்துகொண்டு ச்ரமப்படுகிறீர். (அதாவது) தேவரீருக்கு ஒரு வர்ணாச்ரமமுங்கிடையாது; வர்ணாச்ரம தர்மாநுஷ்டாநம் செய்யவேண்டிய கடமையும் தேவரீருக்கு இல்லை; ஆயினும், நாம் அநுஷ்டித்துக் காட்டினாலன்றிப் பிறர் அநுஷ்டிக்கமாட்டார்களென்றெண்ணி அவர்களுக்காக தேவரீரும் அநுஷ்டித்துப் போருகிற தென்கை. "यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः । स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किंचन । नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥ यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः । मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः" ॥ என்று பகவான் தானே கீதையிலருளிச் செய்தபடி, தான் சாஸ்த்ரீயவர்த்மாநுவர்த்தநம் பண்ணிப் போருவதானது உச்சாஸ்த்ரப்ரவ்ருத்த சேதநர்களுக்கும் தத்தத்வர்ணாச்ரமாசாரப்ரவர்தநார்த்த மென்றதாயிற்று.

இவ்விஷயத்திற்குப் பொருத்தமான ஒரு த்ருஷ்டாந்தமருளிச் செய்கிறார் [ஸ்வே தோகே ருக்ணே ஸதி தத்கஷாயம் பிபந்தீ ஜநநீவ] தனது குழந்தை நோயாளியாயிருக்குமளவில் அதன் நோயைத் தீர்க்கும்பொருட்டுத் தாயும் கஷாயம் குடிப்பதுண்டு; கஷாயபானம் மாத்திரம் தாயைச் சேரும்; அதன் பலன் குழந்தையைச் சேரும்; அது போலவே யிங்கும். எளிதிற் கைகூடுகிற ஆசையாக இல்லாமையாலே துராசா என்று துச்சப்தகடநா (दुश्शब्दघटना)· மேல் ச்லோகத்திலும் துராசாபாசேப்ய: என்கிறார்.

* ஆத்மநீந * என்றவிடத்து "आत्मन् विश्वजन भोगोत्तरपदात् खः" என்ற பாணினி ஸூத்ரத்தினால் हितार्थे खप्रत्ययः । (தோகே) अपत्ये तोकं तयोस्समे—इत्यमरः ॥ (45)

सार्व त्वत्कं सकलचरितं रङ्गधामन् ! दुराशापाशेभ्यस्स्यान्न यदि जगतां जातु मुक्तोत्तराणाम् ।
निस्तन्द्रालोस्तव नियमतो नर्तुलिङ्गप्रवाहा सर्गस्थेमप्रभृतिषु सदा जागरा जागटीति ॥ ॥ ४६ ॥

ஸார்வ ! த்வத்கம் ஸகலசரிதம் ரங்கதாமந் ! துராசா
பாசேப்யஸ் ஸ்யாந் ந யதி ஜகதாம் ஜாது முக்தோத்தராணாம்.
நிஸ்தந்த்ராலோஸ் தவ நியமதோ நர்த்துலிங்கப்ரவாஹா
ஸர்க்கஸ்தேமப்ரப்ருதிஷு ஸதா ஜாகரா ஜாகடீதி. 46

| | | | |
|---|---|---|---|
| ஸார்வ | அனைவர்க்கும் ஹிதபரரான | ஸர்க்க ஸ்தேம ப்ரப்ருதிஷு | ஸ்ருஷ்டி ஸ்திதி முதலான காரியங்களில் |
| ரங்கதாமன் | ஸ்ரீரங்கநாதனே! | நிஸ்தந்த்ராலோ: தவ | சோம்பலில்லாத தேவரீருடைய |
| த்வத்கம் | தேவரீருடையதான | நியமத: ருது லிங்க ப்ரவாஹா: ஸதா ஜாகரா | நியதமாக வஸந்தாதி ருதுக்களினுடைய புஷ்பம் முதலிய அடையாளங்களின் ப்ரவாஹம் போன்ற ப்ரவாஹத்தை யுடைத்தான நித்ய ஸங்கல்பமானது |
| ஸகல சரிதம் | (ஸ்ருஷ்டி முதலான) ஸகல வியாபாரமும் | ஜாது | ஒருகாலும் |
| தாராசாபாசேப்ய: | தப்பாசையின் காரணமாக | ந ஜாகடீதி | ஸங்கதமாக மாட்டாது. |
| நஸ்யாத் யதி | ஆகாமற் போனால் | | |
| மூர்க்க உத்தராணாம் | மூர்க்கர்கள் மலிந்த | | |
| ஜகதாம் | உலகங்களினுடைய | | |

* * * [ஸார்வத்வத்கமித்யாதி.] சேதந ரக்ஷணார்த்தமான காரியம் திருவவதாரம் மாத்திரமேயன்று: எம்பெருமானுடைய ஸகல காரியங்களும் பரார்த்தமேயென்கிறது இதில். सार्व—सर्वेषां हित । என்றபடி. " सर्वपुरुषाभ्यां णढञौ " என்ற பாணினி ஸூத்திர முணர்க. सर्वस्मै हितस्सार्वः । [த்வத்கம் ஸகல சரிதம்] தேவரீர் செய்தருள்கிற ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதி ஸகல க்ருத்யங்களும், [தாராசா பாசேப்ய:] हेतौ पञ्चमी । நப்பாசை யடியாகவே உண்டாகின்றன என்றபடி. இதை ஸ்த்ரீகரிக்கிறது மேலுள்ளதெல்லாம். [நஸ்யாத் யதி] நப்பாசையடியாக அன்றாகில்.

[மூர்க்கோத்தராணாமித்யாதி.] மூர்க்க ஜனங்களே மலிந்துகிடக்கு மிவ்வுலகை மீண்டு மீண்டும் ஸ்ருஷ்டிப்பது ரக்ஷிப்பது ஸம்ஹரிப்பதாய்க்கொண்டு சோர்வு சோம்பல் சிறிதுமின்றியே தேவரீர் ஓய்வில்லாத ஸங்கல்பம் செய்துகொண்டு காரியங்கள் நடத்தி வருவதைப் பார்த்தால் வேறு ஒன்றும் சொல்லும்படியில்லையே; இந்தப்பாழும் உலகத்தை வாழ்விப்பதில் தேவரீர் வைத்திருக்கும் நப்பாசையே தேவரீரை இப்பாடு படுத்துகிறது என்பதாகவே சொல்லியாக வேண்டுமென்கிறார்.

[ருதுலிங்கப்ரவாஹா ஸதா ஜாகரா] ऋतूनां लिङ्गानि, तेषां प्रवाह इव प्रवाहो यस्यास्सा என்று விக்ரஹிப்பது. வஸந்தம் முதலிய ருதுக்கள் வருவதும், அவை வந்தவுடனே அவற்றின் அடையாளங்களான புஷ்பாதி ஸம்ருத்திகள் உண்டாவதும் இவை எப்படி ப்ரவாஹதோநித்யங்களாகச் செல்லுகின்றனவோ, அப்படியே யன்றோ தேவரீருடைய சேதநஸ்ருஷ்ட்யாதிவிஷயகஸங்கல்பமும் இடையறாது நிகழ்ந்துகொண்டிராநின்றது; என்றேனுமொருகாலாகிலும் நம்முடைய க்ருஷி பலியாதோ என்கிற நப்பாசையினாலன்றோ தேவரீர் இப்படி ஸந்ததஸங்கல்பம் செய்து போருகிறது.

मूर्खोत्तराणाम्—मूर्खैः उत्तराणाम्—अनभिज्ञप्रचुराणामिति यावत् । [निस्तन्द्रालोः] निष्कोशाग्निवरिविक्त । (तन्द्रालुगोष्ठीतो बहिर्भूतः ; तन्द्रारहित इति तात्पर्यम्) । [जागरा] " जागर्या जागरा द्वयोः " इत्यमरः । जाघटीति—घटते इत्यर्थः । यङ्लुगन्तम् । हे रङ्गधामन् ! तव सकलचरितं चेतनविषयकदुराशाप्रयुक्तम् । अन्यथा तु सृष्टिस्थितिसंहारेषु मनागपि तन्द्रामनुपहतस्तव नित्यसङ्कल्पशालित्वं नैव [illegible]— इत्युक्तं भवति ॥ (46)

सुहृदिव निगलाद्यैरुन्मदिष्णुं नृशंसं स्वमपि निरयपूर्वैर्दण्डयन् रङ्गनेतः !

तदितरमपि बाधात् त्रायसे भोगमोक्षप्रदैरपि तव दण्डापूपिकातस्सुहृत्त्वम् ॥ ॥ ४७ ॥

ஸாஹ்ருதிவ நிகலாத்யையருந்மதிஷ்ணும் க்ருசம்ஸம்
த்வமபி நிரயபூர்வைர் தண்டயந் ரங்கநேத: !,
தத்தரமபி பாதாத் த்ராயஸே போகமோக்ஷ
ப்ரதிரபி தவ தண்டாபூபிகாதஸ் ஸாஹ்ருத்த்வம். 47

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கநேத: | ஸ்ரீரங்கநாதரே ! | ததிதரம் அபி | (அவனையும்) மற்ற ஜன ஸமூஹத்தையும் |
| உந்மதிஷ்ணும் | பைத்தியம் பிடித்தவனை | பாதாத் | நரக பாதையில் நின்றும் |
| நிகல ஆத்யை: | விலங்கிட்டுவைத்தல் முதலிய காரியங்களினால் | த்ராயஸே | காத்தருள்கின்றீர்; (இப்படியான பின்பு) |
| தண்டயந் | சிக்ஷிக்கின்ற | போக மோக்ஷ ப்ரதி: அபி | போக மோக்ஷங்களைத் தந்தருள்வதும் |
| ஸாஹ்ருத் இவ | தோழன்போல | தண்டா பூபி காத: | தண்டாபூப ந்யாய [கைமுதிக ந்யாய]த்தாலே |
| த்வம் அபி | தேவரீரும் | தவ | தேவரீருடைய |
| க்ருசம்ஸம் | கொடிய ஜனத்தை | ஸாஹ்ருத்த்வம் | ஸௌஹார்த்த கார்யமே யாகும். |
| நிரயபூர்வை: | நரகிலிட்டு வருத்துதல் முதலிய வற்றால் | | |
| தண்டயந் | தண்டியா நின்று கொண்டு | | |

* * * [ஸாஹ்ருதிவேத்யாதி.] எம்பெருமான் செய்தருளும் ஸகல காரியங்களும் சேதநர் பக்கலிலுள்ள நசையின் மிகுதியினாலத்தனை யென்று கீழ் ச்லோகத்திற் சொல்லிற்று. அப்படியானால் நரகம் முதலிய கொடு வுலகங்களிலே தள்ளி ஹிம்ஸிப்பது ஏன்? ஸர்வ பூதஸாஹ்ருத்தென்று சொல்லப்படுகின்ற எம்பெருமானுக்கு இது கூடுமோ? என்று சிலர் சங்கிக்க, த்ருஷ்டாந்த முகேந பரிஹாரம் காட்டுகிறாரிதில். உலகில் ஒருவன் உந்மாதமடைந்து கண்ட பேர்களையும் பிடித்துக்கொண்டிருந்தானாகில், அவனிடத்தில் மிக்க நேசமுடைய ஒரு நண்பன் அந்த உந்மத்தனை விலங்கிட்டுச் சிறையிலடைத்து உபப்லவிக்கக் காணுகின்றோம். இதனால் அவனுடைய ஸௌஹார்த்தத்திற்குக் கொத்தையுண்டாகுமோ? அவ்விதமான உபப்லவத்தை அந்த ஆப்தன் செய்யாதொழியில் அந்த உந்மத்தனால் பிறர் பலர் துன்பமடைய வேண்டிவரும்; அவன் தானும் சிறைப்படாமலிருந்தால் குளங் குட்டைகளில் விழுந்து பலவகைக் கஷ்டங்களை அநுபவிக்க வேண்டிவரும். இவற்றை யெல்லாம் தவிர்த்து நல்ல க்ஷேமம் விளைக்கவே அந்த ஆப்தனால் தண்டனை காட்டப்படுகிறது. இந்த த்ருஷ்டாந்தத்தினால், ஒருவனை ஒருவன் தண்டிப்பதுகூட க்ஷேமார்த்தமே யாகுமென்பதும், அது ஸௌஹார்தாதிசயப்ரகாசகமே யல்லது ஸௌஹார்தபஞ்ஜகமன்று என்பதும் அறியத்தக்கது. இங்ஙனமே எம்பெருமான் நம் போலியர்க்குச் செய்யும் இஹபரலோக தண்டனைகளும் ஸௌஹார்தகார்யமே யென்று கொள்ளத் தட்டில்லை யென்று தேறியதாகும். पापक्षयकरनरकप्रक्षेपरूपं शिक्षणमपि रक्षणप्रकारविशेष एवेति सिद्धम् ।

[போகமோக்ஷப்ரதிரபி தண்டாபூபிகாத: ஸாஹ்ருத்வம்] நரகாதிது:க்கப்ராபணமே ஸௌஹார்தகார்யமென்று நிச்சயிக்கப்படும்போது, எம்பெருமான் செய்தருளுகிற போகமோக்ஷப்ரதாநங்கள் ஸௌஹார்தகார்யமென்பதைப்பற்றி விசேஷித்துச் சொல்ல வேண்டியதுண்டோ? அது ஸம்புநர்ந்யாயஸித்தமன்றோ என்றபடி. கைமுதிகந்யாயத்தை தண்டாபூபந்யாயமென்றும் வழங்குவர். ஒரு தடியில் ஒரு பக்ஷ்யம் கோத்து வைக்கப்பட்டிருந்தது; பிறகு பார்க்கும்போது அந்தத் தடி எலியினால் [illegible]ளோ கொ[illegible]ப்பட்டதாகத் தெரியவந்தது; தடியின் கதியே அதுவானால் [illegible]க்ஷ்யத்தின் கதியைப் பற்றிப் பிறகு விசாரிக்க வேண்டியதுண்டோ? [illegible]தவே கைமுதிகந்யாயம்.

இங்கு ஸாஹ்ருத்வமென்கிறதற்கு ஸாஹ்ருத்கார்யமென்று பொருள் கொள்க. कार्ये कारणोपचारः । भद्रि:—भद्राणामित्यर्थः । भद्रदातीति भद्रिः என்று வ்யுத்பத்தி காட்டி ப்ரதாதா என்று சிலர் பொருளுரைப்பது பொருந்தாது.

சேதனர்களுக்கு உண்டாகும் பலன் மூன்று வகைப்படும். துக்காநுபவம், ஆபாஸஸுகாநுபவம், பரமஸுகாநுபவம் என்பவை. இவற்றைக் கொடுப்பவன் எம்பெருமானே. இவற்றில் துக்காநுபவப்ரதாநமே ஸௌஹார்தகார்யமென்று நிரூபிக்கப்படும்போது மற்றவை யிரண்டும் அப்படிப்பட்டவையே யென்பதுபற்றி நிரூபணம் தேவையில்லை யென்றதாயிற்று. போகமோக்ஷப்ரதாநம் போலவே நரகப்ராபணமும் ஸௌஹார்தகார்யந்தானென்று விளங்கினபடி.

[ததிதரமபி பாதாத் த்ராயஸே] உலகில் உந்மத்தனைத் தண்டிப்பதனால் ததிதரர்களுக்கும் ஆபந்நிவாரணம் ஏற்படுவதுபோல் ராவண கம்ஸ சிசுபாலாதி பாபிஜநசிக்ஷணத்தினால் தேவமஹர்ஷி ப்ரப்ருதிஸாதுஜநாநாம் ஆபந்நிவாரணம் ஏற்படுகின்றது என்பது உணரத் தக்கது. அபிசப்தத்தால் தண்டியமானனுக்கும் த்ராணரூபமாகவே சிக்ஷணமாகின்றதென்பது ஸூசிதமாகும். "மண்தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப் பண்ணும் மாதாவைப்போலே ஹிதபரனாய்ச் செய்கையாலும்" என்று தத்வத்ரயத்தில் பிள்ளை யுலகாசிரியர் அருளிச் செய்த ஸ்ரீஸூக்திபெரும்பாலும் இந்த ச்லோகத்தைக் கடாக்ஷித்தே யென்னலாம். (47)

धृतिनियमनरक्षावीक्षणैश्शास्त्रदानप्रभृतिभिरचिकित्स्यान् प्राणिनः प्रेक्ष्य भूयः ।
सुरमनुजतिरश्चां सर्वथा तुल्यधर्मा त्वमवतरसि देवोऽजोऽपि सन्नव्ययात्मा ॥ ॥ ४८ ॥

த்ருதிநியமநரக்ஷாவீக்ஷணைச் சாஸ்த்ரதாந
ப்ரப்ருதிபி: அசிகித்ஸ்யாந் ப்ராணிந: ப்ரேக்ஷ்ய பூய:,
ஸுரமநுஜதிரச்சாம் ஸர்வதா துல்யதர்மா
த்வமவதரஸி தேவோஜோபி ஸந் அவ்யயாத்மா. 48

(வாரீர் ஸ்ரீரங்கநாதரே!)

| | | | |
|---|---|---|---|
| த்ருதி நியமந ரக்ஷா வீக்ஷணை: | எல்லாவற்றையும் தரிப்பதென்ன உட்புகுந்திருந்து நியமிப்பதென்ன ரக்ஷிப்பதென்ன ஆகிய இவை பற்றிய ஸங்கல்பங்களாலும் | அஜ: அவ்யயாத்மா தேவ: ஸந் அபி | பிறப்பும் இறப்பும் இல்லாத தெய்வமாயிருக்கச் செய்தேயும் |
| சாஸ்த்ரதாந ப்ரப்ருதிபி: | சாஸ்த்ரங்களை வளிப்பது முதலியவற்றாலும் | ஸுர மநுஜ திரச்சாம் | தேவ மநுஷ்ய திர்யக் ஜாதிகளுக்கு |
| அசிகித்ஸ்யாந் | திருத்தமுடியாத | ஸர்வதா | ஸர்வ ப்ரகாரத்தாலும் |
| ப்ராணிந: | ஸம்ஸாரிகளை | துல்யதர்மா ஸந் | ஒத்தவராய்க்கொண்டு |
| ப்ரேக்ஷ்ய | நோக்கியருளி | பூய: | மேன்மேலும் |
| | | த்வம் அவதரஸி | தேவரீர் விபவாவதாரங்களைச் செய்தருளாநின்றீர். |

* * * [த்ருதிநியமந.] கீழ் ஜ்யோபூய: என்கிற ச்லோகத்தில் ப்ரஸ்தாவிக்கத் திருவுள்ளம் பற்றின பகவதவதாரத்தை இந்த ச்லோகத்தில் ப்ரஸ்தாவிக்கிறார். தாரண நியமந ரக்ஷண ஸங்கல்பங்களாலும் சாஸ்த்ரப்ரதாநாதிகளாலும் ஸம்ஸாரிகள் திருந்தாமையைக் கண்டு தேவரீர் பலபல யோநிகளிலும் அவதரியா நின்றீர் என்கிறார்.

धृतिश्च नियमनं च रक्षा च—धृतिनियमनरक्षाः । तासु वीक्षणानि, तद्विषयकसंकल्पनानीत्यर्थः [illegible] शास्त्रप्रदानादिभिरन्यैः कथंचित् संसाररोगचिकित्सानर्हान् संसारिणो वीक्ष्य विह्वलस्सन् स्वयमेव साक्षादवतर[illegible] [illegible] ।

* एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः* என்ற ப்ருஹதாரண்யகோபநிஷத்ஸித்தமான த்ருதியென்ன, * अन्तः प्रविष्टश्शास्ता जनानां सर्वात्मा, * य आत्मनि

तिष्ठन्नात्मानमन्तरो यमयति* இத்யாதி ச்ருதிஸித்தமான நியமநமென்ன, *येन जातानि जीवन्ति* இத்யாத்யுபநிஷத்ஸித்தமான ரக்ஷணமென்ன ஆகிய இக்காரியங்களை ஸங்கல்பத்தினால் செய்தும் ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸபுராண பஞ்சராத்ராதி சாஸ்த்ரங்களை அருள் செய்தும் பயன்படாமற்போகவே, ஓலைப்புறத்நிற் செல்லாத நாட்டை நேரேசென்று வென்று கொள்ளுமரசர்படியிலே தானே நேரில்வந்து திருத்திப்பணி கொள்ளத் திருவுள்ளம் பற்றி தேவ மநுஷ்ய திர்யக் யோநிகள் பலவற்றிலும் தத்தஜ்ஜாதிஸதர்மாவாய்க் கொண்டே எம்பெருமான் அவதரித்தருளுகைக்கீடான சீர்மையை இதனால் அருளிச் செய்தாராயிற்று.

*अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन्। प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥* (கீதை. 4—6) என்ற ச்லோகத்தின் முதற்பாதம் அப்படியே இந்த ச்லோகத்தில் அமைக்கப்பட்டுள்ளமை காண்க. अजत्व—अव्ययत्व—सर्वेश्वरत्वादिकं सर्वं पारमेश्वरं प्रकारम् अजहदेव स्वां प्रकृतिमधिष्ठाय आत्ममायया (आत्मसंकल्पेन) संभवामि । என்கிற கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தி காண்க.

மூன்றுவது பாதத்தில் லீலயா—ஸர்வதா என்று பாடபேதம். (48)

अनुजनुरनुरूपरूपचेष्टा न यदि समागममिन्दिराऽकरिष्यत् ।
असरसमथवाऽप्रियंभविष्णु ध्रुवमकरिष्यत रङ्गराज ! नर्म ॥ ॥ ४९ ॥

அநுஜநுரநுரூபரூபசேஷ்டா நயதி ஸமாகமமிந்திரா கரிஷ்யத்,
அஸரஸமதவா அப்ரியம்பவிஷ்ணு த்ருவமகரிஷ்யத ரங்கராஜ நர்ம. 49

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கராஜ | ஸ்ரீரங்கநாதரே | ந அகரிஷ்யத் யதி | செய்தருளா திருந்தாளாகில் |
| இந்திரா | பிராட்டியானவள் | (தே) | தேவரீருடைய |
| அநுஜநு: | (தேவரீருடைய) அவதாரந் தோறும் | நர்ம | விலாஸசேஷ்டையை |
| | | அஸரஸம் | சுவையற்றதாகவோ |
| | | அதவா | அல்லது |
| அநுரூப ரூப சேஷ்டா ஸதீ | தேவரீருக்கு ஒத்த உருவத்தையும் லீலைகளையுமுடையளாய்க் கொண்டு | அப்ரியம் பவிஷ்ணு | வெறுக்கத்தக்கதாகவோ |
| ஸமாகமம் | உடன் திருவவதாரத்தை | அகரிஷ்யத | பண்ணியிருப்பன்; |
| | | த்ருவம் | இது நிசயம். |

* * * [அநுஜநு:] அவதாரங்கள் தோறும் "देवत्वे देवदेहेयं मनुष्यत्वे च मानुषी। विष्णोर्देहानुरूपां वै करोत्येषाऽऽत्मनस्तनुम् ॥ राघवत्वेऽभवत्सीता रुक्मिणी कृष्णजन्मनि । अन्येषु चावतारेषु विष्णोरेषाऽनपायिनी ॥" என்கிறபடியே பெரிய பிராட்டியாரும் எம்பெருமானுடைய திருமேனிக்கும் திருவிளையாடல்களுக்கும் தகுதியான ரூப சேஷ்டிதங்களை யுடையளாய்க் கொண்டு திருவவதாரம்பண்ணவே எம்பெருமானுடைய அவதாரங்கள் இனிமை பெறுகின்றன; அவளுங் கூட அவதரியாவிடில் ப்ரஹ்மசாரி நாராயணனுடைய க்ருத்யங்கள் வீறுபெறமாட்டாதென்றாயிற்று. பிராட்டியின் புருஷகாரமடியாகவே எம்பெருமானுடைய ரக்ஷணம் பாலிக்கின்றபடியாலே அப்படிப்பட்ட இவளுடைய சேர்த்தியில்லையாகில் அவதாரங்கள் விபரீதமானவைகளாகி யொழியுமென்றபடி.

जनुषि - जनुषि - अनुजनु: इत्यव्ययीभाव: । ரங்கராஜநர்ம என்பதை ஸமஸ்தபதமாகவே கொள்ளலாம். பிரித்து ஸம்போதநமாகக் கொண்டால், (தவ) என்று அத்யாஹரித்துக் கொள்ளவேணும், இதுவே ஒக்கும். (49)

गरीयस्त्वं परिजानन्ति धीरा: परं भावं मनुजत्वादिभूष्णुम् ।

अजानन्तस्त्ववजानन्ति मूढा: जनित्रं ते भगवन् जन्मकर्म ॥५०॥

கரீயஸ்த்வம் பரிஜாநந்தி தீரா: பரம் பாவம் மநுஜத்வாதிபூஷ்ணும்,

அஜாநந்தஸ் த்வவஜாநந்தி மூடா: ஜநித்ரம் தே பகவந் ஜந்ம கர்ம. 50

| | | | |
|---|---|---|---|
| பகவந் | பெரிய பெருமானே!, | பரம் பாவம் | பரத்வத்தை |
| தீரா: | * மயர்வற மதிநல மருளப் பெற்றவர்கள் தாம் | அஜாநந்த: | அறியப்பெறாதவர்களாய் |
| கரீயஸ்த்வம் பரிஜாநந்தி | (தேவரீருடைய) பரத்வத்தை நன்கு அறிகின்றார்கள் ; | ஜநித்ரம் | ஸம்ஸார நிவர்த்தகமான |
| மூடாஸ் து | மூர்க்கர்களான ஸம்ஸாரிகளோ வென்னில் | தே | தேவரீருடைய |
| மநுஜத்வாதி பூஷ்ணும் | மநுஷ்ய யோநி முதலிய எந்த யோனிகளிலும் பிறப்பதற்குரிய | ஜந்ம | திருவவதாரத்தையும் |
| | | கர்ம | திவ்ய சேஷ்டிதங்களையும் |
| | | அவஜாநந்தி | இழிவாக நினைக்கிறார்கள். |

* * * [கரீயஸ்த்வம்] எம்பெருமானுடைய அவதார ரஹஸ்யங்களைப்பற்றின அறிவு அஜ்ஞர்களுக்கு அரிது என்கிறார். * तस्य धीरा: परिजानन्ति योनिम् * என்ற வேத வாக்யத்தையே பெரும்பாலும் புகுவித்து முதல்பாதம் அருளினார். தீரா: என்பதற்கு धीमतामग्रेसरा: என்று பெரியார் வியாக்கியான முரைப்பர். [கரீயஸ்த்வம்] * स उ श्रेयान् भवति जायमान: * என்று ஓதப்பட்ட திருவவதாரப் பெருமையை என்றபடி.

* अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् । परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥

* जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वत: । त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ *

என்கிற பகவதுக்திகளையே பெரும்பாலும் அமைத்து மற்ற மூன்று பாதங்களை அருளிச்செய்திருக்கிறார். "கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ் சாதியுமாகப் பெற்றான், பற்றியுரலிடையாப்புமுண்டான் பாவிகாளுங்களுக் கேச்சுக்கொலோ" என்று ஆண்டாளருளிச்செய்தபடியே, சிசுபாலன் பிறந்த லக்நத்திற் பிறந்த [illegible]கள் எம்பெருமானுடைய திருவவதார சரித்திரங்களை நிந்திக்கிறார்கள்; மயர்வற மதிநலமருளப்பெற்றவர்கள் "எத்திறமுரலினோடிணைந்திருந்தேங்கிய வெளிவே!" என்றும், "பிறந்தவாறும் வளர்ந்தவாறும்" என்றும் மாதக்கணக்கிலே [illegible]லித்துக்கிடப்பர்கள் என்றாராயிற்று. (50)

मध्ये विरिञ्चगिरिशं प्रथमावतार: तत्साम्यत: स्तवयितुं तव चेत् स्वरूपम् ।

* किं ते परत्वपिशुनैरिह रङ्गधामन् सत्त्वप्रवर्तनकृपापरिपालनाद्यै: ॥५१॥

மத்யேவிரிஞ்சகிரிசம் ப்ரதமாவதார:

தத்ஸாம்யதஸ் ஸ்தகயிதும் தவ சேத் ஸ்வரூபம்,

கிம் தே பரத்வபிசுனைரிஹ ரங்க[illegible]!

ஸத்த்வப்ரவர்த்தநக்ருபாபரிபாலநாத்யை:, 51

ரங்கதாமந் ! ஸ்ரீ ரங்கநாதரே !
மத்யேவிரிஞ்சகிரிசம் { பிரமருத்திரர்களின் நடுவே
தவ தேவரீருக்குண்டான
ப்ரதம அவதாரஃ { முதன்மையான அவதாரமானது
தத் ஸாம்யதஃ { அந்த ப்ரஹ்ம ருத்ரர்களோடு ஒற்றுமை நயம் காட்டி
ஸ்வரூபம் { தேவரீருடைய பரத்வ ஸ்வரூபத்தை
ஸ்தகயிதும் சேத் { மறைத்துக் கொள்வதற்காகவாகில்,
தே தேவரீருடைய,
பரத்வ பிசுனை: { பாரம்யத்தைக் கோட் சொல்லித் தரக்கடவனவான
ஸத்வ ப்ரவர்த்தந, க்ருபா பரிபாலந-ஆத்யைஃ } வேதோபதேச யோகோபதேசாதிரூப ஸத்வ ப்ரவர்த்தநமென்ன, க்ருபையினாலே ரக்ஷித்தருள்வதென்ன இவை முதலான காரியங்களினால்
இஹ கிம் இங்கே என்ன பயன் ?

* * * [மத்யேவிரிஞ்சகிரிசம்.] பிரமன் சிவன் என்ற இவர்களின் நடுவே விஷ்ணுவாக ஒரு திருவவதாரம் எம்பெருமான் செய்திருப்பதுண்டு; அதனை ஆழ்வானும் அதிமாநுஷஸ்தவத்தில் * अजेशमध्यगणना * என்றருளிச்செய்தார். தேசிகனும் வரதராஜபஞ்சாசத்தில் * मध्ये विरिञ्चिशिवयोर्विहितावतारः ख्यातोऽसि तत्समतया तदिदं न चित्रम् * என்றருளிச் செய்தார். இப்படி அவதரித்தது ஏதுக்கு என்று இந்த ச்லோகத்தில் கேட்கும் முகத்தாலே அது தன்னில் தம்முடைய கடுபாட்டை வெளியிடுகிறார்.

தேவரீருக்கு நியாம்யர்களான ப்ரஹ்ம ருத்ரர்களின் நடுவே நியாமகரான தேவரீர் அவர்களோடொக்க அவதரித்தது தேவரீருடைய பரத்வ ஸ்வரூபத்தை மறைப்பதற்காகவாகில், அந்தப் பரத்வத்தை விளங்கக் காட்டவல்ல சரிதைகளையும் காட்டிக்கொண்டிருந்தது ஏன்? ஸ்வஸ்வரூபத்தை மறைக்கவேணுமென்பதே திருவுள்ளமாகில் அப்படியே ஆசரித்துப் போரவேணுமே; அதற்கு மாறாகவும் ஆசரிக்கலாகாதே ; * महान् प्रभुर्वै पुरुषस्सत्त्वस्यैष प्रवर्तकः * என்று ச்ருதியில் ஓதப்பட்ட ஸத்வப்ரவர்த்தநமும், * वेदापहार गुरुपातक दैत्यपीडाद्यापद्विमोचनमहिष्ठफलप्रदानैः । कोऽन्यः प्रजापशुपती परिपाति * (ஸ்தோத்ர ரத்நே) என்னப்பட்ட பரமக்ருபாகார்ய பரிபாலநாதிகளும் செய்து போருவதால் ஸ்வஸ்வரூப ஆவிஷ்காரமும் செய்தருளா நின்றதே, இதுவென்கொல் ? என்கிறார்.

இந்த ச்லோகத்தினால் தெரிவித்த அர்த்தம் யாதெனில் : எம்பெருமான் ப்ரஹ்ம ருத்ரர்களின் நடுவே ஒரு அவதாரம் செய்தருளின வளவையேகொண்டு அவனை அந்த தேவதாந்தரங்களோடொக்க நினைத்துவிடவொண்ணாது; நீர்மையைக்காட்ட அங்ஙனே ஒரு அவதாரம் செய்தவத்தனை; மற்றும் அவனுடைய சரிதைகளை நோக்குங்கால் அவனுடைய பரத்வம் வருந்தியும் மறைக்கப் போகாதுகிடீர் என்றதாயிற்று. (51)

मधुः कैटभश्चेति रोषं विधूय त्रयीदिव्यचक्षुर्विधातुर्विधाय ।
स्मरस्यङ्ग रङ्गिन् ! तुरङ्गावतारः समस्तं जगज्जीवयिष्यस्यकस्मात् ॥५२॥

மதுஃ கைடபச்சேதி ரோஷம் விதூய
த்ரயீதிவ்யசக்ஷுர் விதாதுர் விதாய.
ஸ்மரஸ்யங்க ! ரங்கிந் ! துரங்காவதாரஃ
ஸமஸ்தம் ஜகஜ் ஜீவயிஷ்யஸ்யகஸ்மாத்.

அங்க ரங்கிந் ! ஸ்வாமீர் ரங்கநாதரே !
துரங்க அவதாரஃ ஹயக்ரீவ ருபியாகி,
மதுஃ கைடபச்ச இதி { மதுவென்றும் கைடபரென்றும் சொல்லப்பட்ட
சேதஃ இடையூறான்களை
விதூய அகற்றி
விதாதுஃ சதுர்முகனுக்கு

| | | | |
|---|---|---|---|
| த்ரயீநிவ்ய சக்ஷு: | வேதங்களாகிற சிறந்த கண்ணை | ஸமஸ்தம் ஜகத் | எல்லாவுலகத்தையும் |
| விதாய | அளித்து | ஸ்மரஸி ஜீவயிஷ்யஸி | வாழ்வித்தீர். |
| அகஸ்மாத் | நிர்ஹேதுகமாகவே | | |

* * *[மது: கைடபச்ச] இந்த ச்லோகத்தில் ஸத்வப்ரவர்த்தநமென்றது வேதப்ரதாநார்த்தங்களான அவதாரங்களை நோக்கியாதலால் அப்படிப்பட்ட இரண்டவதாரங்களை இரண்டு ச்லோகங்களால் பேசி யநுபவிக்கிறார். மதுகைடபர்கள் நான்முகன் பக்கலில் நின்றும் வேதங்களையெல்லாம் அபஹரித்துக்கொண்டு பிரளயவெள்ளத்தில் மறைய, அப்போது நான்முகன் 'கண்ணிழந்தேன் தனமிழந்தேன்' என்று கதறிக்கதறியழுது முறையிட, எம்பெருமான் ஹயக்ரீவாவதாரஞ்செய்து வெள்ளத்தினுட்புக்கு அவ்வசுரர்களைக் கொன்று வேதங்களை மீட்டுக் கொணர்ந்து கொடுத்த வரலாறு அறிக.

நடந்துபோன வரலாற்றைச் சொல்லுகிற இவ்விடத்தில் ஜீவயாமாஸித என்று இறந்தகாலமாக க்ரியாபதமிடாதே ஜீவயிஷ்யஸி என்று எதிர்காலமாக இட்டிருக்கிறதே, இது என்ன! என்று சிலர் ப்ரமிப்பர்கள். * अभिज्ञावचने लृट् * என்பது வ்யாகரண ஸூத்ரம். * स्मृतिबोधिन्युपपदे भूतानद्यतने धातोः लृट् स्यात् । लङोऽपवादः । स्मरसि कृष्ण गोकुले वत्स्यामः । * என்று அங்கே வியாக்கியானம். ஸ்மரஸி என்கிற பதம் உபபதமாக வந்திருக்கையாலே இங்கு எதிர்காலப் பொருளதான ரூபத்திற்கும் இறந்தகாலப் பொருளே கொள்ளக் கடவதென்று சாஸ்த்ரோபதேசம் என்றுணர்க. (52)

रङ्गपते ! तिमिरघस्मरशीतस्वच्छहंसतनुरिन्दुरिवोद्यन् ।
वेदभाभिरनुजगृहियार्थान् ज्ञानयज्ञसुधयैव समृध्यन् ॥५३॥

ரங்கபதே! திமிரகஸ்மரசீத ஸ்வச்சஹம்ஸதநுரிந்துரிவோத்யந்,
வேதபாபிரநுஜக்ரஹிதார்த்தாந் ஜ்ஞாநயஜ்ஞஸுதயைவ ஸம்ருத்த்யந். (53)

| | | | |
|---|---|---|---|
| ரங்கபதே! | ஸ்ரீரங்கநாதரே! | திமிரகஸ்மர சீதஸ்வச்ச ஹம்ஸதநு: | அஜ்ஞாநாந்தகாரங்களைக் கபளீகரிக்கின்ற குளிர்ந்த நிர்மலமான ஹம்ஸத்தின் உருவையுடையீராய் |
| ஜ்ஞாநயஜ்ஞஸுதயா ஏவ | ஜ்ஞாநயஜ்ஞமாகிற அமுதத்தினாலேயே | உத்யந் | அவதரியா நின்றுகொண்டு |
| ஸம்ருத்த்யந் | பரிபூர்ணராய் | ஆர்த்தாந் | ஆர்த்தியை யுடையாரை |
| இந்து: இவ | சந்திரன்போல, | வேதபாபி: | வேதவொளிகளாலே |
| | | அநுஜக்ரஹித | அநுக்ரஹித்தீர். |

* * * [ரங்கபதே.] கீழ் ச்லோகத்தில் ஹயக்ரீவாவதாரத்தை அநுபவித்தார். இதில் ஹம்ஸாவதாரத்தை யநுபவிக்கிறார். வேதங்களை மீட்டுக் கொணர்ந்து கொடுத்தது ஹயக்ரீவரூபியாய் - என்று சில புராணங்களிலும், ஹம்ஸரூபியாய் என்று சில புராணங்களிலும் கூறியிருப்பதை அடியொற்றி ஆழ்வார்கள் "பன்னுகலை நால் வேதப் பொருளையெல்லாம் பரிமுகமாயருளிய வெம்பரமன்" என்றும் "அன்னமாயன்றங்கு அருமறைபயந்தான்" என்றும் அருளிச் செய்கிறார்கள். வேதங்களை ஹயக்ரீவாவதாரத்தினால் மீட்டுக்கொணர்ந்ததென்றும் ஹம்ஸாவதாரஞ்செய்து அவற்றைப் பிரமனுக்கு உபதேசித்ததென்றும் சொல்லுவதுண்டு.

வெண்ணிறமான ஹம்ஸரூபியாய் எம்பெருமான் அவதரித்தது சந்திரோதயமானாற்போலே யிருந்ததாக இங்குச் சொல்லப்படுகிறது. சந்திரன் ஸுதாநிதியாகையாலே அமுதத்தினால் நிரம்பி யிருப்பன்; எம்பெருமானும் [ஜ்ஞாநயஜ்ஞஸுதயைவ ஸம்ருத்த்யந்] ஜ்ஞாநயஜ்ஞமாகிற அம்ருதத்தினால் பரிபூர்ணன். *ज्ञानयज्ञेन चाप्यहं पूजितो

मामुपासते * என்பது பகவத்வாக்யம். தைத்திரீயோபநிஷத்தின் முடிவில் * तस्यैवं विदुष: * என்ற அநுவாகத்திலுல் ஜ்ஞாநமயமான யஜ்ஞம் ரூபகப்ரக்ரியையாலே ஓதப்பட்டுள தென்பதும் அறியத்தக்கது.

[திமிர கஸ்மர சீதஸ்வச்சஹம்ஸதநு:] சந்திரனுடைய வடிவும் ஹம்ஸத்தி னுடைய வடிவும் பர்யாயேண வாசியற்றிருக்கிறபடி. அந்தகார நிவர்தகத்வம், சைத்யம், நிர்மலத்வம் ஆகிய இவற்றிலே ஒப்புமை. [வேதபாபி:] சந்திரன் தன் கிரணங்களினுல் மகிழ்விப்பதுபோல ஹம்ஸ பகவான் வேதவொளிகளாலே மகிழ்வித்தபடி. [ஆர்த்தாந் அநுஜக்ரஹித] * आर्तो जिज्ञासुरर्थार्थी * என்ற விடத்திற்போல இங்கும் ஆர்த்தசப்தம் நஷ்டைச்வர்யகாமனைச் சொல்லுகிறது. வேதச் செல்வம் நஷ்டமாகப் பெற்ற பிரமனுள்ளிட்ட சேதநர்களை இங்கு விவக்ஷிக்கிறபடி. இந்த அநுக்ரஹம் பிரமனுக்கு மாத்திரம் செய்ததன்று; அவன் மூலமாக நமக்கெல்லார்க்கும் செய்தது என்று காட்ட பஹுவசந ப்ரயோக மென்ப.

* [திமிரகஸ்மர] * என்றவிடத்து भक्षको घस्मरोद्मर: என்ற அமரகோசமும் * जगद्दुरितघस्मरा: * என்ற தேசிகனுடைய [அபீதிஸ்தவ] ப்ரயோகமும் காணத்தக்கன.

वटदलमधिशय्य रङ्गधामन् शयित इवार्णवतर्णक: पदाब्जम् ।
अधिमुखमुदरे जगन्ति मातुं निदधिथ वैष्णवभोग्यलिप्सया वा ॥५४॥

வடதலமதிசய்ய ரங்கதாமந்! சயித இவார்ணவதர்ணக: பதாப்ஜம்,
அதிமுகமுதரே ஜகந்தி மாதும் நிததித வைஷ்ணவபோக்யலிப்ஸயா வா. (54)

| | | | |
|---|---|---|---|
| ரங்கதாமந்! | ஸ்ரீரங்கநாதரே! | உதரே | திருவயிற்றில் |
| சயித: | சயனித்த | ஜகந்தி | உலகங்களை |
| அர்ணவதர்ணக: இவ | கடல் குட்டிபோல | மாதும் வா | அளப்பதற்காகவா? (அன்றிக்கே) |
| வடதலம் | ஆலிலையிலே | வைஷ்ணவ போக்ய லிப்ஸயா வா | ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யமான மதுவை(த்திருவடியில் நின்றும்) பெறவேணுமென்கிற விருப்பத்தினுலா? |
| அதிசய்ய | பள்ளிகொண்டு | | |
| அதிமுகம் | திருப்பவளத்திலே | | |
| பதாப்ஜம் | பாதாரவிந்தத்தை | | |
| நிததித | வைத்தருளினீர்; (இது) | | |

*** [வடதளமதிசய்ய] "ஆலமாமரத்தினிலைமே லொருபாலகனாய் ஞாலமேழு முண்டானரங்கத்தரவினணையான்" என்ற திருப்பாணுழ்வாரருளிச்செயலை யடியொற்றி வடதளசாயியை அநுபவிக்கிருர். ஸ்ரீரங்கநாதரே! தேவரீர் மஞ்சாடுவரையேழுங் கடல்களேழும் வானகமும் மண்ணகமும் மற்றுமெல்லாம் எஞ்சாமல் வயிற்றடக்கி ஆலின்மேலோரிளந்தளிரில், [சயித: அர்ணவதர்ணக இவ] 'பள்ளிகொள்கின்ற கடல் குட்டியோ இது' என்னலாம்படி திருக்கண்வளர்ந்த காலத்து "பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக்கமலங்கள்" என்னும்படியே திருவடியைப்பிடித்துத் திருப்பவளத்திலே வைத்தது என்ன திருவுள்ளத்தினுல்? என்று வினவி, இரண்டுவகை யான உல்லேகமுகத்தினுல் தாமே விடையிறுக்கின்ருர்: [ஜகந்தி மாதும் வா? வைஷ்ணவபோக்யலிப்ஸயாவா?] என்று. த்ரிவிக்ரமாவதாரத்திலே திருவடியாலளந்து கொண்ட உலகம் முழுவதும் சிறிதும் தப்பாமே இப்பொழுது உள்ளே புக்கதா என்று மீண்டும் திருவடியையிட்டு அளந்துபார்க்கத் திருவுள்ளமோ? அன்றிக்கே, * विष्णो: पदे परमे मध्व उत्स: * என்று வேதமோதினதையநுஸரித்து "உன் தேனைமலருந் திருப்பாதம்" என்று உளங்கனிந்திருக்குமடியவர்கட்கெல்லாம் பரம போக்யமாயிருக்கு மிந்தத் திருவடியின் இனிமையை நாமும் சிறிது சுவைத்துப் பார்ப்போமென்கிற திருவுள்ளமோ? मध्व:-मधुन:, उत्स:-प्रवाह: தேன்வெள்ளமென்றபடி. (54)

उन्मूल्याहर मन्दराद्रिमहिना तं संबधानामुना दोर्भिश्चञ्चलमालिकैश्च दधिनिर्माथं मथानाम्बुधिम् ।
श्रीरङ्गेश्वर ! चन्द्रकौस्तुभसुधापूर्वं गृहाणेति ते कुर्वाणस्य फलेग्रहिर्हि कमलालाभेन सर्वः श्रमः ॥

உந்மூல்யாஹர மந்தராத்ரிமஹிநா தம் ஸம்பதாநாமுநா
தோர்ப்பிச் சஞ்சலமாலிகைச் ச ததிநிர்மாதம் மதாநாம்புதிம்,
ஸ்ரீரங்கேச்வர ! சந்த்ரகௌஸ்துபஸுதாபூர்வம் க்ருஹாணேதி தே
குர்வாணஸ்ய பலேக்ரஹிர் ஹி கமலாலாபேந ஸர்வ: ச்ரம:. 55

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கேச்வர ! | ஸ்ரீரங்கநாதரே ! | ததி நிர்மாதம் | தயிர் கடைவதுபோல் |
| மந்தர அத்ரிம் | மந்தரமலையை | மதாந | கடைந்தீர் ; |
| உந்மூல்ய | பறித்து | சந்த்ர கௌஸ்துப ஸுதா பூர்வம் | சந்திரன் கௌஸ்துபமணி அம்ருதம் முதலானவற்றை |
| ஆஹர | கொணர்ந்தீர் ; | க்ருஹாண | க்ரஹித்தீர் ; |
| தம் | அந்தமலையை | இதி | இவ்வண்ணமாக |
| அமுநா | ப்ரஸித்தமான | குர்வாணஸ்ய | காரியஞ் செய்யாநின்ற |
| அஹிநா | (வாஸுகி யென்னும்) பாம்பினுல் | தே | தேவரீருடைய |
| ஸம்பதாந | கட்டினீர் ; | ஸர்வ: ச்ரம: | சிரமமெல்லாம் |
| சஞ்சல மாலிகை: | திருமாலைகள் அசையப் பெற்ற | கமலா லாபேந | பிராட்டியை பெற்றதனுல் |
| தோர்ப்பி: | திருக்கைகளினுல் | பலேக்ரஹி: ஹி | ஸபலமாயிற்றுக் காணீர். |
| அம்புதிம் | கடலை | | |

* * * [உந்மூல்யாஹர] "மாயிருங்குன்றமொன்று மத்தாக மாசுணமதனோடு மளவிப், பாயிரும் பௌவம் பகடுவிண்டலறப் படுதிரை விசும்பிடைப்படரச், சேயிரு விசும்பும் திங்களும் சுடரும் தேவரும் தாமுடன் திசைப்ப, ஆயிரந்தோளால் அலைகடல் கடைந்தான் அரங்கமாநகரமர்ந்தானே." என்று திருமங்கையாழ்வாரீடுபட்ட துறையிலே யீடுபட்டுப் பேசுவதாம் இந்த ச்லோகம். பெரிய பெருமாளே ! தேவரீர் கடல் கடையப் பட்டபாடுகள் பெரிதுமுண்டு ; கடை கருவியான மத்தாக நாட்டுதற்கு மந்தரமலையை வேரோடே பறித்துக் கொணர்ந்தீர் ; வாஸுகியைக் கடையிறுகப் பூட்டினீர் ; தோளும் தோள்மாலையுமாக அசையநின்று கடைந்தீர் ; சந்திரன் கௌஸ்துபம் அம்ருதம் முதலானவற்றை உள்ளில்நின்றும் வாங்கினீர் ; இவ்வளவாகப் பட்ட வருத்தமெல்லாம் "விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே !" என்கிறபடியே பெரிய பிராட்டியாராகிற கோதற்றதோர் திவ்யாம்ருதத்தை லபிக்கப்பெற்றதனுல் ஸபலமாயிற்று என்கிறார்.

आहर, बधान, मथान, गृहाण என்கிற லோட்ருபங்கள் समुच्चयेऽन्यतरस्याम् என்கிற பாணினி ஸூத்ரத்தின்படியே இறந்தகாலப் பொருளில் வந்தவை யென்றுணர்க. माघकाव्यप्रथमसर्गத்திலுள்ள पुरीमवस्कन्द लुनीहि नन्दनम् இத்யாதி ச்லோகமும் இங்கு அநுஸந்தேயம். [दधिनिर्माथम्] *उपमाने कर्मणि चेति णमुल्। [फलेग्रहिः]* स्यादवन्ध्यः फलेग्रहिः इत्यमरः। (55)

देवीहस्ताम्बुजेभ्यश्चरणकिसलये संवहद्भ्योऽपहृत्य
प्रत्यस्यानन्तभोगं झटिति चलपुटे चक्षुषी विस्तृणानः ।
आक्षिप्योरश्च लक्ष्म्यास्स्तनकलशकनत्कुङ्कुमस्तोमपङ्कात्
देवःश्रीरङ्गधामा गजपतिघुषिते व्याकुलः स्तात्पुरो नः ॥५६॥

தேவீஹஸ்தாம்புஜேப்யஶ் சரணகிஸலயே ஸம்வஹத்ப்யோ பஹ்ருத்ய
ப்ரத்யஸ்யாநந்தபோகம் ஜடிதி சலபுடே சக்ஷுஷீ விஸ்த்ருணாந:
ஆக்ஷிப்யோரஶ் ச லக்ஷ்ம்யாஸ் ஸ்தநகலசககந்குங்குமஸ்தோமபங்காத்
தேவ: ஸ்ரீரங்கதாமா கஜபதித்ருஷிதே வ்யாகுலஸ் ஸ்தாத் புரோ ந:. 56

| | | | |
|---|---|---|---|
| கஜபதி குஷிதே ஸதி | கஜேந்திராழ்வான் கூவின போது | ஸ்தந கலச கந் குங்கும ஸ்தோம பங்காத் | * செப்பன்ன மென்முலைகளில் விளங்காநின்ற குங்குமக் குழம்பில் நின்றும் |
| ஸம்வஹத்ப்ய: | திருவடி வருடாநின்ற | உர: | திருமார்பை |
| தேவீ ஹஸ்தாம்புஜேப்ய: | தேவிமாருடைய தாமரைக் கைகளில் நின்றும் | ஆக்ஷிப்ய ச | மீட்டுக்கொண்டும் |
| சரணகிஸலயே | தளிர்போன்ற திருவடிகளை | சலபுடே | துடிக்கின்ற இமைகளையுடைய |
| அபஹ்ருத்ய | இழுத்துக்கொண்டும், | சக்ஷுஷீ | திருக்கண்களை |
| அநந்தபோகம் | ஆதிசேஷனது திருமேனியை | விஸ்த்ருணாந: | மலர மலர விழித்தவராய் |
| ஜடிதி | திடீரென்று | வ்யாகுல: | திகைத்திருக்கின்ற |
| ப்ரத்யஸ்ய | துறந்தும்; | ஸ்ரீரங்கதாமா தேவ: | பெரிய பெருமாள் |
| லக்ஷ்ம்யா: | பெரிய பிராட்டியாருடைய | ந: புர: | நம் கண்முகப்பே |
| | | ஸ்தாத் | எழுந்தருளி நிற்கவேணும். |

* * * [தேவீஹஸ்தாம்புஜேப்ய:] "கடிகொள் பூம்பொழில் காமரு பொய்கை வைகுதாமரை வாங்கிய வேழம் முடியும் வண்ணமோர் முழுவலி முதலைபற்ற மற்றது நின் சரண்நினைப்ப, கொடியவாய்விலங்கினுயிர்மலங்கக் கொண்டசீற்ற மொன்றுண்டுள தறிந்து, உன்னடியனேனும் வந்தடியிணையடைந்தேன் அணிபொழில் திருவரங்கத் தம்மானே." என்றுகொண்டு திருமங்கையாழ்வாரீடுபட்ட [1420] கஜேந்த்ராபந்நிவர்த்த நார்த்தமான அவதாரத்திலே யீடுபட்டு நான்கு ச்லோகங்களருளிச் செய்கிறார். * போரானை பொய்கைவாய்க் கோட்பட்டு நின்றலறி நீரார் மலர்க்கமலங்கொண்டோர் நெடுங்கையால் நாராயணாவோ! மணிவண்ணா நாகணையாய்! வாராய் என்னாரிடரை நீக்காய் * என்று கூவியழைத்தபோது அரைகுலையத் தலைகுலைய வோடிவந்து அவன் முன்னே நின்றாப்போலே, பஞ்சேந்திரியங்களாகிற முதலைகளின் வாயிலகப்பட்டுத் துடிக்கின்ற என் முன்னே வந்து நின்றருளவேணும் பெருமானே! என்கிறார்.

"வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி." என்கிற படியே திருநாட்டில் தேவிமார் திருவடிவருடாநிற்க அப்போது யானையின் கூக்குரல் செவிப்பட, அத்திருவடிகளைச் சடக்கென இழுத்துக்கொண்டும் சேஷசயநத்தை சரேலென்று உதறிக்கொண்டும், திருக்கண்களை மலர மலர விழித்துக்கொண்டும், பெரிய பிராட்டியாரின் திருமுலைத்தடங்களினுடைய குங்குமக் குழம்பில் நின்றும் திருமார்பை விலக்கிக்கொண்டும் ஸம்ப்ரமித்த ஸ்ரீரங்கநாதன் அந்த நிலைமை தன்னோடே நங்கண்முகப்பே ஸேவை ஸாதித்தருளவேணுமென்கிறாராயிற்று. (56)

अतन्द्रितचमूपतिप्रहितहस्तमस्वीकृतप्रणीतमणिपादुकं किमिति चाकुलान्तःपुरम् ।
अवाहनपरिष्क्रियं पतगराजमारोहतः करिप्रवरबृंहिते भगवतस्त्वरायै नमः ॥ ५७ ॥

அதந்த்ரித சமூபதிப்ரஹித ஹஸ்தமஸ்வீக்ருத
ப்ரணீதமணிபாதுகம் கிமிதிசாகுலாந்த:புரம்,
அவாஹநபரிஷ்க்ரியம் பதகராஜமாரோஹத:
கரிப்ரவரப்ருங்ஹிதே பகவதஸ் த்வராயை நம:. 57

* * * [யம் பச்யந்] மீண்டும் அந்த கஜேந்த்ரரக்ஷணத்வரை தன்னையே சிறப்பித்துக் கூறுகின்றார். கஜேந்திரனைக் காத்தருளப் புறப்பட்டருளும்போது திருவுள்ளத்தில் உத்வேகத்தை யறிந்த பெரிய திருவடி 'இப்போது நாம் எம்பெருமானை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு ஸாதாரணமான வேகத்தோடு போகவொண்ணாது; இதுவரை என்றுமில்லாத பரம விலக்ஷணமானதொரு வேகத்தோடே பதறியோடிச் சென்று பொய்கைக்கரையிலே கொண்டு சேர்க்கவேணும்' என்றெண்ணி வாசாமகோசரமான வேகத்தைக் கொண்டான்; அந்த வேகத்திற்கு எதையும் ஒப்புச் சொல்லப் போகாது. வாயுவேகம் மநோவேகம் என்றிறபோலே உலகத்தில் பல வேகங்கள் சொல்லப்படுவதுண்டு; புகவத்ஸங்கல்பத்திலுடைய வேகம் மற்றையெல்லாவற்றிலும் மேம்பட்டதென்று ப்ரஸித்தம். அந்த வேகத்தையும் அதிசயித்ததாய்ப் பெரிய திருவடியின் வேகமுள்ளதென்று எம்பெருமான் கண்டிருந்தும், இந்த வேகமும் போராதென்று திருவுள்ளம்பற்றி அந்தக் கருடனை ஹுங்கரிப்பதும் தட்டி யோட்டுவதும் காலாலுதைத்துத் தள்ளுவதுமான செயல்களாலே அதிக்ஷேபித்து, அவ்வளவிலும் வேகம் தமக்கு திருப்திகரமாக அமையாமையாலே அவனையும் கையிலே பிடித்துக்கொண்டு முடுகிவந்து மடுவின் கரையிலே சேர்ந்தபடியை அழகாக அருளிச்செய்தாராயிற்று.

[ப்ரணமதி ஜநே தே தசா காந்திசீகீ] ஆச்ரித ஜனங்களின் கூக்குரல் செவிப்பட்டவாறே தேவரீர் கொண்டருளும் பதற்றம் பேச்சுக்கு நிலமல்ல என்றபடி. * कान्दिशीको भयद्रुतः * என்று அமரகோசம். कां दिशं यामि என்று வெருவிச்செல்லுமவன் என்கிற பொருளில் *तदाहेति माशब्दादिभ्य उपसङ्ख्यानम्* என்கிற வார்த்திகத்தினுவ் டக்ப்ரத்யாந்தமாய் காந்திசீகः என்றாகிறது. எங்குப்போவேன்! எங்குச் செல்வேன் என்று சொல்லிக்கொண்டு நிலையிட மெங்குமின்றிக் கனவேகமாக ஓடுமவன் என்றபடி. कान्दिशीकस्य इयं—कान्दिशीकी इति तद्धितवृत्तिः. பெரிய பெருமாளே! ஆச்ரிதர்களின் ஆபந்நிவாரணார்த்தமாக கனவேகமாய் ஓடிக்கொண்டிருப்பதே உம்முடைய நிலைநின்ற நிலைமைபோலும் என்றதாயிற்று. (58)

श्रीरङ्गेश ! शरणं ममासि वात्याव्यालोलत्कमलतटाकताण्डवेन ।
स्रग्भूषाम्बरमयथायथं दधानः खिन्नामित्यनुगजगर्जमाजगन्थ ॥ ५९ ॥

ஸ்ரீரங்கேசய ! சரணம் மமாஸி, வாத்யாவ்யாலோலத்கமல தடாகதாண்டவேந,
ஸ்ரக்பூஷாம்பரமயதாயதம் ததாநः கிந்நாமித்யநுகஜகர்ஜமாஜகந்த. 59

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கேசய | ஸ்ரீரங்கநாதரே! (தேவரீர்) | வாத்யாவ்யாலோலத்கமல தடாக தாண்டவேந | பெருங்காற்றினால் அலைந்ததொரு தாமரை தடாகத்தின் விலாஸத்தோடொத்த வராய் |
| அநுகஜகர்ஜம் | கஜேந்திராழ்வானுடைய கூக்குரல் செவிப்பட்டவுடனே | ஆஜகந்த | எழுந்தருளினீர்; |
| மாம் கிந் இதி | கெட்டேன் கெட்டேனென்று இழுவுக்கு நொந்துகொண்டு | | (இப்படி ஆச்ரித பக்ஷபாதியான தேவரீர்) |
| ஸ்ரக் பூஷா அம்பரம் | மாலை ஆபரணம் திருப்பரிவட்டமாகிய இவற்றை | மம சரணம் அஸி | அடியேனுக்குப் புகலிடமாகின்றீர் |
| அயதாயதம் ததாநः | அடைவுகெட அணிந்து கொண்டவராய் | | |

* * * [ஸ்ரீரங்கேசய] ஸ்ரீ கஜேந்திர ரக்ஷண வ்ருத்தாந்தத்தை இந்த ச்லோகத்தோடு நிகமித்தருளுகின்றார். "வன்தாமரைநெடு ஒருங்கே மரிந்து இடந்தலர்ந்த மென்கால் கமலத்தடம்போல் பொலிந்தன—எம்பிரான தடங்கண்கள்" என்கிற திருவிருத்தப் பாசுரத்தின் பொருளை ஒருபுடை தழுவியது (வாத்யாவ்யாலோலத்கமல தடாக தாண்ட-

வேக) என்பது (ஆர்தக்வநி) கேட்டுப் பொறுத்திருக்கமாட்டாமல் திருப்பரிவட்டம் திருவாபரணங்கள் திருமாலை முதலியவற்றை அடைவுகெட (அதாவது இடம்தடுமாறி)ச் சாத்திக்கொண்டு எழுந்தருளினமை மூன்றாவது பாதத்தினால் கூறப்பட்டது.

கெட்டேன்! கெட்டேன்!; இப்படி ஆச்ரிதனை நீர்ப்புழுவின் வாயிலே அகப்படவிட்டேனே! என்று நொந்துகொண்டே பொய்கைக் கரைக்குப் போந்தமை நான்காவது பாதத்தினால் சொல்லப்பட்டது. அடியார்க்குத் துன்பமுண்டாகுங் காலத்திலே இங்ஙனமே பரிதாபம் கொள்ளுகிற தேவரீர் எழுந்தருளியிருக்க அடியேனுக்கு என்ன குறை! என்கிற ஆச்வாஸம் முதல் பாதத்தில் ஸூசிதம். (59)

मीनतनुस्त्वं नावि निधाय स्थिरचरपरिकरमनुमनु भगवन् ।
वेदसनाभिस्वोक्तिविनोदैः अकलितलयभयलवममुमवहः ॥ ६० ॥

மீநதநுஸ்த்வம் நாவி நிதாய ஸ்திரசரபரிகரமநுமநு பகவந்!
வேதஸநாபிஸ்வோக்திவிநோதை: அகலிதலயபயலவமமுமவஹ:. 60

| | | | |
|---|---|---|---|
| பகவந் | எம்பெருமானே! | வேதஸநாபி ஸ்வோக்தி விநோதை: | வேத ரூபங்களான தமது வேடிக்கை வார்த்தைகளினால் |
| மீநதநு: த்வம் | மீனுருக்கொண்ட தேவரீர் | அகலித லய பய லவம் | பிரளய பயத்தைப் பற்றின சிந்தா லேசமுமில்லாமே |
| நாவி | ஒரு கப்பலில் | அமும் | கீழ்ச்சொன்ன பரிகரத்தை |
| அநுமநு | மநுமஹர்ஷியினருகே | அவஹ: | வஹித்தீர். |
| ஸ்திர சர பரிகரம் | ஸ்தாவர ஜங்கமாத்மக ஸகல பதார்த்தங்களையும் | | |
| நிதாய | வைத்து | | |

* * * [மீநதநுஸ்த்வம்] இந்த ச்லோகம் முதலாக எம்பெருமானுடைய தசாவதார சரிதங்களை அநுபவிக்கிறார். இதுவும் அடுத்த ச்லோகமும் மத்ஸ்யாவதார சரிதையில் ஈடுபட்டுப் பேசுவன. க்ருதமாலா நதியின் கரையில் திருமாலை நோக்கித் தவஞ் செய்துகொண்டிருந்த ஸத்யவ்ரதனென்னுமோர் ராஜர்ஷி ஜலபானம் பண்ணிக்கொண்டு பிழைத்திருந்தார். அவர் ஜலதர்ப்பணஞ் செய்கையில் அவரது இரண்டு கைகளுக்குள் ஒரு சிறிய மீன் அகப்பட்டுக்கொண்டது, அதனை அவர் ஜலத்தில் விட்டார். பிறகு அந்த மீனின் வேண்டுகோளின்படி பலவிடங்களில் விடப்பட்டுக் கடைசியாகக் கடலில் விடப்பட, அப்பால் அந்த ஸத்யவ்ரதர் அம்மீனிடத்துப் பெருமயல்கொண்டு அதனை நோக்கி 'ஓ மத்ஸ்யராஜனே! உன்னுடைய வரலாற்றைத் தெரிந்துகொள்ள மிக்க ஆவலுள்ளவனாயிருக்கிறேன், நூறுயோஜனை நீளமும் அதற்குத்தக்க பருமனும் வாய்ந்துள்ள நீ யார்? உனது தத்துவத்தை வெளியிடவேணுமென்று கைகூப்பிப் பிரார்த்திக்க, அந்த மத்ஸ்யராஜன் ஓ மஹாநுபாவரே! இன்று முதல் ஏழு நாட்களுக்குள் இந்த மூன்று உலகங்களும் மூழ்கிவிடப்போகின்றன. அந்தப் பெருநீரில் ஒரு விசாலமான ஓடம் வரப்போகிறது. அந்த படகில் ஸப்தரிஷிகளும் நீரும் எல்லா ஔஷதிகளும் ஸமஸ்த ப்ராணிகளும் ஏறி மனத்திற்கு வருத்தமொன்றுமின்றி உலாவக் கடவீர்கள்; இப்படி சஞ்சரித்துக் கொண்டிருக்கும் மளவில் ஓர் பெருங்காற்று அடிக்கப் போகிறது. அதனால் அந்த ஓடமானது பெருநீரில் அலையப்போகின்றது. அப்பொழுது எனது சிரஸ்ஸில் முளைத்துள்ள பெரியதொரு கொம்பில் பெரியதொரு ஸர்ப்பத்தினால் அந்த ஓடத்தைக் கட்டிவிடும். பிறகு நான் அந்தப் படகுடன் உம்மையும் எல்லா ப்ராணிகளையும் ரிஷிகளையும் சுமந்துகொண்டு அந்த பேரிருள் நீங்கும்வரையில் நான் கடலில் ஸஞ்சரிக்கப்போகிறேன், அப்போது எனது பெருமையை நீர் உணர்வீர்' என்றுரைத்துவிட்டு மறைந்திடவே, ஆச்சரியமடைந்த அந்த ஸத்யவ்ரதர் பிறகு அப்படியே காலத்தில் நடத்த, அப்பெருமான் அதனை வஹித்துக்கொண்டு அண்டகடாஹத்தளவும் செல்லத் துள்ளி விளையாடி, முன்பு அசுரர் கவர்ந்து சென்ற வேதங்களையும் மீட்டுக்

கொணர்ந்தருளி ஆக இவ்வண்ணம் பிரளயத்தில் நின்றும் ப்ரஜைகளைக் காத்தருளின தும் வேதங்களை உபகரித்தருளினதும் மத்ஸ்யாவதார வரலாறும்.

இந்த வரலாறே இந்த ச்லோகத்தில் அடக்கி அநுஸந்திக்கப்பட்டுளது.

(அநுமநு) என்றது மநுமஹர்ஷியையும் என்றபடியுமாம். ஸத்யவ்ரதரென்றது அவரையே என்ப. ‘அமும்’ என்பதற்கு ‘இந்த ஓடத்தை’ என்று சிலர் பொருள் கூறுவர் : स्त्रियां नौस्तरणिस्तरिः என்ற அமரகோசத்தின்படி (நௌசப்தம்) ஸ்த்ரீலிங்கமாதலால் அமூம் என்றிருக்கவேணும் ; பும்லிங்கமாயிருக்கையாலே ஸ்திரசரபரிகரம் அவஹ: என்றே கொள்ளக்கடவது. ... ... ... (60)

श्रीनयनाभोद्भासुरदीर्घप्रविपुलसुरुचिरशुचिशिशिरवपुः ।
पक्षनिगीर्णोद्गीर्णमहाब्धिः स्थलजलविहरणरतगतिरचरः ॥ ६१ ॥

ஸ்ரீநயநாபோத்பாஸுர தீர்க்க ப்ரவிபுல ஸுருசிர சுசி சிசிரவபுः,
பக்ஷநிகீர்ணோத்கீர்ண மஹாப்தி: ஸ்தலஜலவிஹரணரத கதிரசரः. 61

| | | | |
|---|---|---|---|
| (ஹேபகவந்) | எம்பெருமானே ! | பக்ஷ நிகீர்ண உத்கீர்ண மஹாப்தி: | இறகுகளினால் உட்கொள்ளப்பட்டும் வெளியிடப் பட்டுமான பெருங்கடலை யுடையவராய் |
| ஸ்ரீநயநாபோத் பாஸுர | பிராட்டியின் திருக்கண்போல விளங்கா நிற்பதும் | | |
| தீர்க்க | நீண்டதும் | | |
| ப்ரவிபுல | மிகவிசாலமானதும் | ஸ்தல ஜல விஹரண ரத கதி: | தரையிலும் நீரிலும் விளையாடுவதில் ஆஸக்தமான கமனத்தை யுடையவராய் |
| ஸுருசிர | மிக அழகியதும் | | |
| சுசி | நிர்மலமானதும் | | |
| சிசிர | குளிர்ந்ததுமான | | |
| வபு: (த்வம்) | திருமேனியை யுடையவரான தேவரீர், | அசர: | உலாவினீர். |

* * * [ஸ்ரீநயநாப] மத்ஸ்யமூர்த்தியின் விஹார விசேஷத்தை அநுபவிக்கிறதில், மீன்வடிவத்தின் அழகைப் பூர்வார்த்தம் அழகாக வர்ணிக்கின்றது. ஸ்த்ரீகளைக் கயல்கண்ணி என்றும், சேலேய்கண்ணி என்றும், கெண்டையொண்கண்ணி என்றும் கூறுவர். ஸாமாந்ய ஸ்த்ரீகளின் கண்ணுக்கு மத்ஸ்யம் உபமானமாயிருக்கும். * நாரீணுமுத்தமை யான பிராட்டியின் திருக்கண் மீனுக்கு உபமாநமாயிருக்கக் கடவதாகையாலே (ஸ்ரீநயநாபோத்பாஸுர) எனப்பட்டது. श्रियो नयनस्येव आभया उद्भासुर மென்றுவது, ஸ்ரீநயநாபமாயும், உத்பாஸுரமாயும் என்றுவது கொள்ளலாம். எல்லாப் பதங்களும் வ்புஸ்ஸுக்கு விசேஷணமாகவுள்ளன.

[பக்ஷநிகீர்ணேத்யாதி] மத்ஸ்யமூர்த்தி கடலில் விளையாடும்போது சிறகுகளில் கடல் வெள்ளம் முழுவதையும் அடக்கி வெறுந்தரையாக்கி அதிலே சிலகாலம் விளையாடுவதும், அந்த வெள்ளத்தை மறுபடியும் யதாக்ரமமாக வெளியிட்டு அந்த வெள்ளத்திலே விளையாடுவதுமாக இங்ஙனே விசித்திரமான திருவிளையாடல் நடந்ததென்றபடி. பக்ஷநிகீர்ணமாம்போது ஸ்தலமாயிருக்கும் ; உத்கீர்ணமாம்போது ஜலமாயிருக்குமென்க. பிள்ளைப்பெருமாளையங்கார் திருவரங்கத்து மாலையில் (செய்யுள்—22) “ஊழிப்பொழுதொரு சேலாய் ஒரு செறுவுட்கரந்த, ஆழிப்பெரும்புனல்” என்றதும் இங்கு நினைக்கத்தக்கது. “முடங்கு தெண்டிரைய பௌவம் முற்றுமோர் செறுவுட்சென்று, மடங்கியது” என்பது ஸ்ரீ பாகவதச்செய்யுள். ... ... (61)

**चकर्थ श्रीरङ्गिन् निखिलजगदाधारकमठः भवन् धर्मान् कूर्मः पुनरमृतमन्थाचलधरः ।
जगन्थ श्रेयस्त्वं मरकतशिलापीठललितः जलादुद्यल्लक्ष्मीपदकिसलयन्यासमुलभम् ॥ ६२ ॥**

சகர்த்த ஸ்ரீரங்கிந் ! நிகிலஜகதாதாரகமட:
பவந் தர்மாந் கூர்ம: புநரம்ருத மந்தாசலதர:,
ஜகந்த ச்ரேயஸ் த்வம் மரகதசிலாபீடலலித:
ஜலாதுத்யல் லக்ஷ்மீபதகிஸலயந்யாஸஸுலபம். 62

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கிந் ! | ஸ்ரீரங்கநாதரே ! (தேவரீர்) | கூர்ம: | ஆமையாகி, |
| நிகில ஜகத் ஆதாரகமட: பவந் | எல்லா வுலகங்களுக்கும் ஆதாரமான கூர்மரூபியாய்க் கொண்டு | மரகத சிலா பீட லலித: | மரகதக் கல்மயமான ஆஸனம் போன்றழகியவராய் |
| தர்மாந் | தருமங்களை | ஜலாத் | (கடல்) நீரில் நின்றும் |
| சகர்த்த | வியாக்கியானம் பண்ணினீர் ; | உத்யத் | உதயமாகாநின்ற |
| புந: | அன்றியும், | லக்ஷ்மீ | பிராட்டியினுடைய |
| அம்ருத மந்தர சல தர: | அம்ருதம் கடைவதற்கான மந்தர பர்வதத்தைத் தாங்குகின்ற | பத கிஸலய | தளிர்போன்ற திருவடிகளை |
| | | ந்யாஸ ஸுலபம் | வைப்பதற்குறுப்பான |
| | | ச்ரேய: | நன்மையை |
| | | ஜகந்த | அடைந்தீர். |

* * * [சகர்த்த ஸ்ரீரங்கிந்] ஆகி கூர்ம மூர்த்தியையும் மந்தர மலையைத் தாங்கிக் கிடந்த கூர்மமூர்த்தியையும் இதில் அநுபவிக்கிறார். "आधारशक्तिमुपरि प्रकृतिं परेण वा कूर्मम्" என்று பூர்வசதகத்திலருளியபடி எழுந்தருளியிருக்கிற கூர்மமூர்த்தி இங்கு நிகிலஜகதாதாரகமட: எனப்பட்டார். அவர் அனேக தர்மங்களை யருளிச்செய்தாரென்பது கூர்ம புராணாதிகளால் ப்ரஸித்தமாதலால் (தர்மாந் சகர்த்த) என்றார். "அம்ருதமந்தாசலதர:" என்று தொடங்கி முழுதும் "மலங்கு விலங்கு நெடுவெள்ளம் மறுக அங்கோர் வரைநட்டு, இலங்கு சோதியாரமுதம் எய்துமளவோராமையாய், விலங்கல் திரியத் தடங்கடலுட் சுமந்து கிடந்த வித்தகன்" (பெரியதிருமொழி 8-8-2) என்று பேசப்பட்ட வரலாற்றிலடங்கிய கூர்மமூர்த்தியின் அநுபவம். "விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுது (1449)" என்கிறபடியே அப்போது கடலில்நின்றும் தோன்றின பிராட்டி கூர்மமூர்த்தியை மரகதசிலாபீடமாகக் கொண்டு அதன்மேல் திருவடியையிட்டு மிதித்து மேலே ஏறினளென்கிறவிது சமத்காரோக்தி.

இந்த ச்லோகத்தின் முதற்பதம் चकर्थ என்பது. व्याचकर्थ என்றபடி. பூருவர்களின் வியாக்கியானத்தில் चकर्थ என்று பாடம் கொள்ளப்பட்டது. कथधातोः क्रियामध्ये-कवचनरूपम् என்றும் நிரூபிக்கப்பட்டுளது. அப்படியாகில் कथयामासिथ என்று ரூபம் தேற வேணும். இனி, கததாதுவை (சுராதியிலன்றிக்கே) ப்வாதியில் படித்துக்கொண்டு, आगमशास्त्रमनित्यम् என்கிற பரிபாஷையைக்கொண்டு, கதம்சித் சகத்த என்கிற ரூபமும் நிஷ்பாதிதமாகலாம். பெரியார்பக்கல் கேட்டுத் தெளிவது. (62)

**हृदि सुररिपोर्दंष्ट्रोत्खाते क्षिपन् प्रलयार्णवं क्षितिकुचतटीमर्चन् दैत्यास्रकुङ्कुमचर्चया ।
स्फुटघुरघुटाप्रारम्भब्रह्मस्तवोन्मुखबृंहितः शरणमसि मे रङ्गिन् ! त्वं मूलकोलतनुर्भवन् ॥ ६३ ॥**

ஹ்ருதி ஸுரரிபோர் தம்ஷ்ட்ரோத்காதே க்ஷிபந் ப்ரலயார்ணவம்
க்ஷிதிகுசதடீமர்ச்சந் தைத்யாஸ்ர குங்குமசர்ச்சயா,
ஸ்புடகுரகுடாப்ராரம்பத் ப்ரஹ்மஸ்தவோந்முகப்ருംஹித:
சரணமஸி மே ரங்கிந் ! த்வம் மூலகோலதநுர் பவந். 63

| | |
|---|---|
| ரங்கின் | ஸ்ரீரங்கநாதரே! |
| ஆதிகோல தநு: பவத் த்வம் | ஆதிவராஹரூபியான தேவரீர் |
| தம்ஷ்ட்ரா உத்காதே | கோரப்பல்லினால் பிளக்கப்பட்ட |
| ஸுரரிபோ: ஹ்ருதி | ஹிரண்யாக்ஷாஸுரனது மார்பிலே |
| ப்ரளய அர்ணவம் | ப்ரளயக்கடலை |
| க்ஷிபந் | கொண்டு தள்ளினவராய், |
| ததீய அஸ்ர குங்கும சர்ச்சயா | அவ்வஸுரனுடைய ரக்தமாகிற குங்குமச்சாறு பூசுவதனால் |
| க்ஷிதி குச தடம் | பூமிபிராட்டியின் திருமுலைத் தடத்தை |
| அர்ச்சந் | அலங்கரித்தவராய், |
| ஸ்புட ஜிந ஸடா | நன்றாக உதறப்பட்ட பிடரிமயிர்களினால் |
| ப்ராம்யத் | அஞ்சி மருண்ட |
| ப்ரஹ்ம | நான்முகன் செய்த |
| ஸ்தவ | தோத்திரங்களுக்கு |
| உந்முக | எதிர்முகமான |
| ப்ருஂஹித: | கர்ஜனையை யுடையவரான |
| த்வம் | தேவரீர் |
| மே | அடியேனுக்கு |
| சரணம் அவ | புகலிடமாகிறீர். |

* * * [ஹ்ருதி ஸுரரிபோ:] இதில் ஆதிவராஹாவதாரத்தை அநுபவிக்கிறார். பூமியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டு பிரளய வெள்ளத்திலுட்சென்ற ஹிரண்யாக்ஷனென்னு மஸுரனை நிரஸித்து பூமியை மீட்டுக்கொணரும் பொருட்டு வராஹமூர்த்தியாகத் தோன்றிய தேவரீர், அவ்வஸுரனுடைய மார்பைக் கோரப்பல்லாலே பிளந்து பெரும் பள்ளமாக்கி அதில் ப்ரளயார்ணவ ஜலத்தைப் பாய்ச்சினீர் என்று முதல் பாதத்தில் கூறியது அவ்வஸுரனுடைய உடற்பெருமையைக் கூறியவாறு. பிறகு அவனது உடலில் நின்றும் ரத்தவெள்ளத்தைக் கக்குவித்து அதுவாகிற குங்குமக்குழம்பினாலே பூமிப்பிராட்டியின் திருமுலைத் தடத்தை அலங்கரித்ததாக இரண்டாவது பாதத்திற் கூறியது भुवो वीरपत्नीत्ववर्णनोचितम्. ப்ரஹ்மலோக பர்யந்தமாக வளர்ந்து பிடரி மயிர்களைச் சிலிர்ப்பிக்க, ஆங்கு அதனால் நடுநடுங்கின பிரமன் ஸ்தோத்ரம் பண்ணவும் அந்தத் துதிக்குச்சேர வராஹமூர்த்தி பெரு முழக்கம் செய்யவும் சேர்ந்த சேர்த்தி மூன்றாவது பாதத்தில் பேசப்பட்டது. அந்தப் பெரு முழக்கத்தின் பெருமையை ஸ்ரீ தேசிகன் தசாவதார ஸ்தோத்ரத்தில் * गोपायेदनिशं जगन्ति कुहनापोत्री पवित्रीकृतब्रह्माण्डः प्रलयोर्मिघोषगुरुभिर्घोणारवैर्घुर्घुरैः * என்று அருளிச்செய்ததுணர்க. ... (63)

64 नृहरिदशयोः पश्यन्नौत्पत्तिकं घटनाद्भुतं नरमुत हरिं दृष्ट्वैकैकं समुद्विजते जनः।
इति किल सिताक्षीरन्यायेन सङ्गमिताङ्गकं स्फुटसटमहादंष्ट्रं रङ्गेन्द्रसिंहमुपास्महे ॥ ६४ ॥

ந்ருஹரிதசயோ: பச்யந் ஔத்பத்திகம் கடநாத்புதம்
நரமுத ஹரிம் த்ருஷ்ட்வைகைகம் ஸமுத்விஜதே ஜந:,
இதி கில ஸிதாக்ஷீரந்யாயேந ஸங்கமிதாங்ககம்
ஸ்புடஸடமஹாதம்ஷ்ட்ரம் ரங்கேந்த்ர ஸிம்ஹமுபாஸ்மஹே. 64

| | |
|---|---|
| ந்ருஹரி தசயோ: | மனுஷ்யத்வ ஸிம்ஹத்வங்களினுடைய |
| ஔத்பத்திகம் | இயற்கையான |
| கடநா அத்புதம் | சேர்த்தியழகை |
| பச்யந் ஜந: | ஸேவிக்கின்ற ஜனமானது |
| நரம் | மனுஷ்ய ஜாதியையோ |
| உத ஹரிம் | அல்லது ஸிம்ஹ ஜாதியையோ |
| ஏகைகம் | ப்ரத்யேகமாக |
| த்ருஷ்ட்வா | பார்த்து |
| ஸமுத்விஜதே | வெறுப்படையும் |
| இதி கில | என்கிற கருத்தினாலே போல, |
| ஸிதாக்ஷீர ந்யாயேந | சர்க்கரையையும் பாலையும் சேர்க்கின்ற கணக்கிலே |
| ஸங்கமித அங்ககம் | இரண்டு திருவுருவங்களை ஒன்றாய் புணர்த்துக் கொண்டவராய், |
| ஸ்புடஸட மஹா தம்ஷ்ட்ரம் | அழகிய பிடரி மயிர்களையும் பெரிய கோரப் பற்களையு முடையவராயுமான |
| ரங்கேந்த்ர ஸிம்ஹம் | சிங்க மூர்த்தியான ஸ்ரீரங்கநாதரை |
| உபாஸ்மஹே | சிந்திக்கிறோம். |

* * * [ந்ருஹரிதசயோ:] இது முதல் மூன்று ச்லோகங்களினால் நரஸிம்ஹ மூர்த்தியின் வைபவத்தை அநுபவிக்கிறார். இரணியன் வேண்டிக்கொண்ட வரத்திற் குத் தகுதியாக எம்பெருமான் ஒரு விலக்ஷண ரூபமெடுத்துவந்து அவதாரம் செய்ய வேண்டிற்று. முகம் சிங்கமாயும் உடல் மானிடமாயுமிருப்பது விகாரமான ரூபமாக இருக்குமோ வென்று யாரும் நினைக்க வேண்டாதபடி ஆழ்வார்கள் "அழகியான்தானே அரியுருவன்தானே (2403)" என்று அருளிச் செய்தார்கள். 'அழகிய சிங்கர்' என்றே ஜகத்ப்ரஸித்தியும் வந்துவிட்டது. அந்த அழகை இந்த ச்லோகத்தில் பட்டர் பேசுவது மிகவுமழகியது. (ந்ருஹரி தசயோ ரித்யாதி) நரத்வ ஸிம்ஹத்வாவஸ்தைகளுக்கு ஆரோபிதம்போலன்றிக்கே இயற்கையாகவே அமைந்துள்ள சேர்த்தியழகைப் பார்க் கின்ற ஸகல ஜனங்களும் "இனி நாம் பார்த்தால் இங்ஙனே இரண்டு வடிவும் சேர்ந்த சேர்த்தியைப் பார்க்கவேணுமே தவிர தனியாக நர ரூபத்தையும் தனியாக ஸிம்ஹ ரூபத்தையும் பார்க்கலாகாது; ஏன்? தனித்தனியான அவ்வடிவுகளில் யாதொரு அழகு மில்லையே; அவற்றைத் தனித்தனியே பார்த்தால் வெறுப்பு உண்டாகும்படியன்றோ இருக்கிறது" என்று நினைக்கும்படியாக, சர்க்கரையும் பாலும் சேர்ந்ததொப்ப ஸுஸங்கதமான அவயவச் சேர்த்தியை யுடையவனும் விளங்குகின்ற உளை மயிர்களை யுடையவனும் பெருத்த கோரப்பற்களை யுடையவனுமான ஸ்ரீ நரஸிம்ஹமூர்த்தி ரங்க நாதனைத் தொழுகிறோ மென்றாராயிற்று.

இதில் இரண்டாவது பாதத்தில் (ஸமுத்விஜதே ஜந:) என்பதே ப்ராசீந பாடம். ஸம்ஸ்க்ருதவ்யாக்யாதாவும் அப்படியே வியாக்கியானம் செய்துவிட்டு முடிவில் समुद्विजतां जन: इति पाठश्चेत् समीचीनम् என்று எழுதிவைத்தார். समुद्विजते என்பதற்கு बिभेति என்று பொருளுரைத்தார். அப்பொருள் இங்கு விவக்ஷிதமாயிருக்கத் தகுதியில்லை. ஸமுத்வேகமென்பது இவ்விடத்தில் ஜுகுப்ஸைப்படுதல். समुद्विजते என்றது समुद्विजेत என்றபடி. 'நானழைத்தால் உடனே ஓடி வருகிறான்' என்றாற்போலே லோகவ்யவ ஹாரமுள்ளது. அங்கு, ஓடிவருகிறானென்றது ஓடிவருவான் என்றபடி. இந்த ரீதி ஸம்ஸ்க்ருத பாஷையிலுமொக்கும். ஆகவே உள்ளபடியே பாடமிருக்கலாம்.

द्विषाणद्वेषोद्यन्नयनवनवह्निप्रशमनभ्रमल्लक्ष्मीवक्त्रप्रहितमधुगण्डूषसुषमैः ।
नखक्षुण्णारातिक्षतजपटलैराप्लुतसटाजटास्कन्धो रुन्धे दुरितमिह पुंस्पञ्चवदनः ॥ ६५ ॥

த்விஷாணத்வேஷோத்யந்நயநவநவஹ்நிப்ரசமந
ப்ரமல்லக்ஷ்மீவக்த்ரப்ரஹிதமதுகண்டூஷஸுஷமை:,
நகக்ஷுண்ணாராதிக்ஷதஜபடலைராப்லுதஸடா
ச்சடாஸ்கந்தோ ருந்தே துரிதமிஹ பும்ஸ்பஞ்சவதந:. 66

| | |
|---|---|
| த்விஷாண | ஆச்ரித சத்ருவான இரணியனிடத்தில் |
| த்வேஷ | பகையினால் |
| உத்யத் | உண்டாகின்ற |
| நயநவநவஹ்நி | திருக்கண்களில் நெருப்பை |
| ப்ரசமந | அணைக்கும்பொருட்டு |
| ப்ரமத் | பரபரப்புக்கொள்கின்ற |
| லக்ஷ்மீ | ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் |
| வக்த்ர | திருவாயிலிருந்து |
| ப்ரஹித | உமிழப்பட்ட |
| மதுகண்டூஷ ஸுஷமை: | தாம்பூல கண்டூஷம் போன்ற |
| நகக்ஷுண்ண அராதிக்ஷதஜ படலை: | நகங்களினால் பிளக்கப் பட்ட அப்பகைவனது ரத்த தாரைகளினால் |
| ஆப்லுதஸடா ச்சடாஸ்கந்த: | நனைக்கப் பட்ட பிடரிமயிர்த் திரளோடு கூடிய திருத் தோள்களையுடையவரான |
| பும்ஸ்பஞ்சவதந: | நரஸிம்ஹ மூர்த்தியானவர் |
| இஹ | இத்திருவரங்கத்தில் |
| துரிதம் | (நமது) பாவங்களை |
| ருந்தே | தொலைத்தருளுகிறார். |

| Identity of [illegible] with [illegible]



* * * [த்விஷாணத்வேஷ்யாதி] இரணியனுடைய மார்பில் நரசிங்கமூர்த்தியின் திருவுகிர்பட்டவாறே உதிரவெள்ளம் பெருகத் தொடங்கிற்று; அது எங்ஙனே உத்ப்ரேக்ஷிக்கலாயிருந்த தென்னில்; (பூர்வார்த்தம் முழுதும் அந்த உத்ப்ரேக்ஷையைத் தெரிவிக்கின்றது.) ஆச்ரித விரோதியான அவ்விரணியனின் பக்கல் மாத்ஸர்யத்தினால் நரஸிம்ஹனுடைய ரோஷாக்நியானது மிகவும் பொங்கிக் கிளர, அதனை அடக்கவேணுமென்று பரபரப்புக்கொண்ட பெரிய பிராட்டியார் தம்முடைய திருப்பவளத்திலிருந்து தாம்பூல மதுவைக் கொப்பளித்தாள்போலவும்; அந்த கண்டூஷந்தான் ரக்த வெள்ளமாகப் பெருகுகின்றதோ! என்னலாம்படியிராநின்ற தாய்த்து. அப்படிப்பட்ட உதிர வெள்ளத்தினால் அபிஷிக்தமான உளைமயிர்களையுடைய நரஸிம்ஹ மூர்த்தியான பெரிய பெருமாள் இந்த ஸ்ரீரங்கவிமானத்திலே நமக்குக் காட்சிதந்து நமது பாவங்களையெல்லாம் போக்கியருளாநின்றார் என்றதாயிற்று. பிராட்டியும் ஸம்ப்ரமிக்கும்படியாக அத்தனை சீற்றமுண்டாயிற்றென்று காட்டினபடி.

[गण्डूषसुषमैः] गण्डूषस्येव सुषमा येषां तैरिति बहुव्रीहिः । * सुषमा परमा शोभा—इत्यमरः (65)

नखाग्रग्रस्तेऽपि द्विषति निजभक्तद्रुहि रुषः प्रकर्षाद्विष्णुत्वद्विगुणपरिणाहोत्कटतनुः ।
विरुद्धे वैयग्रीसुघटितसमानाधिकरणे नृसिंहत्वे बिभ्रद्वरद ! बिभरामासिथ जगत् ॥ ६६ ॥

நகாக்ரக்ரஸ்தேபி த்விஷதி நிஜபக்தத்ருஹி, ருஷ: Do
ப்ரகர்ஷாத் விஷ்ணுத்வத்விகுணபரிணாஹோத்கடதநு:,
விருத்தே வையக்ர்ஸுகடிதஸமாநாதிகரணே
ந்ருஸிம்ஹத்வே பிப்ரத் வரத! பிபராமாஸித ஜகத். 66

| | | | |
|---|---|---|---|
| வரத! | வரந்தரும் பெருமானே! | நகாக்ர க்ரஸ்தே அபி | உகிர் நுனியனவால் தொலைக்கப் பட்ட போதிலும், |
| விருத்தே (அபி) | ஒன்று சேரமாட்டாதவைகளாயிருந்தபோதிலும் | ருஷ: | சீற்றத்தினுடைய |
| வையக்ர்ஸுகடித ஸமாநாதிகரணே | (ஆச்ரித விரோதியைத் தொலைக்க வேணுமென்ற) ஊற்றத்தினால் மிகவும் பொருந்தின ஸாமாநாதிகரண்யத்தை யுடைய | ப்ரகர்ஷாத் | மிகுதியினால் |
| ந்ருஸிம்ஹத்வே | நரத்வ ஸிம்ஹத்வங்களை | விஷ்ணுத்வ த்விகுண பரிணாஹ உத்கட தநு: | விஷ்ணுத்வத்திற் காட்டிலும் இரட்டித்த பெருமையையுடையதும் பயங்கரமுமான திருமேனியை யுடையவராய் |
| பிப்ரத் | ஏற்றுக்கொள்ளாநின்ற | ஜகத் | உலகத்தை |
| த்வம் | தேவரீர் | பிபராமாஸித | ரக்ஷித்தீர். |
| நிஜபக்த த்ருஹி | ஆச்ரித விரோதியான இரணியன் | | |

* * * [நகாக்ரேத்யாதி] ஆச்ரித விரோதியான இரணியனை நகாக்ரமாத்ரத்தினால் கீண்டு தொலைத்தவளவிலும் 'இப்பாவியானவன் சிறுக்கனுக்கு மிகவும் தீங்கிழைத்தவனன்றோ' என்று கொண்ட சீற்றம் தணியாமையாலும், அந்தச் சீற்றம் மேன்மேலும் வளர்ந்து செல்லுகையாலும் திருமேனியும் பரம பயங்கரமாக மிகவும் வளர்ந்திட்டதென்கிறார் பூர்வார்த்தத்தில். [விஷ்ணுத்வ த்விகுணேத்யாதி] ந்ருஸிம்ஹாநுஷ்டுப் மந்த்ரத்திலுள்ள மஹாவிஷ்ணுபதத்திற்கு வாச்யமான வ்யாப்தியிற் காட்டிலும் இரட்டித்த பரப்பையுடைய தென்றவிது அதிசயோக்தி.

உத்தரார்த்தத்தில், முதல் மூன்று பதங்களும் த்விதீயா த்விவசநாந்தங்கள். நரத்வ ஸிம்ஹத்வங்கள் ஒன்றோடொன்று சேரமாட்டாதவையாயினும் ப்ரஹ்லாதார்த்தி நிவர்த்தந வ்யக்ரதையாலே (இரணியன் பெற்றிருந்த வரத்திற்குப் பழுதில்லாதபடி

சேரவிட்டுக் கொள்ளப்பட்டன வென்கிறார். (ஜகத் பிபராமாவஹித) இவ்வளவு ஆச்ரித பக்ஷபாத பிருக்கையாலே தேவரீர ஜகத்துக்கெல்லாம் நிர்வாஹகராகத் தகுதியுடையீர் என்றபடி. "எங்குமுளன் (2872)" என்று ப்ரஹ்லாதன் சொன்ன வார்த்தை எந்தவிடத்திலும் பொய்யாகாமைக்காக நரஸிம்ஹமூர்த்தியாகி ஸகல ஜகத்திலுள்ளும் "உறைந்தீர் என்கிற கருத்தும் நான்காமடியில் தோன்றும். "भक्तस्य दानवशिशोः परिपालनाय भद्रां नृसिंहकुहनामधितिष्ठतस्ते । स्तम्भैकवर्जमधुनाऽपि करीश ! नूनं त्रैलोक्यमेतदखिलं नरसिंहगर्भम् ॥" என்ற தேசிக திவ்யஸூக்தியும் இக்கருத்துக் கிணங்க நோக்கத்தக்கது.

[सुघटितसमानाधिकरणे] सुघटितं यथातथा समानाधिकरणे इति यावत् ॥ (66)

दैत्यौदार्येन्द्रयाच्ञाविहतिमपनयन् वामनोऽर्थी त्वमासीः विक्रान्ते पादपद्मे त्रिजगदणुसमं पांसुलीकृत्य लिल्ये ।
नाभीपद्मश्च मानक्षममिव भुवनग्राममन्यं सिसृक्षुः तस्थौ रङ्गेन्द्र ! वृत्ते तव जयमुखरो डिण्डिमस्तत्र वेदः ॥ ६७ ॥

தைத்யௌதார்யேந்த்ரயாச்ஞாவிஹதிமபநயந் வாமநோர்த்தீ த்வமாஸீ:
விக்ராந்தே பாதபத்மே த்ரிஜகதணுஸமம் பாம்ஸுலீக்ருத்ய லில்யே,
நாபீபத்மச் ச மாநக்ஷமமிவ புவநக்ராமமந்யம் ஸிஸ்ருக்ஷு:
தஸ்தௌ ரங்கேந்த்ர! வ்ருத்தே தவ ஜயமுகரோ டிண்டிமஸ் தத்ர வேத: 67

| | | | |
|---|---|---|---|
| ரங்கேந்த்ர | ஸ்ரீரங்கநாதரே! | பாம்ஸுலீக்ருத்ய | தூம்பு தூசுகள் ஒட்டப்பெற்றவைகளாக ஆக்கி |
| வாமந: த்வம் | வாமநாவதாரமெடுத்த தேவரீர், | லில்யே | லய மடைந்ததாயிற்று; |
| தைத்ய ஔதார்ய இந்த்ர யாச்ஞா விஹதிம் அபநயந் | அசுரனுடைய மஹாபலியின் ஔதார்யமென்ன இந்திரனுடைய யாசகத்வமென்ன இவ்விரண்டிற்கும் விஹதத்தைப் போக்குபவராய் [இரண்டையும் ஸபலமாக்குவதற்காக] | நாபீபத்மச்ச | திருநாபிக்கமலமோவென்றால் |
| | | மாநக்ஷமம் | அளப்பதற்குரிய |
| | | அந்யம் | மற்றொரு |
| | | புவநக்ராமம் | லோக ஸமூஹத்தை |
| | | ஸிஸ்ருக்ஷு: இவ | ஸ்ருஷ்டிக்க விரும்பியதுபோல |
| | | தஸ்தௌ | இருந்தது; |
| அர்த்தீ ஆஸீ: | (மாவலி பக்கல்) யாசகராக ஆனீர்; (அதன் பிறகு) | தவ தத்ர வ்ருத்தே | தேவரீருடைய அந்த (த்ரிவிக்ரம) அபதானத்தில் |
| த்ரிஜகத் | மூவுலகமும் | வேத: | வேதமானது |
| அணுஸமம் | பரமாணுப்ராயமாய்க் கொண்டு | ஜயமுகர: | விஜய கோஷமிக்க |
| விக்ராந்தே பாதபத்மே | (தன்னை) அளக்கப் புகுந்த திருவடித் தாமரைகளை | டிண்டிம: | பெரும்பறையாக ஆகின்றது. |

* * * [தைத்யௌதார்ய] வாமநாவதாரத்தை நான் துதிக்க வேண்டா; வேதமே துதித்தது என்கிறார். மாவலி பக்கத்திலுள்ள ஔதார்யமென்கிற பெருங் குணத்தையும், இந்திரன் பக்கலிலுள்ள யாசகத்வத்தையும் குறிக்கொண்டு அவ்விரண்டையும் ஸபலமாக்குவதற்காக தேவரீர்தாமே பிக்ஷுகராய்ச் சென்றீர்; பிறகு மண்ணுலகையும் விண்ணுலகையும் தாவியளந்த இரண்டு திருவடித்தாமரைகளிலே, மூவுலகமானது பரமாணுவோடொக்ககாகி "இது அந்தத் திருவடிகளில் ஒட்டிக்கொண்டிருப்பதாசு" என்னும்படியாக லயித்தது: அப்போது திருநாபிக்கமலமிருந்த இருப்பு எத்தகைத்தென்னில்; இருந்த வுலகமெல்லாம் இந்தத் திருவடிகளால் அளக்கப்பட்டு விட்டது; இன்னமும் அளப்பதற்கு உறுப்பாக வேறுசில உலகங்களையும் ஸ்ருஷ்டிப்போம்" என்று ஆசைகொண்டது போன்றிருந்தது. இத்தகைய த்ரிவிக்ரமாவதார சரிதையில் *त्रीणि पदा विचक्रमे विष्णुर्गोपा अदाभ्यः* இத்யாதியான வேதமே விஜய பேரியாக இருந்தது என்றாராயிற்று.

ஸ்ரீராம க்ருஷ்ணாத்யவதாரங்களில் ஆச்ரிதர்களுடைய இஷ்ட ப்ராபணத்திற்கும் அநிஷ்ட நிவாரணத்திற்கும் எம்பெருமான் யாசக வ்ருத்தியை அவலம்பிக்க வில்லையே; இந்த அவதாரத்தில்மாத்திரம் அதை ஏன் அவலம்பித்தார்? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக முதல் பாதம் உள்ளது. மஹாபலியானவன் மற்ற அரக்கரசுரர்களைப் போலன்றிக்கே ஔதார்யமென்று ஒரு சிறந்த குணமுடையவனாயிருந்ததனால் அதற்குச் சேரத் தானே யாசகனாகி இந்திரனுடைய குறையைப் போக்கினாரென்க. லீக்ராந்தே என்பதும் பாதபத்மே என்பதும் த்விதீயா த்விவசநம். மூவுலகும் பாம்ஸுப்ராயமாக ஆயிற்று என்று சொல்லவேண்டியதை "பாதபத்மே பாம்ஸூலீக்ருத்ய" என்று சொன்னது சமத்காரம். அதிமாநுஷஸ்தவத்தில் व्यकिरद याचककुलमपि विपकीर्णिस्यूलवलन्तसिकतामिव என்றது இங்கு ஸ்மரிக்கத்தகும். ... ... (67)

भवान् रामो भूत्वा परशुपरिकर्मा भृगुकुलात् अलावीद्भूपालान् पितृगणमतार्प्सीत्तदसृजा ।
भुवो भाराक्रान्तं लघुतलमुपाचीक्लृपदिति द्विषामुग्रंपश्योऽप्यनघ ! मम माजीगणदघम् ॥ ६८ ॥

பவாந் ராமோ பூத்வா பரசுபரிகர்மா ப்ருகுகுலாத்
அலாவீத் பூபாலாந் பித்ருகணமதார்ப்ஸீத் ததஸ்ருஜா,
புவோ பாராக்ராந்தம் லகுதலமுபாசீக்ல்பதிதி
த்விஷாமுக்ரம்பச்யோப்யநக ! மம மாஜீகணதகம். 68

| | | | |
|---|---|---|---|
| ஹே அநக! | குற்றமற்ற பெருமானே! | அதார்ப்ஸீத் | தர்ப்பித்தீர்; |
| பவாந் | தேவரீர் | பார ஆக்ராந்தம் | பாரம் மிகுந்த |
| ப்ருகுகுலாத் | ப்ருகு குலத்தில் நின்று | புவ: தலம் | பூதலத்தை |
| பரசுபரிகர்மா | மழுப்படை பணித்த | லகு | (சுமை நீங்கி) லேசாக |
| ராம: பூத்வா | ராமனாக ஆகி | உபாசீக்ல்பத் | செய்தருளினீர்; |
| [பரசுராமாவதாரம் பண்ணி] | | இதி | இவ்வண்ணமாக |
| | | த்விஷாம் | பகைவர்களுக்கு |
| பூபாலாந் | (துஷ்ட) க்ஷத்ரியர்களை | உக்ரம்பச்ய: அபி | பயங்கரராக இருந்தாலும் |
| அலாவீத் | அறுத்தொழித்தீர்; | மம | அடியேனுடைய |
| தத் அஸ்ருஜா | அவ்வரசர்களின் ரத்தத்தினால் | அகம் | பாபத்தை |
| பித்ருகணம் | (ஸ்வகீய) பித்ரு குலத்தை | மாஜீகணத் | பொருள்படுத்த வேண்டா. |

* * * [பவாந் ராம:] இதில் பரசுராமாவதாரத்தைத் துதிக்கின்றார். *வென்றிமா மழுவேந்தி முன்மண்மிசை மன்னரை மூவெழுகால் கொன்ற தேவா! * என்றும், *கோக்குல மன்னரை மூவெழுகால் ஒரு கூர்மழுவால் போக்கியதேவன் (3832)* என்றும் சொல்லுகிறபடியே க்ஷத்ரியர்களை இருபத்தொரு தலைமுறை கொன்றொழித்தும், அவர்களுடைய குருதியினால் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் பண்ணியும் மண்ணின் பாரத்தை நீக்கியருளின மஹோபகாரத்தை மூன்று பாதங்களினால் அநுஸந்தித்தாராயிற்று. சத்ருக்கள் திறத்தில் பண்ணின நிக்ரஹத்தை அடியேன் திறத்தில் செய்தருள வேண்டா வென்று நான்காம் பாதத்தில் ப்ரார்த்திக்கிறார்.

அநக! என்று ஸம்போதநமிட்டது ஸாபிப்ராயம். தந்தை சொற்கொண்டு தாயை வதம் பண்ணியிருந்தும் பாப ஸம்பந்தமில்லாமை காட்டினபடி. ... (68)

मनुजसमयं कृत्वा नाथावतेरिथ पद्मया क्वचन विपिने सा चेदन्तर्धिनर्म विनिर्ममे ।
किमथ जलधिं बध्वा रक्षो विभीशवरोद्धतं बलिमुखकुलोच्छिष्टं कुर्वन् रिपुं निरपत्रयः ॥ ६९ ॥

மநுஜஸமயம் க்ருத்வா நாதாவதேரித பத்மயா
க்வசந விபிநே ஸா சேத் அந்தர்த்திநர்ம விநிர்மமே,
கிமத ஜலதிம் பத்த்வா ரக்ஷோ விதீசவரோத்ததம்
பலிமுககுலோச்சிஷ்டம் குர்வந் ரிபும் நிரபத்ரய: ? 69

| | | | |
|---|---|---|---|
| யத்யேஷ | யதினால் | க்ஷேமக்ருஷீவலம் | ஆச்ரித க்ஷேமத்திற்காக க்ருஷி செய்பவரும் |
| கோபவதிதா: | இடைப் பெண்கள் | ஹலதரம் | கலப்பையைத் தரித்திருப்பவருமான |
| க்ருஷ்ண ஆகஸாம் | கண்ணனுடைய குற்றங்களை | த்வாம் | தேவரீரை |
| வ்யஸ்மரந் | மறந்தார்களோ, | பக்தாஸ்மஹே | அடைவோம். |
| தம் | அப்படிப்பட்டவரும் | | |

* * * [யுத்த்யூதே] ஸ்ரீ பலராமாவதாரத்தைப் புகழ்கிறார். கலிங்கதேசத்து மன்னவனோடு பலராமன் ஒருகால் சூதாட்டம் ஆட நேர்ந்தது. அம் மன்னவனுக்கு வாயில் பற்கள் பலகின்றி போன்றிருந்தன. அப்போது பல ஆட்டங்களிலும் பலராமனுக்கே வெற்றி யுண்டாயிற்று; முந்துறமுன்னம் செய்துகொண்ட ஸமயபந்தத்தின் படி ஒவ்வொரு ஆட்ட வெற்றிக்கு அறிகுறியாக அம்மன்னவனது பற்களை (கபோல ப்ரஹாரத்தினால்) ஒவ்வொன்றாக உதிர்த்துவந்தார் பலராமர். இங்ஙனம் அவனுடைய பற்களெல்லாம் உதிர்ந்தபிறகு ஆட்டமும் முடிவு பெற்றது. முடிவில் எத்தனை ஆட்டங்களை ஆடி வெற்றிபெற்றது என்று கணக்குப்பார்க்க வேண்டினபோது அந்த உதிர்ந்த பற்களை எண்ணிப்பார்த்து இத்தனை ஆட்டங்கள் என்று நிர்ணயிக்கப்பட்டது என்கிற கதை முதல்பாதத்தில் அநுஸந்திக்கப்பட்டது.

கண்ணபிரான் ப்ருந்தாவனத்தில் விளையாடிக் கொண்டிருந்த காலத்து ஸ்ரீ பலராமனோடுகூடவே எங்கும் செல்வது வழக்கம். ஒருநாள் பலராமனை விட்டுத் தனியே செல்ல, அன்று காளியநாகத்தின் வாயில் விழுந்து மஹத்தான கோலாஹலமுண்டாக நேர்ந்துவிட்டது. இவ்விஷயம் இரண்டாவது பாதத்தில் அநுஸந்திக்கப்பட்டது. பெரும்பாலும் கண்ணபிரானோடு கூடவேயிருந்து காவல் செய்பவன் ஸ்ரீ பலராமன் என்று இதனால் காட்டினபடி.

கண்ணபிரான் ஆய்ச்சிகளை விட்டுப்பிரிந்து மதுரைக்குச் சென்று பலநாள்வரையில் மீண்டுவராதே அவ்விடத்தே தாமதித்திருக்க 'ஆய்ச்சிகள் மிகவும் ரோஷம் கொண்டிருப்பார்களாதலால் இப்போது முந்துற நாம் நேரில் செல்லலாகாது; அண்ணனை யனுப்பிச் சிறிது சீற்றமாற்றிப் பிறகு செல்வோம் என்று கருதின கண்ணபிரான் அப்படியே பலராமனைத் திருவாய்ப்பாடிக்கனுப்ப, அவனும் அங்கே வந்து சேர்ந்து * संदेशैस्सामधुरैः * இத்யாதிப்படியே தேனிலினிய மொழிகள்கூறி ஆய்ச்சிகளின் சீற்றத்தை மாற்றினனென்பது மூன்றாம் பாதத்திற் கூறப்பட்டது. कृष्णागसां என்கிற ஷஷ்டீவிபக்தி * अधीगर्थदयेशां कर्मणि * என்கிற ஸூத்ரஸித்தம். * उदधिपरमव्योम्नोर्विस्मृत्य * என்றவிடமும் காண்க.

க்ஷேமக்ருஷீவலம் = உழுபடையாகிய கலப்பையை ஸ்ரீ பலராமன் தரித்திருப்பது நமக்கு க்ஷேமக்ருஷியைப் பண்ணுவதற்காகவென்று ரஸோக்தி. அந்த க்ஷேமக்ருஷியை ஆசார்ய ஹ்ருதயத்தில் "பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெருஞ் செய்" என்று தொடங்கி "உழுவதோர்நாஞ்சில் கொண்டு பெருகமுயலும் பத்தியுழவன் க்ருஷிபலமிறே" என்றிருகப் பெரியதொரு சூர்ணையினால் அருளிச் செய்தார். भजामहे— लुङुत्तमबहुवचनरूपम् . (70)

आकण्ठवारिभरमन्थरमेघदेश्यं पीताम्बरं कमललोचनपद्महेति।
नम स्तनन्धयमयाचत देवकी त्वां श्रीरङ्गकान्त! सुतकाम्यति का परेषम् ॥ ७१ ॥

ஆகண்டவாரிபரமந்தாமேகதேச்யம்
பீதாம்பரம் கமலலோசநபஞ்சஹேதி,
ப்ரஹ்ம ஸ்தநந்தயமயாசத தேவகீ த்வாம்
ஸ்ரீரங்ககாந்த ! ஸுதகாம்யதி காபரைவம். 71

| | |
|---|---|
| ஸ்ரீரங்ககாந்த ! | ஸ்ரீரங்கநாதரே ! |
| தேவகீ | தேவகிபோனவள், |
| ஆகண்டவாரி பரமந்தர மேக தேச்யம் | கழுத்தளவான ஜலபாரத்தை யுடையதும் மெதுவாகச் செல்வதுமான காளமேகம் போன்றதாயும் |
| பீதாம்பரம் | பீதாம்பரத்தை யுடையதாயும் |
| கமலலோசந பஞ்சஹேதி | தாமரைக் கண்களை யுடையதாயும் பஞ்சாயுதங்களை யுடையதாயு மிருக்கிற |
| ப்ரஹ்ம | பரப்ரஹ்மமான |
| த்வாம் | தேவரீரை |
| ஸ்தநந்தயம் | குழந்தையாக |
| அயாசத | வேண்டினள் ; |
| அபரா கா | வேறு எவள் |
| ஏவம் | இங்ஙனம் |
| ஸுதகாம்யதி | புத்ரகாமனை செய்பவள் ? |

[தேவகி ஒருத்தியே விலக்ஷணை என்றபடி.]

* * * [ஆகண்டவாரீத்யாதி] ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்திலீடுபட்டு இரண்டு ச்லோகங்களருளிச் செய்கிறார். அவற்றுள் இந்த ச்லோகத்தில் தேவகிப் பிராட்டியின் ஸௌபாக்ய விசேஷத்தை அழகாக அருளிச் செய்கிறார்.—கழுத்தே கட்டளையாக நீரைப்பருகின காளமேகம் போன்றும், பீதகவாடை யுடுத்தும், செந்தாமரைக் கண்ணோடுகூடியும், அழகிய ஐம்படை யணிந்தும் ஸாக்ஷாத் பரப்ரஹ்ம ஸ்வரூபியுமான ஸ்ரீக்ருஷ்ண கிசோரனைப் பிள்ளையாகப் பெறவேணுமென்று பாரித்த தேவகியின் பாக்கியமே பாக்யம் ! இங்ஙனம் பாரிக்கின்ற மாதரசி வேறொருத்தி யுண்டோ ? என்றாராயிற்று. (71)

शैलेऽग्निश्च जलाम्बभूव मुनयो मूढाम्बभूवुर्जडाः प्राज्ञामासुरगास्सगोपममृतामासुर्महाशीविषाः ।
गोव्याघ्रास्सहजाम्बभूवुरपरे त्वन्याम्बभूवुः प्रभो ! त्वं तेष्वन्यतमाम्बभूविथ भवद्वेणुक्वणोन्मादने ॥ ७२ ॥

சைலோக்நிச்ச ஜலாம்பபூவ முநயோ மூடாம்பபூவுர் ஜடா:
ப்ராஜ்ஞாமாஸுரகாஸ் ஸகோப மம்ருதாமாஸுர்மஹாசீவிஷா:,
கோவ்யாக்ராஸ் ஸஹஜாம்பபூவுரபரே த்வந்யாம்பபூவு: ப்ரபோ !
த்வம் தேஷ்வந்யதமாம்பபூவித பவத்வேணுக்வணோந்மாதநே. 72

| | |
|---|---|
| ப்ரபோ | பெரிய பெருமானே ! |
| பவத் வேணுக்வண உந்மாதநே | உம்முடைய வேணுகானத்தினால் சேர்ந்த உந்மாதத்தில் |
| சைல: | மலையும் |
| அக்நிச் ச | நெருப்பும் |
| ஜலாம்பபூவ | நீர்ப்பண்ட மாயிற்று ; |
| முநய: | முனிகள் |
| மூடாம்பபூவு: | மூடர்களாயினர் ; |
| ஜடா: | ஜடங்களாயிருந்த |
| அகா: | மரங்கள் |
| ஸகோபம் | இடையர்களோடு கூட |
| ப்ராஜ்ஞாமாஸு: | மஹாஜ்ஞானிகளாயின ; |
| மஹாஆசீவிஷா: | பெரிய பாம்புகள் |
| அம்ருதாமாஸு: | அம்ருதமயங்களாயின ; |
| கோவ்யாக்ரா: | மாடுகளும் புலிகளும் |
| ஸஹஜாம்பபூவு: | உடன் பிறந்தவைகளாயின ; |
| அபரே து | மற்றும் பலவும் |
| அந்யாம்பபூவு: | (இங்ஙனமே) வேறுபட்டவைகளாயின ; |
| | [பல சொல்லி என்] |
| த்வம் | தேவரீரும் |
| தேஷு | [illegible] |
| அந்யதமாம் பபூவித | வேறுபட்ட [illegible] ஒருவராயிருந்தீர். |

* * * [சைலோக்நிச்ச] கண்ணபிரான் குழலூதினபோது விளைந்த விசித்திரங்களைப் பெரியாழ்வார் "நாவலம் பெரிய தீவினில்" என்று தொடங்கி ஒரு திருமொழியினால் அருளிச் செய்தார் ; இவ்வாசிரியர் ஒரு ச்லோகத்திலே வெகு அழகாக அருளிச்செய்து தலைக்கட்டுகிறார்.

22

பெரிய பெருமாளே! தேவரீர் கோவலனாய் அவதரித்துக் குழலூதி அனைவரையும் மயக்கின காலத்து அது செவிப்பட்ட சேதநா சேதநங்களில் விகாரமடையாதிருந்த பொருள் ஒன்றுகூட இல்லை; மலை கடினத்தன்மையை விட்டுப் பகங் செய்தது; நெருப்பு வெப்பத்தை விட்டுத் தண்ணளி பெற்றது; யோக நிஷ்டர்களாயிருந்த முனிவர்கள் நெஞ்சில் ஒன்றும் தோன்றமாட்டாமல் ஜடத்தன்மை பெற்றார்கள்; சைதந்ய சூந்யங்களான மரங்களும், அந்த மரங்களோடு வாசியற்ற இடையர்களும் மஹா ஜ்ஞாநிகளாக ஆய்விட்டனர். [வேணுகாந ஸ்வாரஸ்யாநுபவரஸிகர்களாயினர் என்றபடி.] விஷதரங்களான நாகங்களும் அம்ருதப்ராயங்களாயின. *वेणुस्वनसुतरसौघपरिप्लुतान्ते स्वे सृक्वणी रसनया लिलिहुर्भुजङ्गाः* என்ற அதிமாநுஷஸ்தவ ஸூக்தியுங் காண்க. ஸஹஜ சத்ருக்களான பசுக்களும் புலிகளும், தம்தம் வைரத்தை மறந்து ஒருவரிசையாக நின்று வேணுகாநரஸாஸ்வாத ஸக்தங்களாயிருந்தன. இங்ஙனம் எவ்வளவு சொல்லலாம்? [அபரேது அங்யாம்பபூவு:] அப்போது யமுனையாற்றங்கரையிலிருந்த சராசரங்களில் விகாரமடையாததொன்றில்லை. கிம்பஹுநா? [த்வம் தேவ அங்யதமாம்பபூவித] அங்ஙனம் விகாரப்பட்ட பொருள்களில் எம்பெருமானும் ஒருவனென்கிறது. தன்னையும் விகாரப்படுத்தவற்றாயிற்று தன் குழலோசை தானிருப்பது. * यस्सर्वज्ञस्सर्ववित् * என்னப்பட்டதான் குறியறியாதேயிருந்தானாகில் அந்த வேணுகானத்தின் வைபவத்திற்குக் குறையேயாகுமன்றே. இங்கு *सचापि रामः परिषद्गतश्शनैः बुभूषया सक्तमना बभूवह* என்கிற ஸ்ரீராமாயணச்லோகம் ஒருபுடை நினைக்கத்தகும். ... ... (72)

कल्किततनुर्धरणीं लघयिष्यन् कलिकलुषान् विलुनासि पुरा त्वम्।
रङ्गनिकेत ! लुनीहि लुनीहीत्यखिलमरुन्तुदमद्य लुनीहि ॥ ७३ ॥

கல்கிதநுர் தரணீம் லகயிஷ்யந் கலிகலுஷாந் விலுநாஸி புரா த்வம்,
ரங்கநிகேத! லுநீஹி லுநீஹீதி அகிலமருந்துதமத்ய லுநீஹி. 73

| | | | |
|---|---|---|---|
| ரங்கநிகேத | ஸ்ரீரங்கத்தைக் கோயிலாக வுடையவனே! | (அன்னம் ஸ்மைரம் செய்யாமல்) | |
| கல்கிதநு: த்வம் | கல்கி சரீரியான தேவரீர் | அத்ய | இன்றைக்கே |
| தரணீம் | பூமியை | அருந்துதம் அகிலம் | கஷ்டப் பிராணிவர்க்கம் முழுவதையும் |
| லகயிஷ்யந் | பாரம் நீங்கி லேசுபட்டதாகச் செய்யப் போகிறவராய | லுநீஹி லுநீஹி இதி | 'அறுத்துவிட்டேன் அறுத்துவிட்டேன்' என்று சொல்லிக்கொண்டே |
| கலிகலுஷாந் | கலிதாவப் பாவிகளை | | |
| புரா விலுநாஸி | அடியறுக்கப் போகிறீர்; | லுநீஹி | அறுத்தருளவேணும். |

*** [கல்கிதநு:] கல்கியவதாரம் பவிஷ்யத்தாகையாலே அதனை ஒரு சமத்காரமாக அநுபவிக்கிறாரிதில். என்றைக்கோ செய்வதாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிற அந்த அவதாரத்தை, மஹாக்ரூரர்கள் மலிந்துள்ள இக்காலத்திலேயே செய்தருளலாமே யென்கிறார். ஆழ்வானும் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் *कल्कीभविष्यन्* என்கிற ச்லோகத்தில் இங்ஙனமே அருளிச் செய்தார். இவ்வாசிரியர்களின் காலத்திலும் புதுமைப்பாக விரோதிகளான ஆஸுரப்ரக்ருதிகள் பல்லாயிரவர் இருந்ததனால் இங்ஙனே அருளிச் செய்யலாயிற்றென்க.

[புரா விலுநாஸி] இவ்விடத்தில் பவிஷ்யதர்த்தம் சாஸ்த்ரஸித்தம். * यावत्पुरा निपातयोर्लट् * इति पाणिनिः। लुनीहिलुनीहीत्यत्र * क्रियासमभिहारे लोडिस्यादिसूत्रमनुसंधेयम् ॥ (73)

आस्तां ते गुणराशिवद्गुणपरिवाहात्मनां जन्मनां संख्या भौमनिकेतनेष्वपि कुटीकुञ्जेषु रङ्गेश्वर ! ।
अर्च्यस्सर्वसहिष्णुरर्चकपराधीनाखिलात्मस्थितिः प्रीणीषे हृदयालुभिस्तव ततश्शीलाज्जडीभूयते ॥ ७४ ॥

ஆஸ்தாம் தே குணராசிவத் குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்
ஸங்க்யா, பௌமநிகேதநேஷ்வபி குடீகுஞ்ஜேஷு ரங்கேச்வர !,
அர்ச்ய்ஸ் ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி:,
ப்ரீணீஷே ஹ்ருதயாலுபிஸ் தவ ததச் சீலாஜ் ஜடீபூயதே. 74

| | | | |
|---|---|---|---|
| ரங்கேச்வர ! | ஸ்ரீரங்கநாதனே ! | அர்ச்ய: | ஆராதிக்க உரியவராயும் |
| தே | தேவரீருடைய | ஸர்வஸஹிஷ்ணு: | எதையும் ஸஹிப்பவராயும் |
| குணராசிவத் | குணஸமூஹங்களுக்குப் போல | அர்ச்சகபராதீந அகில ஆத்ம ஸ்திதி: | அர்ச்சகர்களுக்குப் பரவசப் பட்ட ஸகல நிலைமையை யுடையவராய் |
| குண பரீவாஹ ஆத்மநாம் | அக்குணங்களுக்குப் பரீவாஹ ரூபமான | ப்ரீணீஷே | உகந்தருளுகின்றீர்; |
| ஜந்மநாம் | அவதாரங்களுக்கும் | தத: | அப்படிப்பட்டதான |
| ஸங்க்யா | எண்ணிக்கையானது | தவ சீலாத் | தேவரீருடைய சீல குணத்தில் |
| ஆஸ்தாம் | கிடக்கட்டும்; | ஹ்ருதயாலுபி: ஜடீபூயதே | ஹ்ருதயர்கள் ... |
| பௌம நிகேதநேஷு | இப்பூமண்டலத்திலுள்ள ஆலயங்களிலும் | | |
| குடீ குஞ்சேஷு அபி | க்ருஹங்களிலும் ஆச்ரமங்களிலும் | | |

* * * [ஆஸ்தாம் தே] கீழ் விபவாவதாரங்களைப் புகழ்ந்து தலைக்கட்டினார். இதில் அர்ச்சாவதார ப்ரஸ்தாவம் பண்ணுகிறார். எம்பெருமான் செய்தருளின விபவாவதாரங்கள் பத்து என்று பெரும்பாலும் உலகர் வழங்குவர். தசாவதார மென்று பெரியோர்களும் வழங்கக் காண்கிறோம். வஸ்துதஸ்து அவதாரங்கள் எண்ணிறந்தவை. அவற்றுள் மிகவும் ஸுப்ரஸித்தமானவற்றை யெடுத்து தசாவதார மென்கிறதத்தனை. எம்பெருமானுடைய திருக்குணங்களுக்கு எப்படி எண்ணிக்கை யில்லையோ அப்படியே அந்தத் திருக்குணங்களின் பரீவாஹரூபங்களான அவதாரங்களுக்கும் எண்ணிக்கையில்லை என்பதை முதல்பாதத்தில் கூறினார். (ஆஸ்தாம்) என்றது அதில் அநாதரத்தைக் காட்டினபடி (அதாவது) தேவரீர் எண்ணிறந்த விபவாவதாரங்களைச் செய்தருளியிருக்கும் விஷயம் கிடக்கட்டும்; அதில் எமக்கு ஊற்றமில்லை; அர்ச்சாவதாரச் சிறப்பை நினைத்தால் வேறு எதுவுமே பொருளாகத் தோற்றுவதில்லை யென்றபடி.

மேல் மூன்று பாதங்களாலே அர்ச்சாவதாரப் பெருமையைப் பேசியருளுகிறார். ஆலயங்களிலும், க்ருஹிகளின் க்ருஹங்களிலும் மஹர்ஷிகளின் ஆச்ரமங்களிலும், யார் எங்கு விரும்பினாலும் அங்கெல்லாம் "தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே, தமருகந்த தெப்பேர் மற்றப்பேர் தமருகந்து எவ்வண்ணம் சிந்தித்திமையாதிருப்பரே அவ்வண்ணமாழியானாம்" என்கிறபடியே அவரவர்கள் ஆராதிக்கக்கூடிய நிலைமையில், ஸகலாபராதங்களையும், ஸஹித்துக்கொண்டு, அர்ச்சகர் இட்ட வழக்காம்படி தன்னை நியமித்துக்கொண்டு, இப்படி அனைவரையும் உகப்பித்தருள்வதனால் இந்த சீல குணத்தில் ஈடுபடாதாரில்லை என்றாராயிற்று.

[ஹ்ருதயாலுபி: ஜடீபூயதே] भावे प्रयोगः। हृदयालवो जडीभवन्तीति भावः। இங்கு ஹ்ருதயாளுக்களென்று ஆழ்வார்களை நினைக்கிறது. ... (74)

श्रीमद्व्योम न सीम वाङ्मनसयोस्सर्वेऽवताराः क्वचित् काले विश्वजनीनमेतदिति भीः श्रीरङ्गधामन्यथ ।
आर्तस्वागतिकैः कृपाकलुषितैरालोकितैरार्द्रयन् विश्वत्राणविमर्शनस्खलितया निद्रासि जागर्यया ॥ ७५ ॥

ஸ்ரீமத் வ்யோம நஸீம வாங்மநஸயோஸ் ஸர்வேவதாரா: க்வசித்
காலே விச்வஜநீநமேததிதி தீ: ஸ்ரீரங்கதாமந்யத,
ஆர்த்தஸ்வாகதிகை: க்ருபாகலுஷிதைராலோகிதைரார்த்ரயந்
விச்வத்ராணவிமர்சநஸ்கலிதயா நித்ராஸி ஜாகர்யயா. 75

| | |
|---|---|
| ஸ்ரீமத் வ்யோம | "பரமபதமானது |
| வாக்மநஸயோ: | வாக்குக்கும் நெஞ்சுக்கும் |
| நஸீம | எட்டாதது : |
| ஸர்வே அவதாரா: | விபவாவதாரங்கள் யாவும் |
| க்வசித் காலே | ஏதோ வொரு ஸமயத்திலே (நடந்து முடிந்தவை ;) |
| ஏதத் | இந்த அர்ச்சாவதார நிலைதான் |
| விச்வஜநீநம் | ஸகலஜந ஹிதமானது" |
| இதி தீ: | என்றிப்படிப்பட்ட திருவுள்ளத்தை யுடையீராய் |
| ஸ்ரீரங்கதாமநி | திருவரங்கம் பெரியகோயிலில் |
| ஆர்த்த ஸ்வாகதிகை: | ஆர்த்தர்களை நோக்கிக் குசலப்ரச்னம் பண்ணுமவையும் |
| க்ருபா கலுஷிதை: | திருவுள்ளம் கலங்கி சேதநர்களின் குணதோஷ விசாரம் பண்ணமாட்டாதவையுமான |
| ஆலோகிதை: | கடாக்ஷங்களினால் |
| ஆர்த்ரயந்(த்வம்) | (தாபத்ரயார்த்தர்களை) குளிரச் செய்துகொண்டே நீவிர் |
| விச்வத்ராண விமர்ச ஸ்கலிதயா ஜாகர்யயா | ஜகத்ரக்ஷண சிந்தையோடு கூடின ஜாகரண ரூபமாக |
| நித்ராஸி | திருக்கண்வளர்ந்தருளாகின்றீர். |

* * * [ஸ்ரீமத் வ்யோம] இம்ச்லோகத்தில். பொதுப்படையாக அருளிச்செய்த அர்ச்சாவதார ஸௌசீல்யத்தைப் பெரிய பெருமாள் பக்கலிலே உபஸம்ஹரிப்பது இந்த ச்லோகம். அழகிய மணவாளன் இங்ஙனே திருவுள்ளம் பற்றினாராம்; (அதாவது) 'நாம் திருநாட்டிலிருப்பது இவ்விபூதியிலுள்ளார்க்குச் சிறிதும் பயன்படாதது; பரமபதமென்பது வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாததொன்றாகையாலே. [இனித்தான் ப்ராப்தி சாயித்வமும் ஸர்வாந்தர்யாமித்வமும் அந்தப் பரமபத நிலயத்வத்திற்குத் தோள் தீண்டியாகுமத்தனை.] ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களோ வென்னில், "பெருக்காறு போலே விபவங்கள்" என்கிறபடியே ஏதோவொரு கால விசேஷத்திலே கழிந்தனவாகதால் அவையும் இக்காலத்தவர்கட்குப் பயன் படாதனவாயின. ஆக, திருநாட்டிலிருப்பு தேசவிப்ரகர்ஷத்தாலும், விபவாவதாரங்கள் காலவிப்ரகர்ஷத்தாலும இந்த ஸம்ஸாரி சேதநர்களுக்கு உபஜீவ்யங்களாகா தொழியவே, * திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருட * குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசை யிலங்கை நோக்கிக் கிடக்குமிந்த கிடையே ஸம்ஸாரிகள் ஸேவித்து வாழ்வதற்குப் பாங்கானது என்று பெரிய பெருமாள் திருவுள்ளம் பற்றினாரென்பது பூர்வார்த்தத்தில் பேசப்பட்டது.

பள்ளி கொண்டருளுமழகை உத்தரார்த்தத்தில் பேசுகிறார். [ஆர்த்தஸ்வாகதிகை:] அபிமதஜந தர்சநாநந்தவேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்த மதுர மந்தஹாஸ விலாஸத்தோடு கூடின திருக்கண்ணோக்கங்களானவை ஆர்த்தர்களான அன்பர்களை ஆதரவோடு வரவேற்பனவாம். கடாக்ஷ வீக்ஷணவைலக்ஷண்யத்தை நோக்கி ஏற்பட்டவர்களும் கூசாமல் தாராளமாக உள்ளே புகலாமென்பது கருத்து. [க்ருபாகலுஷிதை:] நிர்ஹேதுகமாயும் நிரவதிகமாயுமுள்ள திருவருள் நிரம்பியிருப்பதனால் சேதநர்களின் குணதோஷ விசாரத்தில் ஸாமர்த்தியமில்லாமை சொன்னபடி. ஆக இப்படிப்பட்ட [ஆலோகிதை: ஆர்த்ரயந்] கடாக்ஷங்களினால் தாபத்ரயதப்தர்களைக் குளிரச் செய்துகொண்டு. [விச்வத்ராண விமர்சந ஸ்கலிதயா ஜாகர்யயா நித்ராஸி] ஜாகரா, ஜாகர்யா, ஜாகரணம் இவை யெல்லாம் பர்யாயம். तथाच अमरः — जागर्या जागरा द्वयोः — इति । விழித்துக்கொண்டே திருக்கண் வளர்ந்தருளாநின்றீர் என்றபடி. இந்த யோகநித்ரை லோகரக்ஷண சிந்தையோடு கூடினதென்பது விசேஷணத்தின் கருத்து. विश्वत्राणविषयके यद्विमर्शने — चिन्तनम्, तेन स्खलितया —

किंचिद्विपर्ययं भासया—इति यावत्। திருக்கண்களை மூடுவதும் திறப்பதுமான நிலைமையை உட்கண்ணுல் அநுபவித்து அருளிச் செய்தபடி.

இந்த ச்லோகத்தில் 'நஸீம' என்பதும் இதிதீ: என்பதும் ஸம்ஸ்க்ருத பதங்களென்பது जागरूकैरवधेयम्। नास्ति सीमा यस्मिन् तत्-नसीम इति बहुव्रीहिः। इत्येवं धीः यस्य सः इतिधीः—इत्यपि बहुव्रीहिः। [स्वागतिकैः] स्वागतं पृच्छन्तीति स्वागतिकानि ; तैः। *पृच्छतौ सुस्नातादिभ्यः* इति ठक्॥ (75)

सर्गाभ्यासविशालया निजधिया जानन्ननन्तेशयं भारत्या सहधर्मचाररतया स्वाधीनसंकीर्तनः।
कल्पानेव बहून् कमण्डलुगलद्गङ्गाप्लुतोऽपूजयत् ब्रह्मा त्वां मुखलोचनाञ्जलिपुटैः पद्मैरिवावर्जितैः॥ ७६॥

ஸர்க்காப்யாஸவிசாலயா நிஜதியா ஜாநந் அநந்தேசயம்
பாரத்யா ஸஹதர்மசாரரதயா ஸ்வாதீநஸங்கீர்த்தந:,
கல்பாநேவ பஹூந் கமண்டலுகலத்கங்காப்லுதோபூஜயத்
ப்ரஹ்மா த்வாம் முகலோசநாஞ்ஜலிபுடை: பத்மைரிவாவர்ஜிதை:. 76

(ஸ்ரீரங்கநாதரே !)

| | | | |
|---|---|---|---|
| கமண்டலு கலத் கங்காப்லுத: | குண்டிகையில் நின்றும் பெருகா நின்ற கங்கையில் நீராடின | ஸஹதர்மசாரதயா | தன்னுடைய ஸஹதர்மிணியான |
| ப்ரஹ்மா | நான்முகக் கடவுள் | பாரத்யா | ஸரஸ்வதியினால் |
| அநந்தேசயம் த்வாம் | சேஷசாயியான தேவரீரை | ஸ்வாதீநஸங்கீர்த்தந: | ஸ்வாதீநமான ஸங்கீர்த்தனத்தை யுடையவனும் |
| பஹூந் ஏவ கல்பாந் | அநேக கல்பங்களில் | ஆவர்ஜிதை: | ஸம்பாதிக்கப்பட்ட |
| ஸர்க்காப்யாஸ விசாலயா நிஜதியா | ஸ்ருஷ்டி பரிசயத்தினால் விகாஸமடைந்த தன் உணர்வினால் | பத்மை: இவ (ஸ்திதை:) | தாமரைப்பூக்கள் போலிருக்கிற |
| ஜாநந் | த்யானித்து நின்று | முகலோசந அஞ்சலிபுடை: | முகங்களாலும் கண்களாலும் அஞ்சலிபுடங்களாலும் |
| | | அபூஜயத் | பூஜித்தான். |

* * * [ஸர்க்காப்யாஸ] ஸ்ரீரங்கநாதன் முந்துற முன்னம் ஸத்யலோகத்தில் நான்முகக் கடவுளால் நெடுங்காலம் ஆராதிக்கப்பட்டு வந்து, பிறகு ஸ்ரீராமபர்யந்தர்களான மநுகுலத்தரசர்களால் அயோத்யையில் ஆராதிக்கப்பட்டுவந்து, இப்போது வெகுகாலமாக உபயகாவேரீ மத்யத்தில் ஆராதிக்கப்பட்டு வருகிறபடியை இதுமுதலாக மூன்று ச்லோகங்களால் அடைவே அருளிச் செய்கிறார். பெருமாள் திருமொழியில் "எம்மாண்பினயன் நான்கு நாவினலும் எடுத்தேத்தி யீரிரண்டு முகமுங்கொண்டு, எம்மாடு மெழில் கண்க ளெட்டினேடுந் தொழுதேத்தி யினிதிறைஞ்ச நின்ற" என்று அருளிச் செய்யப்பட்ட வருத்தாந்தம் இந்த ச்லோகத்தி லருளிச் செய்யப்படுகிறது. அந்தப் பாசுரத்திலும் இந்த ச்லோகத்திலும் கூறப்படும் வரலாறு பிரமனது உலகமாகிய ஸத்யலோகத்தில் நடந்ததென்பது இதிஹாஸ ப்ரஸித்தம்.

ஸரஸ்வதீ வல்லபனை நான்முகன் துதித்த தேவரீரை அறிவிலியான நானே துதிப்பது! என்கிற நிர்வேதம் முன்னடிகளில் புலப்படும். பிரமனுக்கு புத்தியிலும் வாக்கிலும் குறையில்லை யென்பதை முன்னம் மூதலிக்கிறார். விசித்ர ஸ்ருஷ்டிகளைச் செய்வதற்கு விலக்ஷண புத்தி கௌசலம் அபேக்ஷிதமாகையாலே வேண்டியபடி ஸ்ருஷ்டிகளைச் செய்து செய்து மிக்க வைசால்யம் பெற்றுவிட்டதாம் பிரமனுடைய புத்தி. அப்படிப்பட்ட புத்தியினலே விலக்ஷணமாக த்யானித்தானென்கிறது ஜாநந் என்று. வாக்தேவியான ஸரஸ்வதி இவனுக்கு ஸஹதர்மசாரிணியாக அமைந்துள்ளதனுல் வாசிகமான

தோத்திரங்கள் மிகவும் தாராளமாக வந்தன என்கிறார் இரண்டாமடியால். ஆக, பூர்வார்த்தத்தினால் மானஸிக வாசிக கிஞ்சித்காரங்களைச் சொல்லிற்றாகி, காயிககிஞ்சித்காரம் செய்ததைச் சொல்லுகிறது உத்தரார்த்தம்.

[கல்பாநேவ பர்ஹிண] * कालाध्वनोरत्यन्तसंयोगे द्वितीयेति सूत्रेण द्वितीया। அநேக கல்ப காலம் இடைவிடாமல் ஆராதித்தமையைச் சொல்லிற்று. [கமண்டலு கலத்கங்காப்லுத:] "குறைகொண்டு நான்முகன் குண்டிகைநீர்ப் பெய்து, மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்திக் கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினான், அண்டத்தான் சேவடியை யாங்கு" என்று திருமழிசைப்பிரான் அருளிச்செய்தபடி பிரமனுடைய கமண்டலுவில் நின்றும் [திரிவிக்கிரமனுடைய திருவடியை விளக்குவதற்காகப்] பெருகின தீர்த்தமே கங்கையானபடியால் அந்தக் கங்கையிற் குடைந்தாடி நான்முகனும் பூஜித்தானென்கிறது.

கம்பராமாயணத்தில் ஆரணியகாண்டத்தில் அகஸ்த்யரைப்பற்றிப் பேசுமிடத்தில் "குண்டிகையினிற் பொருவில் காவிரி கொணர்ந்தார்" என்றுள்ளது. அகஸ்த்யர் வடதிசையில் யாத்திரை செய்து தென்திசைக்குத் திரும்புமளவில், 'நமது தென்திசையில் கங்கையில்லையே' என்கிற குறையினால் தமது கமண்டலுவில் கங்கா தீர்த்தத்தைப் பூரித்து எடுத்துக் கொண்டுவருகையில் ஸஹ்யமலைச் சாரலில் ஒருபுறத்தில் அந்தக் கமண்டலுவை வைத்திட்டு தேஹசுத்தி செய்யாநிற்கையில் அக்கமண்டலுவைக் காக்கை உருட்டிவிட்டதாகவும் அதுவே ப்ரவஹித்துத் திருக்காவேரிநதி யென்று ப்ரஸித்தி பெற்றதாகவும் பெரியோர் கூறுகின்ற வரலாற்றுக்குச் சார்பாகவுள்ளது இந்தக் கம்பர் செய்யுள். ஆகவே, இங்கு கமண்டலுகலத்கங்கா என்றது அகஸ்த்யருடைய கமண்டலுவில் நின்றும் பெருகின கங்கையாகிற காவிரியைச் சொல்லிற்றாகி, நான்முகன் திருக்காவேரியில் தீர்த்தமாடிப் பெரிய பெருமாளை ஆராதித்ததாகவே இங்குக் கூறப்படுகின்றதென்றும் சில பெரியார் கூறுவதுண்டு. இப்படிக்கொண்டால், இந்த ச்லோகத்திற் சொல்லப்படுவது ஸத்யலோக வ்ருத்தாந்தமன்று என்றும், இந்நிலத்திலேயே பிரமன் செய்ததொரு பூஜையைச் சொல்லுகிறதென்றும் கொள்ளவேணும்.

[முகலோசநேத்யாதி] தாமரைப் பூக்களால் ஆராதிப்பதாகையாலே அவை ஸ்வாயத்தமானவை கூறினபடி. .... .... ... (76)

मनुकुलमहीपालव्यानम्रमौलिपरम्परामणिमकरिकारोचिर्नीराजिताङ्घ्रिसरोरुहः ।
स्वयमथ विभो ! स्वेन श्रीरङ्गधामनि मैथिलीरमणवपुषा स्वार्हाण्याराधनान्यसि लम्भितः ॥ ७७ ॥

மநுகுலமஹீபாலவ்யாநம்ரமௌலிபரம்பரா
மணிமகரிகாரோசிர் நீராஜிதாங்க்ரிஸரோருஹ:,
ஸ்வயமத விபோ! ஸ்வேந ஸ்ரீரங்கதாமநி மைதிலீ
ரமணவபுஷா ஸ்வார்ஹாண்யாராதநாந்யஸி லம்பித:. 77

Identity with Rama

| | | | |
|---|---|---|---|
| ஹே விபோ | எம்பெருமானே!, | த்வம் | தேவரீர் |
| மநுகுல மஹீபால | மநுகுலத்தவர்களான சக்ரவர்த்திகளினுடைய | அத | பின்னையும் |
| வ்யாநம்ர மௌலி பரம்பரா | வணங்கின கிரீட பங்க்திகளினுள்ள | மைதிலீரமண வபுஷா ஸ்வேந | ஸ்ரீராமமூர்த்தியான தம்மாலேயே |
| மணி மகரிகா ரோசி: | மகரஸ்வரூபமான ரத்னங்களின் ஒளிகளினால் | ஸ்ரீரங்கதாமநி | ஸ்ரீரங்க விமானத்தில் |
| நீராஜித | ஆலத்தி வழிக்கப்பட்ட | ஸ்வ அர்ஹாணி | தமக்கு உரிய |
| அங்க்ரி ஸரோருஹ: | திருவடித் தாமரைகளையுடைய | ஆராதநாநி | திருவாராதனங்களை |
| | | ஸ்வயம் | தம்மாலேயே |
| | | லம்பித: அஸி | அடைவிக்கப்பட்டீர். |

* * * [மநுகுல] இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களுக்கெல்லாம் ஸ்ரீரங்கநாதனே ஆராத்யதேவதையாக இருந்துவந்தபடியை இதனாலருளிச் செய்கிறார். ஸத்யலோகத்தில் நான்முகனால் ஆராதிக்கப்பட்டுவந்த திவ்யமங்கள விக்ரஹம் அவனால் இக்ஷ்வாகுவுக்கு அளிக்கப்பட்டு, பிறகு அநேக சக்ரவர்த்திகளால் பரம்பரையாய் ஆராதிக்கப்பட்டு வந்து, கடைசியாய் ஸ்ரீராமபிரானால் ஆராதிக்கப்பட்டு, பட்டாபிஷேகத்திற்குப் பிறகு ஸுக்ரீவ ப்ரமுகர்களான அன்பர்கட்குப் பரிசளிக்குமடைவிலே விபீஷணாழ்வானுக்கு இந்த திவ்யமங்கள விக்ரஹம் பரிசளிக்கப்பட்டு, * लब्ध्वा कुलधनं राजा लङ्कां प्रायाद्विभीषणः * என்கிறபடியே அவரும் இத் திருக்கோலத்தைப் பெற்றுக்கொண்டு இலங்கைக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருமளவில் காவிரிக்கரையிலே பெருமாளை எழுந்தருளப் பண்ணிவிட்டு நித்யாநுஷ்டானங்களை நிறைவேற்றிக்கொண்டு பெருமாளை மீண்டும் எழுந்தருளப் பண்ணிக்கொள்ள முயலுகையில் அவ்விடம் பெருமாளுக்கு மிகவும் ருசித்திருந்ததனால் பேர்க்கவும் பேராதபடியிருந்து விபீஷணனுக்கு நியமநம் தந்தருளி, அவனுடைய உகப்புக்காகவே "மன்னுடைய விபீஷணற்காய் மதிளிலங்கைத்திசை நோக்கி மலர்க்கண்வைத்த" என்கிறபடியே தென்திசை யிலங்கை நோக்கி சயனித்தாரென்பது புராண வரலாறு. பூர்வார்த்தத்தினால் ஸ்ரீராமபிரானுக்கு முற்பட்ட சக்ரவர்த்திகள் ஆராதித்தமையை ஒரு சமத்காரமாகப் பேசுகிறார். நவமணிகள் பதித்த கிரீடமணிந்த மநுகுல மஹாராஜர்கள் முடியைத் தாழ்த்தி வணங்கும்போது அந்த முடிகளில் அழுத்தின ரத்னங்களின் ஒளி வீசுவதானது பெருமாள் திருவடிவாரத்திலே ஆலத்திவழிக்குமாபோலே யிருப்பதாம். [மணிமகரிகா] மகரவடிவமாக ரத்னங்கள் அழுத்தப் பெற்றிருக்குமென்க. மகரிகா என்று ஸ்த்ரீலிங்கநிர்த்தேசம்—ஆலத்தி வழிப்பதாகிற காரியம் ஸ்திரீகளுடையது என்கிற ப்ரஸித்திக்குப் பொருந்தும்.

[ஸ்வயமத விபோ இத்யாதி] அந்த அரசர்கள் வணங்கி வழிபாடு செய்தது பெரிதன்று; ஸாக்ஷாத் பெருமாளும் பிராட்டியுமே ஸ்ரீராமனாகவும் ஸீதையாகவும் அவதரித்திருந்து அந்த திவ்ய தம்பதிகள் ஆராதித்த பெருமையன்றோ வியக்கத்தக்கது என்று காட்டுகிறபடி. ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனார் தம்மைத்தாமே தொழுவார்போல் தொழுது அர்ச்சித்த திவ்ய மங்கள விக்ரஹம் இதுகாணீர் என்கிறார்.

ஸ்வயம், ஸ்வேந என்ற இரண்டனுள் ஒன்று போராதோவென்னில், கேண்மின்: ஸ்ரீரங்கநாதனான ஸ்ரீமந்நாராயணமூர்த்தி தாமே ஸ்ரீராமபிரானாக அவதரித்தபடியைக் காட்டுகிறது ஸ்வேந என்பது. அவர்தாமும் ஆளிட்டு அந்தி தொழாதே தாமே ஆராதித்தபடியைச் சொல்லுகிறது ஸ்வயம் என்பது. ஸ்வார்ஹாணி என்றவிடத்தில் ஸ்வசப்தத்தினால் ஆராத்யமூர்த்தியையும் விவக்ஷிக்கலாம், ஆராதகமூர்த்தியையும் விவக்ஷிக்கலாம். ஆசிரியர்க்கு இரண்டும் திருவுள்ளமே. ... ... (77)

मन्वन्ववाये द्रुहिणे च धन्ये विभीषणेनैव पुरस्कृतेन ।
गुणैर्दरिद्राणमिमं जनं त्वं मध्ये सरिन्नाथ ! सुखाकरोषि ॥ ७८ ॥

மங்வங்வவாயே த்ருஹிணே ச தங்யே விபீஷணேனைவ புரஸ்க்ருதேந,
குணைர் தரித்ராணமிமம் ஜநம் த்வம் மத்யேஸரிந்நாத ! ஸுகாகரோஷி. 78

| | | | |
|---|---|---|---|
| ஹேஸாத | ஸ்ரீரங்கநாதனே !, | விபீஷணேந ஏவ | விபீஷணனாலேயே |
| மநு அந்வவாயே | மநுகுலமும் | மத்யேஸரித் | திருக்காவேரியினிடையே (ஸந்நிதிபண்ணி) |
| தந்யே | க்ருதார்த்தனான | குணை: தரித்ராணம் | ஒரு குணமுமில்லாத |
| த்ருஹிணே ச | பிரமனும் (இருக்கச் செய்தேயும்) | இமம் ஜநம் | அடியேன் போல்வாரை |
| புரஸ்க்ருதேந | திருவுள்ளத்திற்கு இசைந்த | ஸுகாகரோஷி | மகிழ்விக்கின்றீர். |

* * * [மந்வந்வவாயே] நான்முகக்கடவுளுக்கு ஸ்வபனுயிருந்த இருப்பையும், மநுவம்சத்து மஹாராஜர்களுக்கு ஸ்வபனுயிருந்த இருப்பையும்விட்டு, ஒரு விபீஷணுழ்வான் மூலமாக உபயகாவேரீ மத்யத்திலே அடியோங்களுக்கு ஸேவை ஸாதித்துக் கொண்டு இன்பம் பயக்கும்படி எனனே! என்று ஈடுபடுகிருர். முதல்பாதத்திலுள்ள ஸப்தமிகள் அநாதரே (अनादरे) ஸப்தமீ. धन्यं द्रुहिणं मन्वन्ववायं च अनादृत्येत्यर्थः। [விபீஷணைவ புரஸ்க்ருதேந] புரஸ்க்ருதேந விபீஷணேந என்று அந்வயிப்பது. வானர முதலிகள் திரண்டு விரோதித்தவளவிலும் ஒரு தலை நின்று ஸ்வகோஷ்டியில் புரஸ்காரம் அடைவிக்கப் பெற்ற விபீஷணுழ்வானுலே என்றபடி. அந்த மஹாநுபாவன் ஆற்றங்கரையிலே இங்ஙனே ஒரு தண்ணீர்ப்பந்தல் வைத்துப்போனுனென்று அவனுடைய பரமதார்மிகத்வத்தைக் கொண்டாடுகிறபடி.

[குணேர்தரித்ராணமிமம் ஜநம்] எம்பெருமானை ஆழ்வான் ஸ்வஸத்ருசதரித்ரம் என்ருர். இவர் தம்மை குணேர்தரித்ரம் என்கிருர். இவ்வகையாலே பரமஸாம்யாபத்தி இங்கிலந்தன்னிலே பெற்றபடி. குணலேசவிஹீநனை அடியேனை என்றவாறு. [மத்யேஸரித்] अव्ययीभावसमासः॥ (78)

तेजः परं तत्सवितुर्वरेण्यं धाम्ना परेणाप्रणखात्सुवर्णम् ।
त्वां पुण्डरीकेक्षणमामनन्ति श्रीरङ्गनाथं तमुपासिषीय ॥ ७९ ॥

தேஜ: பரம் தத் ஸவிதுர் வரேண்யம் தாம்நா பரேணுப்ரணகாத் ஸுவர்ணம்,
த்வாம் புண்டரீகேக்ஷணமாமநந்தி ஸ்ரீரங்கநாதம் தமுபாஸிஷீய. 79

| | | | |
|---|---|---|---|
| | (எம்பெருமானே!) | ஆப்ரணகாத் | (முடி தொடங்கி) நகமளவாக |
| த்வாம் | தேவரீரை | ஸுவர்ணம் | ஸ்வர்ணமயராகவும் |
| ஸவிது: | ஸூர்யனுடைய | புண்டரீகேக்ஷணம் | செந்தாமரைக் கண்ணராகவும் |
| தத் | ப்ரஸித்தமாயும் | | |
| வரேண்யம் | உபாஸ்யமாயுமிருக்கிற | ஆமநந்தி | (சில ச்ருதிகள் தேவரீரைச்) சொல்லுகின்றன; |
| பரம் தேஜ: | சிறந்த தேஜஸ்ஸாக | | |
| ஆமநந்தி | (காயத்ரீபதங்கள்) ஓதுகின்றன; (இன்னமும்) | தம் | அப்படிப்பட்ட |
| | | ஸ்ரீரங்கநாதம் | ஸ்ரீரங்கநாதராகிய |
| பரேண | சிறந்த | த்வாம் | தேவரீரை |
| தாம்நா | தேஜஸ்ஸினுல் | உபாஸிஷீய | உபாஸிக்கக்கடவேன். |

* * * [தேஜ: பரம்] இதுமுதல் நான்கு ச்லோகங்களால் பலபல உபநிஷத் வாக்யங்களையே கொண்டு பெரிய பெருமாளை ஏத்துகிருர். "तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि" என்கிற வேதவாக்யம் முதல்பாதத்தில் விவக்ஷிதம். அங்கு ஸூர்யனுடைய தேஜஸ்ஸு உபாஸ்யமாகச் சொல்லப்பட்டாலும் எம்பெருமானுடைய தேஜஸ்ஸே ஸூர்யவர்த்தியாக உபாஸிக்கப்படுகிறதென்று பரமைகாந்திகளின் நிஷ்கர்ஷமாகையாலே அதனை இங்கு வெளியிடுகிருர். [धाम्ना परेणाप्रणखात्सुवर्णम्] * य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते हिरण्यश्मश्रुः हिरण्यकेशः आप्रणखात्सर्व एव सुवर्णः तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी * என்கிற உபநிஷத் வாக்யங்களைத் திருவுள்ளத்திற் கொண்டு த்விதீய த்ருதீயபாதங்களை யருளிச் செய்தார். உபாத்தச்ருதி வாக்யங்களுக்கெல்லாம் நோக்கு பெரிய பெருமாள் பக்கலிலேயே என்பதைக் காட்டுவது சதுர்த்தபாதம். அந்தராதித்ய வித்யாதிகளில் ஓதப்படுகிற எம்பெருமானும் ஸ்ரீரங்கநாதனும் ஏகவ்யக்தியே யென்று விளக்கவைத்தபடி. இத்தால் தர்மைக்ய முணர்த்தப்பட்டதாயிற்று. ... ... (79)

आत्माऽस्य जन्तुः परितस्थुषश्च मित्रस्य चक्षुर्वरुणस्य चाग्नेः ।
लक्ष्म्या सहौत्पत्तिकगाढबन्धं पश्येम रङ्गे शरदश्शतं त्वाम् ॥ ८० ॥

ஆத்மாஸ்ய ஜந்து: பரிதஸ்துஷச்ச மித்ரஸ்ய சக்ஷுர் வருணஸ்யசாக்நே:,
லக்ஷ்ம்யா ஸஹௌத்பத்திககாடபந்தம் பச்யேம ரங்கே சரதச் சதம் த்வாம். 80

| | | | |
|---|---|---|---|
| அஸ்ய | தென்படுகின்ற | சக்ஷு: (அஸி) | கண்ணாக இருக்கின்றீர்: |
| ஜந்து: | ஜங்கமவஸ்து ஸமூஹத்திற்கும் | லக்ஷ்ம்யா ஸஹ | பிராட்டியோடுகூட |
| பரிதஸ்துஷ: ச | ஸ்தாவரவஸ்து ஸமூஹத்திற்கும் | ஔத்பத்திக காடபந்தம் | ஸ்வபாவஸித்தமான த்ருட ஸம்பந்தத்தையுடைய |
| ஆத்மா (பவஸி) | உயிராயிருக்கின்றீர்; | த்வாம் | தேவரீரை |
| மித்ரஸ்ய | ஸூர்யனுக்கும் | ரங்கே | ஸ்ரீரங்கத்தில் |
| வருணஸ்ய | வருணனுக்கும் | சதம் சரத: | நூறாண்டு |
| அக்னே: ச | அக்நிக்கும் | பச்யேம | ஸேவிக்கக் கடவோம். |

*** [ஆத்மாஸ்ய ஜந்து:] * चित्रं देवानामुदगादनीकं चक्षुर्मित्रस्य वरुणस्याग्नेः, आप्राद्यावापृथिवी अन्तरिक्षं सूर्य आत्मा जगतस्तस्थुषश्च * என்கிற ச்ருதிவாக்யத்தின் பொருளையே பெரும்பாலும் பூர்வார்த்தத்தில் அநுஸந்திக்கிறார். அந்த ச்ருதி வாக்யத்தில் ஸூர்யனைச் சொன்னது ஸூர்யாந்தர்யாமி பரமாத்மபரமென்பது பரமைகாந்திகளின் கொள்கை. எங்ஙனே யென்னில், "स आत्मा, अङ्गान्यन्या देवताः" என்று உபநிஷத்தே பரம புருஷனை உயிராகவும் மற்ற ஸகல தேவதைகளையும் உடலாகவும் ஓதியிருக்கையாலே; சரீரவாசி சப்தங்கள் சரீரிபர்யந்தாபிதாநம் பண்ணக்கடவன என்கிற ந்யாயத்தாலே இது மிக்க பொருத்தமுடைத்து.

[ஸூர்யஆத்மா ஜகதஸ்தஸ்துஷச்ச] ஜகத:— ஜங்கமமாயும், தஸ்துஷச்ச— ஸ்தாவரமாயு மிருக்கின்ற பிரபஞ்சத்திற்கு, ஆத்மா—உயிராயிருப்பவன் என்பது பொருள். இதுவே இங்கு முதல் பாதத்தில் ஜந்து: பரிதஸ்துஷச்ச அஸ்ய [பிரபஞ்சஸ்ய] ஆத்மா என்று சொல்லப்பட்டது. * चक्षुर्मित्रस्य वरुणस्याग्नेः *என்றது मित्रस्य चक्षुर्वरुणस्य चाग्नेः எனப்பட்டது. இங்கு மித்ர வருணாக்நிகளைச் சொன்னது ஸகல தேவதைகளையும் சொன்னபடி: * चक्षुर्देवानामुत मर्त्यानाम् * என்கிற ச்ருதியில் தேவாநா மென்று பொதுப்படச் சொல்லி யிருக்கையாலே. இங்கு பூர்வார்த்தத்தில் அஸி என்றோ பவஸி என்றோ ஒரு க்ரியாபதம் அத்யாஹாரம் செய்து கொள்ளவேணும். ஆத்மாஸி ஜந்து: என்கிற சிலருடைய பாடத்தில் அந்த அத்யாஹாரம் தேவையில்லை.

[லக்ஷ்ம்யாஸஹேத்யாதி] எப்போதும் பிராட்டியோடு இடைவிடாத சேர்த்தியை யுடையவர் என்றபடி. [த்வாம் ரங்கே சரதச்சதம் பச்யேம] இப்படிப்பட்ட தேவரீரை ஸ்ரீரங்கவிமானத்தில் பல்லூழியூழிதொறும் ஸேவிக்கக்கடவோமென்கை. வைதிகர்கள் காலைதோறும் மாத்யாஹ்நிகம் அநுஷ்டிக்கும்போது "पश्येम शरदश्शतम्, जीवेम शरदश्शतम्" என்று சொல்லி ஸூர்யனைக் காண்பதானது ஸூர்யாந்தர்யாமியான எம்பெருமானைக் காண்கிறபடியே யாகுமென்பதை அழகாக வெளியிட்டருளினாராயிற்று. (80)

यस्यास्मि पत्युर्न तमन्तरेमि श्रीरङ्गतुङ्गायतने शयानम् ।
स्वभावदास्येन च योऽहमस्मि समन्यजे ज्ञानमयैर्मखैस्तम् ॥ ८१ ॥

யஸ்யாஸ்மி பத்யுர் ந தமந்தரேமி ஸ்ரீரங்கதுங்காயதநே சயாநம்,
ஸ்வபாவதாஸ்யேந ச யோஹமஸ்மி ஸ ஸந் யஜே ஜ்ஞாநமயைர் மகைஸ் தம். 81

| | | | |
|---|---|---|---|
| யஸ்ய | யாவனொரு | ஸ்வபாவதாஸ்யே | இயற்கையான அடிமையிலும் |
| பத்யு: | ஸ்வாமிக்கு | ய: அஸ்மி | யாவனாக இருக்கின்றேனோ |
| அஸ்மி | அடியனாக இருக்கிறேனோ, | ஸ: ஸந் | அவனாகவே யிருந்துகொண்டு |
| ஸ்ரீரங்கநகர ஆயதநே சயாநம் | திருவரங்கமாகிற சிறந்த கோயிலில் கண்வளர்ந்தருள்கின்ற | தம் | அந்த ஸ்ரீரங்கநாதனை |
| தம் | அந்த பெரிய பெருமானை | ஜ்ஞாநமயை: | ஞானமாகிற |
| ந அந்தரேமி | விட்டு நீங்குவேனல்லேன்; | மகை: | யாகங்களினால் |
| அஹம் | நான் | யஜே | ஆராதிக்கிறேன். |

* * * [யஸ்யாஸ்மிபத்யு:] தைத்திரீய யஜுர் ப்ராஹ்மணம்—மூன்றாவது அஷ்டகத்தின் ஏழாவது ப்ரச்நமாகிய அச்சித்திரத்தில் "यस्यास्मि न तमन्तरेमि" என்றும், "योऽहमस्मि स सन् यजे" என்றும் உள்ள இரண்டு வாக்கியங்களைக் கொண்டு இந்த ச்லோகமருளிச் செய்கிறார். "यस्यास्मि न तमन्तरेमि" என்ற வேத வாக்கியத்திற்கு வித்யாரண்ய பாஷ்யம் வருமாறு :— यस्य-पितुः अहं पुत्रोऽस्मि तं पितरं नान्तरेमि—तदीयस्याचारस्य अन्तरायं न करोमि। என்பதாம். பட்ட பாஸ்கரபாஷ்யத்தில் பலவகையாகப் பொருளுரைக்கப்படுகிறது. "அந்தரேமி" என்பதை "அந்தரா - ஏமி" என்று பிரித்து, "அந்தரைமி" என்று ஸந்தி ஆகவேண்டுவது அங்ஙனம் ஆகாதது சாந்தஸமென்றும் சொல்லி, யஸ்ய அஸ்மி, தமந்தரா நைமி—எந்த பெருமானுக்கு நான் அடிமைப்பட்டவனோ அந்த எம்பெருமானையன்றி வேறொருவனை அடைகின்றேனல்லேன் என்று பொருளுரைப்பாருமுளர். यस्य पत्युः— * पतिं विश्वस्येत्युक्तसर्वशेषिणो यस्य, अहं शेषभूतोऽस्मि, श्रीरङ्गधामायतने शयानं तं पतिमन्तरा (अन्यं) नैमि என்றதாயிற்று.

இனி, "योऽहमस्मि स सन् यजे" என்கிற வேதவாக்கியம் உத்தரார்த்தத்திலே அமைக்கப்பட்டுள்ளது. अहं यः (यादृशः) अस्मि, स सन् यजे- நான் எப்படிப்பட்ட ஸ்வரூபத்தோடு கூடியவனோ, அந்த ஸ்வரூபத்தில் நின்றும் வழுவாமல் தாத்ருசஸ்வரூபவிசிஷ்டனாகவேயிருந்துகொண்டு, ஸ்ரீரங்கநாதனை ஆராதிக்கிறேன் என்றபடி. * यज देवपूजायाम् என்றிறே धातुपाठः. இங்கு இந்த தாதுரூபப்ரயோகத்திற்குத் தகுதியாக "ஜ்ஞாநமயைர்மகை:" என்கிறார். பகவத் கீதையில் (9—15) "ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते" என்றது இங்கு அநுஸந்தேயம். ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் *भगवन्तं नारायणं ध्यानयोगेन दृष्ट्वा ततो भगवतो नित्यस्वाम्यमात्मनो नित्यदास्यं च यथावस्थितमनुसन्धाय* என்று தொடங்கி *श्रीमत्पादारविन्दयुगलं शिरसि कृतं ध्यात्वा अमृतसागरान्तर्निमग्नसर्वावयवस्सुखमासीत* என்பதிருகவுள்ள ஜ்ஞாநயஜ்ஞயஜநம் இங்கு விவக்ஷிதமென்பர் பெரியோர். ... ... ... ... (81)

आयुः प्रजानाममृतं सुराणां रङ्गेश्वरं त्वां शरणं प्रपद्ये ।
मां ब्रह्मणेऽस्मै महसे तदर्थं प्रत्यञ्चमेनं युनजे परस्मै ॥ ८२ ॥

ஆயு: ப்ரஜாநாமம்ருதம் ஸுராணாம் ரங்கேச்வரம் த்வாம் சரணம் ப்ரபத்யே,
மாம் ப்ரஹ்மணேஸ்மை மஹஸே ததர்த்தம் ப்ரத்யஞ்சமேநம் யுநஜே பரஸ்மை. 82

| | | | |
|---|---|---|---|
| ப்ரஜாநாம் | ப்ரஜைகளுக்கு | பரஸ்மை ப்ரஹ்மணே | பரப்ரஹ்ம ஸ்வரூபியாயும் |
| ஆயு: | ரக்ஷகராயும் | மஹஸே | தேஜஸ் ஸ்வரூபியாயு மிருக்கிற |
| ஸுராணாம் | தேவர்களுக்கு | அஸ்மை | இப்பெருமான் பொருட்டு |
| அம்ருதம் | போக்யராயும் | ததர்த்தம் | சேஷ பூதனை |
| ரங்கேச்வரம் | ஸ்ரீரங்கத்திற்கும் தலைவராயு மிருக்கிற | ப்ரத்யஞ்சம் | ப்ரத்யகாத்மாவான |
| த்வாம் சரணம் ப்ரபத்யே | தேவரீரை சரணம் புகுகின்றேன் | ஏகம் மாம் | இவ்வடியேனை |
| | | யுஞ்ஜ | விநியோகிக்கக் கடவேன், |

**** [ஆயு: ப்ரஜாநாம்.] தைத்திரீய ஆரண்யகத்தில் மூன்றாவது ப்ரச்நத்தில் (22) "अमृतं देवानामायुः प्रजानाम्, इन्द्रं राजानं सवितारमेतम्, वायोरात्मानं कवयो निचिक्युः" என்கிற வாக்கியங்களுள்ளன. *अमृतं देवानामायुः प्रजानाम्* என்கிற வாக்கியம் இங்கு பூர்வார்த்தத்தில் அமைக்கப்பட்டுள்ளது. மண்ணுலகத்தவர்களுக்கு ரக்ஷகராயும், விண்ணுலகத்தவர்களுக்குப் பரம போக்கியராயு மிராநின்ற தேவரீரைச் சரணம் புகுகின்றேனென்கின்றார்.

தைத்ரீயோபநிஷத்தில் இரண்டாம் ப்ரச்ந முடிவில் *ब्रह्मणे त्वामहस ओमित्यात्मानं युञ्जीत* என்ற வாக்கியமுள்ளது; அதை உத்தரார்த்தத்தில் சப்தத: அர்த்ததச்ச அநுபாஷிக்கிறார். ச்ருதியில் "யுஞ்ஜீத" என்று விதியாகவுள்ளது. அதை ஸ்வாநுஷ்டாநரூபமாக இங்கு மாற்றி ப்ரயோகித்தருளினார். ச்ருதியில் "ஆத்மாநம்" என்றிருப்பதை இங்கு [ப்ரத்யஞ்சமேகம் மாம்] என்றார். மூன்றாவது பாதத்தில் ததர்த்தம் என்பது மாம் என்பதற்கு விசேஷணம். தாதர்த்த்யமே வடிவாகவுள்ள அடியேனை என்றபடி. '[ப்ரஹ்மணே] என்றவிடத்தில் तादर्थ्यचतुर्थी யென்பதையும் ஒருவாறு ஸூசிப்பித்தருளினபடி. ... ... ... ... ... (82)

आर्तिं तितीर्षुरथ रङ्गपते धनायन् आत्मम्भरिर्विविदिषुर्निजदास्यकाम्यन् ।
ज्ञानीत्यमून् सममथास्समम्युदारान् गीतासु देव भवदाश्रयणोपकारान् ॥ ८३ ॥

ஆர்த்திம் திதீர்ஷுரத ரங்கபதே தநாயந் ஆத்மம்பரிர் விவிதிஷுர் நிஜதாஸ்யகாம்யந்,
ஜ்ஞாநீத்யமூந் ஸமமதாஸ்ஸம்மத்யுதாராந் கீதாஸு தேவ பவதாச்ரயணோபகாராந், 83

| | | | |
|---|---|---|---|
| ரங்கபதே | ஸ்ரீரங்கநாதரே! | நிஜதாஸ்ய காம்யந் | ஸ்வஸ்வரூபமான சேஷவ்ருத்தியை விரும்புகிற |
| பவத் ஆச்ரயண உபகாராந் | தேவரீரை அடிபணிவதையே உபகாரமாக வுடைய, | ஜ்ஞாநீ | ஜ்ஞாநி யென்ன |
| ஆர்த்திம் திதீர்ஷு: | கஷ்டைச்வர்ய காமனென்ன | இதி அமூந் | என்கிற இவர்களை |
| தநாயந் | அபூர்வைச்வர்ய காமனென்ன | ஸமம் | ஸமமாக |
| ஆத்மம்பரி: | கைவல்ய காமனென | தேவ | பகவத்கீதையில் |
| விவிதிஷு: | ஜிஜ்ஞாஸுவென்ன | அத்யுதாராந் ஸமமதா: | மிகவும் உதாரர்களாக திருவுள்ளம்பற்றினீர். |

* *.* [ஆர்த்திம் திதீர்ஷு:] பகவத்கீதையில் ஏழாவது அத்யாயத்தில் *चतुर्विधा भजन्ते मां जनास्सुकृतिनोऽर्जुन। आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ॥ என்று நால்வகை அதிகாரிகளைச் சொல்லி, மேலே उदारास्सर्व एवैते என்றருளிச் செய்யப்பட்டது. அவ்வர்த்தம் இந்த ச்லோகத்தில் அநுஸந்திக்கப்பட்டிருக்கிறது. கீதையில் "ஆர்த்த:" என்றதை இங்கு [ஆர்த்திம் திதீர்ஷு:] என்பதனால் விவரித்தபடி. ஏற்கெனவேயிருந்த ஐச்வர்யத்தின் ப்ரம்சத்தாலே யுண்டான ஆர்த்தியைத் தீர்த்துக்கொள்ள விரும்பிய ப்ரஷ்டைச்வர்ய காமன் என்றபடி. அங்கு "அர்த்தார்த்தி" என்னப்பட்ட அதிகாரி இங்கு

[தநாயந்] எனப்பட்டான். அபூர்வைச்வர்ய காமனைச்சொன்னபடி. * अशनायोदन्यधनाया बुभुक्षापिपासागर्धेषु * என்ற பாணிநிஸூத்ர முணர்க. धनमात्मन इच्छन्—धनायन्,

அங்கு ஜிஜ்ஞாஸு: என்னப்பட்ட கைவல்யகாமன் இங்கு [ஆத்மம்பரிர்விவிஷு:] எனப்பட்டான். ஸ்வாத்மமாத்ராநுபவகாமன் என்றபடி. விவிதிஷு: என்றதும் ஜிஜ்ஞாஸு: என்றதும் பர்யாயம். ஆத்மம்பரி: என்று அவனை கர்ஹித்துக்கூறுகிறபடி. அங்கு ஜ்ஞாநீ என்னப்பட்ட அதிகாரியை இங்கு நிஜதாஸ்யகாம்யந் ஜ்ஞாநீ என்று விசேஷித்து அருளிச் செய்கிறார். இவனே ஸ்வரூபாநுரூபவ்ருத்திகாமன் என்று காட்டினபடி.

ஆக இப்படிப்பட்ட இந்நால்வகை அதிகாரிகளையும் வாசியற உதாரர்களாக அருளிச் செய்தீரென்கிறார் மூன்றாம் பாதத்தில். தாதாக்களை உதாரர்களென்ன வேண்டியிருக்க ப்ரதிக்ரஹீதாக்களை அங்ஙனம் சொல்லக்கூடுமோ என்கிற சங்கைக்குப் பரிஹாரமாகவுள்ளது நான்காம் பாதம். பவதாச்ரயணோபகாராந் என்கிறவிது ஹேதுகர்ப்ப விசேஷணம். [உபகாராத் என்பதும் பாடம்] அல்ப பலன்களையோ மஹா பலன்களையோ வேண்டுமவர்கள் வேறிடம் தேடியோடாமல் தன்பக்கல் வந்து பணிந்து தன்னிடத்தில் யாசித்துப் பெறுகிறார்களாதலால் தன்னுடைய ஔதார்யத்தை அவர்கள் தாநம் செய்தவர்கள் என்கிற திருவுள்ளம் அறியத்தக்கது. அவர்கள் தன்னிடத்தில் வந்து வேண்டாவிடில் தன்னுடையதான ஸர்வபல ப்ரதத்வசக்தி குமரிருந்துபோமித்தனையிறே. (83)

नित्यं काम्यं परमपि कतिचित् त्वय्यध्यात्मस्वमतिभिरममाः ।
न्यस्यासङ्गा विदधति विहितं श्रीरङ्गेन्दो ! विदधति नच ते ॥ ८४ ॥

நித்யம் காம்யம் பரமபி கதிசித் த்வய்யத்யாத்மஸ்வமதிபிரமமா:,
ந்யஸ்யாஸங்கா விதததி விஹிதம் ஸ்ரீரங்கேந்தோ! விதததி ந ச தே. 84

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கேந்தோ | ஸ்ரீரங்கசந்திரனே! | காம்யம் | காம்ய கர்ம ரூபமாயும் |
| கதிசித் | சில அதிகாரிகள் | பரம் அபி | நைமித்திக கர்ம ரூபமாயிருக்கிற |
| அத்யாத்ம ஸ்வமதிபி: | ஆத்ம விஷயங்களான தம் ஞானங்களினாலே | | |
| அமமா: | மமகாரமற்றவர்களாயும் | விஹிதம் | (சாஸ்த்ரங்களில்) விதிக்கப்பட்ட கர்மாவை |
| அஸங்கா: | பலஸங்கமற்றவர்களாயும் | | |
| த்வயி ந்யஸ்ய | தேவரீரிடத்தில் கர்த்ருத்வத்தை அநுஸந்தித்து | விதததி | அனுஷ்டிக்கிறார்கள்; |
| | | தே | அவர்கள் |
| நித்யம் | நித்ய கர்ம ரூபமாயும் | ந விதததி ச | அநுஷ்டிக்கிறார்களுமல்லர். |

[நித்யம் காம்யம்] கீழ் ச்லோகத்தில் கீதா சாஸ்திரம் ப்ரஸ்துதமாகையால் அதிற்சொன்ன கர்மம், ஜ்ஞாநம், பக்தி, ப்ரபத்தி என்கிற நான்கு யோகங்களின் படியையும் விவரிக்கக் கோலி கர்மயோகத்தின் படியை விவரித்தருள்கிறார் இந்த ச்லோகத்தில். * मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा । निराशीर्निर्ममो भूत्वा * என்கிற ச்லோகம் பெரும்பாலும் இந்த ச்லோகமாக வடிவெடுத்ததென்றுணர்க. ஸந்த்யாவந்தநம் முதலியவை நித்ய கர்மங்கள்; தர்சச்ராத்தம், ஸங்க்ரமணச்ராத்தம், உபராகச்ராத்தம் முதலியவை நைமித்திக கர்மங்கள்; ஜ்யோதிஷ்டோமம், வாயவ்யம் முதலியவை காம்ய கர்மங்கள். ஆகிய இவற்றை என்றபடி. [அத்யாத்மஸ்வமதிபி:] கீதையில் 'அத்யாத்ம சேதஸா' என்றது இங்கு இப்பதத்தால் சொல்லப்படுகிறது. ஆத்மஸ்வரூப விஷயமான ஞானத்தோடு கூடினவர்களாய் என்கை. இங்கு கீதாபாஷ்ய வாக்யங்கள் காண்பீன்:—
"मच्छरीरतया मत्प्रवर्त्यात्मस्वरूपानुसन्धानेन सर्वाणि कर्माणि मय्येव क्रियमाणानीति मयि परमपुरुषे संन्यस्य तानि च केवलं मदाराधनानीति कृत्वा तत्फले निराशीः, तत एव तत्र कर्मणि ममतारहितो भूत्वा"— இத்யாதிகள்.

[விததி நவிததிச] இப்படி மமதாபுத்த்யாதி ரஹிதர்களாய் ஸகல கர்மங்களையும் அநுஷ்டிக்கின்ற மஹான்கள் (விததி) என்றது பொருந்தும் ; (நவிததிச) என்றது எங்ஙனே பொருந்துமென்னில் ; கேண்மின். லௌகிக ஸுக துக்கங்களை யுண்டாக்கி மேன்மேலும் ஸம்ஸாரத்தையே விளைவிப்பது கர்மங்களின் ஸ்வபாவமாயினும், கீழ் விவரித்த விலக்ஷணமான அதிகாரித்வ அவை பந்தகமாகமாட்டா வாதைலே, அவை அஸத்கல்பமாய் இவர்கள் கர்மத்தை யநுஷ்டிக்கவே யில்லையென்று சொல்லலாம்படி யிருக்கும். ... ... ... ... (84)

प्रत्यञ्चं स्वं पञ्चविंशं पराचः संचक्षाणास्तत्त्वराशेर्विविच्य ।
युञ्जानाश्चर्तम्भरायां स्वबुद्धौ स्वं वा त्वां वा रङ्गनाथाप्नुवन्ति ॥ ८५ ॥

ப்ரத்யஞ்சம் ஸ்வம் பஞ்சவிம்சம் பராச : ஸஞ்சக்ஷாணஸ் தத்வராசேர் விவிச்ய,
யுஞ்ஜாநாச்சர்த்தம்பராயாம் ஸ்வபுத்தௌ ஸ்வம் வா த்வாம்வா ரங்கநாதாப்நுவந்தி. 85

| | | | |
|---|---|---|---|
| ரங்கநாத | ஸ்ரீரங்கநாதரே !, | ஸ்வபுத்தௌ | தங்கள் புத்தியில் |
| ப்ரத்யஞ்சம் | தனக்குத்தானே ப்ரகாசிப்பவனை | ஸ்வம் | ஸ்வாத்மாவை |
| ஸ்வம் | ஸ்வாத்மாவை | யுஞ்ஜாநா: | த்யானிக்கின்றவர்கள் |
| பஞ்சவிம்சம் | இருபத்தைந்தாவனை | | |
| ஸஞ்சக்ஷாணா: | சொல்லா நிற்பவர்களாய் | ஸ்வம் ஆப்நுவந்தி | ஸ்வாத்மாநுபவம் பண்ணப் பெறுகிறார்கள் ; |
| பராச: | பிறர்க்கே பிரகாசிக்கின்ற | | |
| தத்வராசே: | தத்துவங்களின் கூட்டத்திலிருந்து | த்வாம் | தேவரீரை |
| விவிச்ய | பகுத்தறிந்து | | |
| ருதம்பராயாம் | ஸம்சய ஜ்ஞானம் விபரீத ஜ்ஞானமொன்றுமின்றிக்கேயொழி காலத்திலும் உண்மை புணர்ச்சியை யுடைய | யுஞ்ஜாநா: | த்யானிக்கின்றவர்கள் |
| | | த்வாம் ஆப்நுவந்தி | தேவரீரை அநுபவிக்கப் பெறுகிறார்கள். |

* * * [ப்ரத்யஞ்சம் ஸ்வாம்] ஜ்ஞாநயோகத்தின்படியை விவரிக்க கீழ் (83) *ஆர்த்திம் திதீர்ஷு:* என்ற ச்லோகத்தில் சொல்லப்பட்ட அதிகாரிகளுள், விவிதிஷு, ஜ்ஞாநீ என்ற இருவகைப்பட்ட அதிகாரிகளுக்குள்ள பலபேதத்தையும் ஸாதநபேதத்தையும் நிரூபித்தருளுகிறாரிதில். அஹமிதி ஸ்வஸ்மை ப்ரதீயமாநம் எதுவோ அது ப்ரத்யக் எனப்படும் ; இதமிதி ப்ரதீயமாநம் எதுவோ அது பராக் எனப்படும். "பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம், இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்கார மனங்களே" என்கிறபடியே, ப்ரக்ருதி மஹாந் அஹங்காரம் பஞ்ச தந்மாத்ரங்கள் பஞ்ச பூதங்கள் பஞ்ச கர்மேந்த்ரியங்கள் பஞ்ச ஜ்ஞாநேந்த்ரியங்கள் மநஸ்ஸு ஆகிய இருபத்திநான்கு தத்வ ஸமுதாயம் பராக்கெனப்படும். இருபத்தைந்தாவனான ஜீவாத்மா ப்ரத்யக்கெனப்படுவன் என்றுணர்க. இந்த ப்ரத்யகாத்மாவை இருபத்திநான்கு தத்வங்களிற்காட்டில் விலக்ஷணனாகப் பகுத்துணர்ந்து, அந்த ஆத்மாவின் உபாஸநத்தைச் செய்யுமவர்கள் ஆத்மாநுபவரூபமான கைவல்ய மோக்ஷத்தைப் பெறுகிறார்கள். இவர்களே விவிதிஷுக்களென்றும் ஜிஜ்ஞாஸுக்களென்றும் சொல்லப்படுவர்கள். இவர்கள் ஆத்மாவின் ஜ்ஞாத்ருத்வத்தையும் ஜ்ஞாநஸ்வரூபத்வத்தையும் மாத்திரமே தெரிந்து கொண்டவர்களாவர். "அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்த்த மென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்கநிரூபகம்" என்று ஸ்ரீவசநபூஷணத்திலருளிச் செய்தபடியே புறவிதழைவிட்டு அகவிதழான சேஷத்வத்தை நன்குணர்ந்த ஞானிகளோவென்னில் அந்த வுணர்வுக்கிணங்க பகவானையே உபாஸிப்பவர்களாய் அந்த பகவதநுபவத்தையே பலனாகப் பெறுகிறார்கள் என்றபடி.

இங்ஙனன்றிக்கே வேறுவகையாகவும் யோஜிக்கலாம். ஸ்வாத்மோபாஸநம் இருவகையானது ; பரமாத்மாத்மகஸ்வாத்மோபாஸந மென்றும், ஸ்வாத்மசரீரக பரமாத்மோபாஸந மென்றும்.—ஒன்றில் பகவானுக்கு விசேஷணத்வமும், மற்றொன்றில் அவன்றனக்கு விசேஷ்யத்வமும் கவனிக்கத்தக்கது. இதில் பரமாத்மாத்மகஸ்வாத்மோபாஸகர்கள் தத்க்ரதுந்யாயத்தாலே ஸ்வாத்மாநுபவத்தைப்பயனாகப் பெறுகிறார்கள். ஸ்வாத்மசரீரக (ஸகல கல்யாணகுணவிசிஷ்ட) பரமாத்மோபாஸகர்கள் ததாவித பகவதநுபவத்தைப் பெறுகிறார்கள் என்றபடி.

ஸ்வம் வா த்வாம் வா என்பதை யுஞ்ஜாநா: என்பதிலும் ஆப்நுவந்தி என்பதிலுமாக இரண்டிடத்திலும் தந்த்ரேண அந்வயித்துக்கொள்ள வேணும். ஸ்வம் யுஞ்ஜாநா: ஸ்வம் ஆப்நுவந்தி, த்வாம் யுஞ்ஜாநா: த்வாம் ஆப்நுவந்தி என்று வாக்யார்த்தம் காண்க.

[ருதம்பராயாம்] ऋतं-सत्यं बिभर्तीति ऋतंभरा । ஸம்சய விபர்யய ரஹிதமான புத்தியில் என்றபடி. ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி உணரக்கூடிய புத்தியில் வைத்துச் சிந்திப்பவர்கள் என்றபடி. ருதம்பரா சப்தம் ப்ரஜ்ஞா விசேஷத்தில் ரூடம். * संज्ञायां भृतॄवृजिधारि सहितपिदमः * என்ற ஸூத்ரமுணர்க. * ऋतंभरां च मां प्राहुः * என்று லக்ஷ்மீ தந்த்ர ப்ரயோகமு முளது. ... ... ... ... (85)

अथ मृदितकषायाः केचिदाज्ञानदास्यत्वरितशिथिलचित्ताः कीर्तिचिन्तानमस्याः ।

विदधति ननु पारं भक्तिनिघ्ना लभन्ते त्वयि किल ततमे त्वं तेषु रङ्गेन्द्र ! किं तत् ॥ ८६ ॥

அத ம்ருதிதகஷாயா: கேசிதாஜ்ஞாநதாஸ்ய த்வரிதசிதிலசித்தா: கீர்த்திசிந்தாநமஸ்யா:,

விதததி நநு பாரம் பக்திநிக்நா லபந்தே த்வயிகில ததமே த்வம் தேஷு ரங்கேந்த்ர கிம் தத். 86

| | | | |
|---|---|---|---|
| ரங்கேந்த்ர | ஸ்ரீரங்கநாதரே ! | பக்திநிக்நா: | பக்தி பரவசர்களாய் |
| ம்ருதித கஷாயா: | அகற்றப்பட்ட பாபத்தை யுடையவராயும் | பாரம் | பரமப்ராப்யரான தேவரீரை |
| ஆஜ்ஞா தாஸ்ய த்வரித | இயற்கையான அடிமையில் பதற்றத்தை யுடையவராயும் | லபந்தே | அடைகிறார்கள் ] |
| சிதிலசித்தா: | உள்ளம் நைந்தவர்களாயு மிருக்கிற | ததமே | அன்னவர்கள் |
| கேசித் | சில அதிகாரிகள் | த்வயி கில | தேவரீரிடத்திலன்றோ வுள்ளார்கள்; (இது புக்தம்.) |
| கீர்த்தி சிந்தா நமஸ்யா: | ஸங்கீர்த்தநம், சிந்தநம், நமஸ்காரம் ஆகிய இவற்றை | த்வம் | தேவரீர் |
| விதததி | செய்கிறார்கள் ; | தேஷு | அவர்களிடத்தில் (இருக்கிறீரோ) |
| | | தத் கிம் | அது என்ன ?. |

[அத ம்ருதிதகஷாயா:] பக்தியோகத்தின் படியை யருளிச் செய்கிறாரிதில். [ம்ருதிதகஷாயா:] * कषाये कर्मभिः पक्वे ततो ज्ञानं प्रवर्तते * धर्मेण पापमपनुदति, * अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययाऽमृतमश्नुते * இத்யாதிப்படியே சாஸ்த்ரீய கர்மாநுஷ்டாநங்களாலே பக்த்யுத்பத்திக்கு விரோதியான பாவங்கள் நசிக்கப் பெற்றவர்கள் என்றபடி. [ஆஜ்ஞா தாஸ்யத்வரித சிதிலசித்தா:] ஸ்வாபாவிகமான சேஷத்வத்தை யுணர்ந்து "கூவிக் கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ" என்று பதறுகின்றவர்களாயும், "கங்குலும் பகலும் கண்டுயிலறியான் கண்ணநீர் கைகளாலிறைக்கும், சங்கு சக்கரங்களென்று கைகூப்பும் தாமரைக்கண்ணென்றே தளரும், எங்ஙனே தரிக்கேனுன்னைவிட்டென்னும்" இத்யாதிப்படியே உள்குழைந்தவர்களாய் [கீர்த்தி சிந்தா நமஸ்யா: விதததி]

கீதையில் (9-14) * सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः । नमस्यन्तश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥* என்று சொன்னபடியே வாயினால் பாடுதல் மனத்தினால் சிந்தித்தல் உடலினால் தொழுதல் ஆகிய த்ரிகரண வ்ருத்திகளையும் செய்கிறார்கள். [பாரம் பர்ந்திவிக்கா லபந்தே] * सोऽध्वनः पारमाप्नोति * என்கிறபடியே ஸம்ஸாரத்வபாரபூதராய் பரமப்ராப்யரான தேவரீரைப் பெற்று அநுபவிக்கிறார்கள். நநு என்பதனால் ப்ராமாணப்ரஸித்தியைக் காட்டினபடி.

[த்வயி கில ததமே, த்வம் தேஷு, கிம் தத்] கீதையில் (9-29) * समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः । ये भ(ज)न्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥* என்றார் கண்ணபிரான். இதன் பொருளாவது—ஜாதியாலும் உருவத்தாலும் ஸ்வபாவத்தாலும் அறிவினாலும் மிகவும் ஈனமாயும் ஏற்றமாயுமுள்ள ஸகல பூதங்களிலும் யாராகிலுமாம்; நம்மை யாச்ரயிக்கும் விஷயத்தில் 'இன்னானுயர்ந்தவன், இன்னான் தாழ்ந்தவன்' என்று நமக்கில்லை; எல்லோருக்கும் நாம் ஸமமாயிருக்கிறோம். ஜாதி முதலான காரணத்தைக் கொண்டு ஒருவனைப் பகைக்கவும் மாட்டோம். ஒருவனை நேசிக்கவும் மாட்டோம்; நம் பிரிவில் தரிக்கமாட்டாமல் நாமே கதியென்று எவர் நம்மைச் சேவிக்கிறார்களோ அவர்களை ஜாதி யொழுக்கம் முதலியவைகளால் உயர்ந்தாலும் தாழ்ந்தாலும் நமக்கு ஸமமான குணமுள்ளவர்போல நம்மிடத்திலேயே இருத்துகிறோம். நாமும் அப்படியே நமக்கு மேற்பட்டவர்கள்போல் அவர்களிடத்தில் தானே யிருக்கிறோம் என்கை. இந்த ச்லோகத்தில் * மயி தே தேஷு சாப்யஹம் * என்றுள்ளது. (மயி தே) என்று சொன்னது யுக்தம்; (தேஷு சாப்யஹம்) என்று சொன்னது என்கொல்? என்று இங்கு பட்டர் கேள்வி கேட்கிறார். தேவரீர் பக்கலிலே பக்தர்கள் நெஞ்சை ஊன்ற வைக்கிறார்களென்றது பொருந்துகின்றது; அவர்களிடத்தில் தேவரீரும் நெஞ்சை ஊன்ற வைப்பதாகப் பேசுகிறதே, இது என்ன? எனக்கு விளங்கவில்லை என்கிறார். அநந்யாதீந ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகரான தேவரீர் பக்தஜநாதீந ஸ்வரூபாதியுக்தராம்படி தம்மை அமைத்துக் கொள்வது மிகவும் ஆச்சரியம் என்று ஈடுபட்டுரைத்தபடி. * ज्ञानी त्वात्मैव मे मतम् * என்கிறவரன்றோ தேவரீர் என்றவாறு. ... ... (86)

उपादत्ते सत्तास्थितिनियमनाद्यैश्चिदचितौ स्वमुद्दिश्य श्रीमानिति वदति वागौपनिषदी ।
उपायोपेयत्वे तदिह तव तत्त्वं न तु गुणौ अतस्त्वां श्रीरङ्गेशय ! शरणमव्याजमभजम् ॥ ८७ ॥

உபாதத்தே ஸத்தாஸ்திதிநியமநாத்யைச் சிதசிதௌ
ஸ்வமுத்திச்ய ஸ்ரீமாநிதி வததி வாகௌபநிஷதீ,
உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ
அதஸ் த்வாம் ஸ்ரீரங்கேசய ! சரணமவ்யாஜமபஜம். 87

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கேசய | திருவரங்கத்தில் பள்ளி கொண்டருளும் பெருமானே! | வததி | சொல்லுகின்றது; |
| ஔபநிஷதீவாக் | உபநிஷத்திலுள்ள வாக்கானது (என்ன சொல்லுகிறதென்றால்) | தத் | ஆகையினால் |
| ஸ்ரீமாந் | திருமால் | உபாய உபேயத்வே | உபாயத்வமும் உபேயத்வமும் |
| ஸ்வம் உத்திச்ய | தன்னை நோக்கி [தன்னை பலபாகியாக எண்ணி என்றபடி.] | தவ | தேவரீர்க்கு |
| | | தத்வம் | ஸ்வரூபமாகும்; |
| | | ந து குணௌ | குணங்களல்ல; |
| சித் அசிதௌ | சேதநா சேதநங்களை | | |
| ஸத்தா ஸ்திதி நியமந ஆத்யை: | ஸ்ருஷ்டி ஸ்திதி நியமனம் முதலிய வியாபாரங்களினால் | அத: | உபாய உபேயத்வங்களே தேவரீர் ஸ்வரூபமாகவுடையவரா யிருப்பதனால் |
| | | த்வாம் | தேவரீரை |
| உபாதத்தே | ஸ்வீகரிக்கிறான் | அவ்யாஜம் | வ்யாஜமொன்று மின்றியே |
| இதி | என்று | சரணம் அபஜம் | சரணம் புகுந்தேன். |

* * * [உபாதத்தே] பக்தி முதலிய உபாயாந்தரங்களில் இழியுமவர்களுக்கு ப்ராப்ய பூதராயும், * अकिञ्चनोऽनन्यगतिः * என்றிருக்குமதிகாரிகளுக்கு ப்ராப்யப்ராபகங்களிரண்டும் தாமேயாயும் பெரியபெருமாள் இருக்கிறபடியையும், தாம் (பட்டர்) அநந்யஸாதகர் என்னுமத்தையும் அறிவிக்கிறாரிதில்; * यतो वा इमानि भूतानि जायन्ते, * अन्तः प्रविष्टः शास्ता जनानां सर्वात्मा, * पतिं विश्वस्य * இத்யாதிகளான உபநிஷத்வாக்யங்களானவை என்ன தெரிவிக்கின்றனவென்றால், சேதநா சேதந பதார்த்தங்களைப் படைப்பதோ ரக்ஷிப்பதோ நியமிப்பதோ மற்றும் எது செய்வதோ, எல்லாம் எம்பெருமான் தனக்காகவே செய்வதாகத் தெரிவிக்கின்றன. அவன் ஸ்வாமியாயும் ததிதரங்கள் யாவும் ஸ்வம்மாயும் இருக்கையாலே உடைமைகள் விஷயமாக உடையவன் செய்யும் ஸகல கார்யங்களும் ஸ்வார்த்தமாகவே யிருப்பதாகக் காண்கிற லோகாநுபவத்தினாலும் இவ்வர்த்தம் நிஷ்கர்ஷிக்கப்படலாம். ஆகவே, உபாயம் உபேயம் என்ற இரண்டும் எம்பெருமானுகவே யிருக்கத் தகுதியாயிற்று. கரண களேபர ப்ரதாந ரக்ஷண நியமநாதிகளைச் செய்பவன் தானே உபாயமாயிருக்கத் தகுதியுண்டு; ஸ்வாமியானவன் தானே உபேயமாயிருக்கத் தகுதியுண்டு. ஏவஞ்ச, தேவரீரே உபாயோபேயமா யிருக்கையாலே அடியேன் வேறொரு உபாயத்தையும் பற்றாமல் வேறொரு உபேயத்தையும் கருதாமல் தேவரீரையே இரண்டுமாகப் பற்றினேன் என்றாராயிற்று.

இதில் மூன்றாவது பாதத்தில் "உபாயோ பேயத்வங்கள் தேவரீருக்குத் தத்வமே யல்லது குணங்களன்று" என்கிறார்; இதன் தாத்பர்யம் யாதெனில்; குணங்களானவை ஸ்வரூப நிரூபக தர்மங்களென்றும் நிரூபிதஸ்வரூப விசேஷணங்களென்றும் இருவகைப்படும்: எந்த குணங்களைக் கொண்டே வஸ்துவைத் தெரிந்துகொள்ள வேண்டுமோ, அவை ஸ்வரூப நிரூபகங்களெனப்படும். தெரிந்துகொள்ளப்பட்ட வஸ்துவில் பிறகு அநுபவிக்கப்படும் குணங்கள் நிரூபிதஸ்வரூபவிசேஷணங்களெனப்படும். உபாயத்வமும் உபேயத்வமும் ஸ்வரூபநிரூபக தர்மங்களே யல்லது நிரூபிதஸ்வரூப விசேஷணங்களல்ல என்று அருளிச் செய்யப்படுவதனால் இந்த உபாயத்வோபேயத்வங்கள் பகவதைகாந்திகங்கள் என்று காட்டப்பட்டதாகும். ஸத்ஸம்ப்ரதாயார்த்த நிஷ்கர்ஷ மிருந்தபடி. (87)

... ... ...

पट्वैकवराटिकेव क्लृप्ता स्थलयोः काकणिकासुवर्णकोटयोः ।
भवमोक्षणयोस्त्वयैव जन्तुः क्रियते रङ्गनिधे ! त्वमेव पाहि ॥ ८८ ॥

படுநைகவராடிகேவ க்லுப்தா ஸ்தலயோ: காகணிகாஸுவர்ண கோட்யோ:,
பவமோக்ஷணயோஸ் த்வயைவ ஜந்து: க்ரியதே ரங்க நிதே! த்வமேவ பாஹி. 88

| | | | |
|---|---|---|---|
| ரங்கநிதே | திருவரங்கச் செல்வனாரே! | ஜந்து: | சேதநனானவன் |
| படோ: | ஸமர்த்தனான ஒருவனால் | த்வயா ஏவ | தேவரீராலேயே |
| காகணிகா ஸுவர்ண கோட்யோ: | ஒரு பைசா வருப்பும் ஒரு சவரன் வருப்புமான | பவமோக்ஷணயோ: | ஸம்ஸாரத்திலும் முக்தியிலும் |
| ஸ்தலயோ: | இடங்களில் | க்ரியதே | பண்ணப்படுகிறான்; |
| க்லுப்தா | ஏற்படுத்தப்பட்ட | | (ஆதலால்) |
| வராடிகா இவ | ஒரு பலகறை போல | த்வம் ஏவ | தேவரீரே |
| | | பாஹி | காத்தருளவேணும். |

* * * [படுநைக] பெரிய பெருமாளே! தேவரீர் நிரங்குசஸ்வதந்த்ர ராகையாலே அப்படிப்பட்ட ஸ்வாதந்திரியத்தினால் ஒரு சேதநனை நித்ய ஸம்ஸாரியாக்கவும் வல்லீர்,

சித்யஸம்ஸாரியாக்கவும் வல்லீர்; இது எப்படி போல வென்னில்; ஒரு பிரபுவானவன் தனது நாட்டில் நாணயங்கள் ஏற்பாடு செய்யுமளவில் ஒரு பலகறையை ஒரு காலத்தில் தானத்திலே வழங்கும்படி சிலகாலமும், மற்றொருகாலத்தில் அந்தப்பலகறை தன்னையே ஒரு பெரிய தானத்திலே வழங்கும்படியாகவும் வ்யவஸ்தை செய்தால் அவனைக் கேட்பாரில்லாமையாலே ஒரு பலகறைதானே ஒரு கால் காலணாவாகவும் மற்றொருகால் சிறந்த பொன்னாணய மாகவும் வழங்குதல் பெறுகின்றது. அதுபோலவே **स्वातन्त्र्यमैश्वरमपर्यनुयोज्यमाहु:** என்னப்பட்ட தேவரீரும் ஒரு சேதநனையே ஒருகால் ஸம்ஸாரி யென்று வழங்கப்படுமாறு வைத்தும், அவனையே முக்தன் என்று வழங்கப்படுமாறு வைத்தும் போநதால் கிலாரகரில்லாமையாலே அங்ஙனே செய்தருளா நின்றுமிருக்கிறீர். இப்படிப்பட்ட தேவரீர் அடியேன் திறத்திலே சிறிது தண் திறந்தருளவேணு மென்றாராயிற்று. பூர்வார்த்தத்திற்கு வேறுவகையாகவும் பொருள் கூறலாம். (88)

**ज्ञानक्रियाभजनसंपदकिञ्चनोऽहम् इच्छाधिकारशकनानुशयानभिज्ञः ।**
**रङ्गेश ! पूर्णवृजिनश्शरणं भवेति मौर्ख्याद्ब्रवीमि मनसा विषयाकुलेन ॥ ८९ ॥**

ஜ்ஞாநக்ரியாபஜநஸம்பதகிஞ்சநோஹம் இச்சாதிகாரசகநாநுசயாநபிஜ்ஞ:,
ரங்கேச! பூர்ணவ்ருஜிநச் சரணம் பவேதி மௌர்க்யாத் ப்ரவீமி மநஸா விஷயாகுலேந. 89

| | | | |
|---|---|---|---|
| ரங்கேச | ஸ்ரீரங்கநாதரே! | பூர்ணவ்ருஜிந: | நிரம்பிய பாவங்களை யுடையவனுயிருக்கிற |
| ஜ்ஞாநக்ரியா பஜந ஸம்பத் அகிஞ்சந: | ஜ்ஞானயோக கர்மயோக பக்தியோகங்களாகிற ஸம்பத்து இல்லாதவனும், | அஹம் | அடியேன் |
| இச்சா அதிகார சகந அநுசய அநபிஜ்ஞ: | முமுக்ஷுத்வ மென்ன ஆகிஞ்சந்யம் அநந்யகதித்வமாகிற அதிகார மென்ன, சக்தி யென்ன, அநுதாப மென்ன இவற்றை யறியாதவனும், | மௌர்க்யாத் | மூர்க்கத்தனத்தினல் |
| | | விஷய ஆகுலேந மநஸா | விஷயங்களில் கலங்கிய நெஞ்சோடே |
| | | சரணம் பவ இதி ப்ரவீமி | 'சரணமாகு' என்கிறேன். |

* * * [ஜ்ஞாநக்ரியா.] கீழ் "உபாதத்தே" என்னும் ச்லோகத்தில் *த்வாம் சரணமபஜம் * என்றாரே; அந்த சரணுக்தியையும் எம்பெருமான் ஒரு கைம்முதலாகத் திருவுள்ளம் பற்றுதபடிக்கு விண்ணப்பஞ் செய்கிறாரிதில். ஜ்ஞாநயோக கர்மயோக பக்தியோகங்களில் ஒன்றுமில்லாதவனடியேன், இச்சாமாத்ரத்தையே அதிகாரமாக வுடைத்தான ப்ரபத்தியைச் செய்யவும் சக்தியற்றவன். 'நமக்கு இவை யொன்றுமில்லையே!' என்று அநுசயிக்கவு மறியாதவன். அன்றியும் பாவங்களைக் குவிப்பச் செய்பவன்; நெஞ்சோ விஷய க்ராமங்களிலிருந்து நிவ்ருத்தமாக வில்லை; இப்படிப்பட்ட எனது வாக்கில் "சரணம் பவ" என்கிற வாசகம் வெளிவந்தால் இதற்கு ஒரு பொருளுண்டோ? உலகில் மூர்க்கர்களுடைய வாயில் எத்தனையோ நிரர்த்தகசப்தங்கள் வருகின்றனவன்றோ? அப்படியே பொருளற்ற வொரு வாக்யத்தை நானும் பிதற்றினேனென்று கொள்ளீர் என்றாராயிற்று.

இச்சாதிகார சகநாநுசயாநபிஜ்ஞ: என்பதற்கு இரண்டு வகையாகப் பெரியார் பொருள் கூறுவர். இச்சைவ அதிகாரோ யஸ்ய தத் - இச்சாதிகாரம்; ப்ரபதநமிதி யாவத். "கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்" என்றும் "போதுவீர் போதுமினோ" என்றும் சொல்லுகிறபடியே இச்சைக்கு மேற்பட மற்றொன்றை அதிகார ஸம்பத்தியாக வேண்டாததான ப்ரபத்தியிலே என்றபடி. அதிலுங்கூட சக்தியும் அநுதாபமுமற்றவன் என்பது ஒருவகை. இச்சாச, அதிகாரச்ச, சகநஞ்ச, அநுசயச்ச, என்றும் நான்கையும் சேர்த்து த்வந்த்வஸமாஸமாக்கி, இவை நான்கு மறியாதவன் என்பது மற்றொருவகை. இச்சையாவது முமுக்ஷுத்வம். அதிகாரமாவது சமதமாதிகள்

சகநமாவது அத்யவஸாய த்ருடத்வம். அநுசயமாவது அநுதாபம். இவை இன்னபடியிருக்குமென்றே தெரியாதெனக்கு என்கின்றார் அநபிஜ்ஞ: என்பதனால். ... (89)

त्वयि सति पुरुषार्थे मत्परे चाहमात्मक्षयकरकुहनार्थान् श्रद्दधद्रङ्गचन्द्र ! ।
जनमखिलमहंयुर्वञ्चयामि त्वदात्मप्रतिमभवदनन्यज्ञानिवद्देशिकस्सन् ॥ ९० ॥

த்வயி ஸதி புருஷார்த்தே மத்பரே சாஹமாத்மக்ஷயகரகுஹநார்த்தாந் ச்ரத்ததத் ரங்கசந்த்ர !
ஜநமகிலமஹம்யுர் வஞ்சயாமி த்வதாத்ம ப்ரதிமபவதநந்யஜ்ஞாநிவத் தேசிகஸ்ஸந்: 90

| | | | |
|---|---|---|---|
| ரங்கசந்த்ர ! | ஸ்ரீரங்கசந்திரனே !, | ச்ரத்ததத் | விரும்பினவனும் |
| புருஷார்த்தே | பரம புருஷார்த்த பூதரும் | அஹம்யு: | அஹங்காரியாயுமிருக்கிறேன் |
| மத்பரே ச | என்திறத்தில் ஊற்றமுடையருமான | த்வத் ஆத்ம ப்ரதிம | தேவரீருடைய ஆத்மாவைப் போன்று |
| த்வயி | தேவரீர் | பவத் அநந்ய | தேவரீரில் வேறுபடாத |
| ஸதி | எழுந்தருளியிருக்க, | ஜ்ஞாநிவத் | ஞானிபோல் |
| அஹம் | நான் | தேசிக: ஸந் | குருவாக இருந்து |
| ஆத்மக்ஷயகர குஹநார்த்தாந் | ஆத்மநாசத்தை விளைக்கின்ற போலிப் பொருள்களை | அகிலம் ஜநம் | எல்லோரையும் |
| | | வஞ்சயாமி | வஞ்சித்து வருகிறேன். |

* * * [த்வயி ஸதி] சரணவரணோக்தியினாலே பண்டிதபாமர விபாகமற அனைவரையும் நான் வஞ்சிப்பவனாயிரா நின்றேனென்று நைச்யாநுஸந்தானத்தில் தலைநிற்கிறார். [த்வயி புருஷார்த்தே ஸதி, மத்பரே ச ஸதி] தேவரீரே ப்ராப்யராயும் ப்ராபகராயுமிருக்கச் செய்தேயும் என்றபடி. புருஷார்த்த சப்தம் பலவாசியாகையாலே ப்ராப்யார்த்தகம். மத்பரே என்பதற்கு 'என்னைப் பெறுதலில் ஊற்றமுடையீர்' என்று பொருளாதலால் இது உபாயத்வே பர்யவஸிதம். [ஆத்மக்ஷயகர குஹநார்த்தாந் ச்ரத்ததத்] ஸ்வரூபநாசத்தை விளைக்கவல்ல மாயப்பொருள்களான சப்தாதிவிஷயங்களிலே மண்டிக்கிடக்கின்றவனும். [அஹம்யு:] * அநாத்மந்யாத்மபுத்தியை உடையவனுயிருக்கின்ற வடியேன். [த்வதாத்ம ப்ரதிம பவதநந்யஜ்ஞாநிவத் தேசிகஸ்ஸந் அகிலம் ஜநம் வஞ்சயாமி.] * ज्ञानी त्वात्मैव मे मतम् * என்று தேவரீர் தேர்த்தட்டில் நின்று அருளிச் செய்தபடியே தேவரீர்க்கு ஆத்மா போன்றவனையும், * अनन्याश्चिन्तयन्तो माम् * என்கிறபடியே அநந்யனையுமிருக்கிற ஜ்ஞாநிபோலே அஹங்கரித்து ஆசார்ய பதம் செலுத்தாநின்று கொண்டு, பண்டிதர் பாமரர் என்கிற வாசியற அனைவரையும் வஞ்சித்துக்கொண்டு போதுபோக்கா நின்றேன்.

" त्वदात्मप्रतिमभवदनन्य " என்ற விடத்தில் विशेषणोभयपदकर्मधारयः । (90)

अतिक्रामन्नाज्ञां तव विधिनिषेधेषु भवतेऽप्यपि द्रुह्यन् वाग्धीकृतिभिरपि भक्ताय सततम् ।
अजानन् जानन्वा भवदसहनीयागसि रतः सहिष्णुत्वाद्रङ्गप्रवण ! तव माभूवमपरः ॥ ९१ ॥

அதிக்ராமந் ஆஜ்ஞாம் தவ விதிநிஷேதேஷு பவதேபி
அபித்ருஹ்யந் வாக்தீக்ருதிபிரபி பக்தாய ஸததம்,
அஜாநந் ஜாநந் வா பவதஸஹநீயாகஸி ரத:
ஸஹிஷ்ணுத்வாத் ரங்கப்ரவண ! தவ மா பூவமபர: 91

| | | | |
|---|---|---|---|
| ரங்கப்ரவண | ஸ்ரீரங்க க்ஷேத்ரத்தில் ஊற்றமுடைய பெருமானே! | அபிதுர்ஹ்யந் | அபசாரப்படுபவனும் |
| ஸததம் | எப்போதும் | ஜ்ஞாத அஜ்ஞாதவாந் | தெரிந்தோ தெரியாமலோ |
| தவ | தேவரீருடைய | பவத் அஸஹ்ய ஆகஸி ரத: | தேவரீருக்கும் அஸஹ்யமான அபசாரத்திலே ஆழ்ந்தனாயிருக்கிற அடியேன் |
| விதி நிஷேத ரூபாம் ஆஜ்ஞாம் | விதி நிஷேத ரூபமான கட்டளையை | ஸஹிஷ்ணுத்வாத் | தேவரீர் ஸர்வஸஹிஷ்ணுவாதலால் |
| அதிக்ராமந் | மீறி நடப்பவனும் | தவ | தேவரீருக்கு |
| வாக்திருஷ்டிபி: அபி | வாக்கினாலும் நெஞ்சினாலும் செய்கையினாலும் | அபர: மாபூவம் | அதுக்காளாகாதொழியக் கடவேனல்லேன். |
| பவதே | தேவரீர் விஷயத்திலும் | | |
| பக்தாய அபி | பாகவதர் விஷயத்திலும் | | |

* * * [அதிக்ராமந்.] பகவதபாசாரம், பாகவதாபசாரம், அஸஹ்யாபசாரம் என்ற மூன்றுவித அபசாரங்களிலும் தலைநிற்குமடியேனை தேவரீருடைய க்ஷமாகுணத்திற்கு இலக்காக்கி யருளவேணுமென்கிறார். மனமொழி மெய்களாகிற மூன்று கரணங்களினாலும் தெரிந்தும் தெரியாமலும் பலபல குற்றங்கள் செய்தேன். * श्रुतिः स्मृतिर्ममैवाज्ञा यस्तामुल्लङ्घ्य वर्तते । आज्ञाच्छेदी मम द्रोही मद्भक्तोऽपि न वैष्णवः ॥ * என்று தேவரீரே அருளிச்செய்தபடி தேவரீருடைய ஆஜ்ஞாரூபமாய், इदं कुरु इदं मा कार्षीः என்று விதிநிஷேதாத்மகமாயிருக்கின்ற சாஸ்த்ரங்களை மிகவும் மீறி நடந்ததனால் பகவதபசாரியாயும், பாகவத விஷயங்களில் தீரக்கழிய அபசாரப்பட்டவனாயும், மற்றும் அஸஹ்யாபசாரங்களிலும் குறையற்றவனாயு மிருக்கின்றவடியேன் தேவரீருடைய ஸர்வ ஸஹிஷ்ணுத்வத்தை நினைத்தவாறே நிர்ப்பயனாய் வர்த்திக்கலாம்படி யிராநின்றது; ஆகவே எப்போதும் அடியேன் தேவரீருடைய பர (भर)மாகவே யிருக்கக்கடவேன் என்றாராயிற்று.

தவ அபர: மாபூவம் என்றது தவ பர ஏவ பவேயம் என்றபடி. பகவதபசாராதிகளின் விவரணம் ஸ்ரீவசந பூஷணத்தில் காணத்தக்கது. ... ... (91)

प्रकुपितभुजगफणानामिव विषयाणामहं छायाम् ।
सति तव भुजसुरविटपिप्रच्छाये रङ्गजीवित ! भजामि ॥ ९२ ॥

ப்ரகுபிதபுஜகபணாநாமிவ விஷயாணாமஹம் சாயாம்,
ஸதி தவ புஜஸுரவிடபிப்ரச்சாயே ரங்கஜீவித ! பஜாமி. 92

| | | | |
|---|---|---|---|
| ரங்கஜீவித | ஸ்ரீரங்க விமானத்தை உயிராகவுடைய பெருமானே! | ப்ரகுபித புஜக பணாநாம் இவ விஷயாணாம் | சீறின பாம்பின் படம் போன்ற துர்விஷயங்களினுடைய |
| தவ | தேவரீருடைய | | |
| புஜ | திருத்தோள்களாகிற | | |
| ஸுரவிடபி | கல்ப வ்ருக்ஷத்தினுடைய | சாயாம் | நிழலை |
| ப்ரச்சாயே ஸதி | நிழற்பாங்கு இருக்கும்போது | அஹம் பஜாமி | நான் அடைகிறேன். |

* * * [ப்ரகுபிதேத்யாதி.] * निवासवृक्षस्साधूनाम् * என்றும் * वासुदेवतरुच्छाया * என்றும் * बाहुच्छायामवष्टब्धो यस्य लोको महात्मनः * என்றும் சொல்லுகிறபடியே உலகுக்கெல்லாம் நிழல் கொடுத்தருளும் தேவரீர் இருக்க, ஆடுகிற பாம்பின் நிழலிலே யொதுங்கி விடாய்கெட நினைக்குமாபோல விஷயாந்தரங்களின் நிழலிலே பாவியேன் ஒதுங்கிக் கிடக்கிறேனே! என்று இன்னுதாகிறார். "புஜஸுரவிடபி" என்றவிடத்து, "கற்பகக்காவன நற்பல தோளற்கு" என்ற ஆழ்வார்பாசுரம் நினைக்கவுரியது. (92)

त्वत्सर्वशक्तेरधिकास्मदादेः कीटस्य शक्तिर्भत रङ्गबन्धो।

यत्त्वत्कृपामप्यति कोशकारन्यायादसौ नश्यति जीवनाशम् ॥ ९३ ॥

த்வத் ஸர்வசக்தேரதிகாஸ்மதாதே: கீடஸ்ய சக்திர்பத ! ரங்கபந்தோ !

யத் த்வத்க்ருபாமப்யதி கோசகாரந்யாதஸௌ நச்யதி ஜீவநாசம். 93

| | | | |
|---|---|---|---|
| ரங்கபந்தோ ! | ஸ்ரீரங்கநாதரே ! | அஸௌ | இந்தப் புழுவானது |
| அஸ்மதாதே: கீடஸ்ய சக்தி: | என்போன்ற புழுவினுடைய சக்தியானது | த்வத் க்ருபாம் அபி அதி | தேரீருடைய திருவருளையும் மீறி |
| ஸர்வசக்தே: த்வத் | ஸர்வ சக்தியுக்தரான தேவரீரைக் காட்டிலும் | கோசகாரந்யாயாத் | ஒரு பூச்சியின் செயல்போலே |
| அதிகா | மிஞ்சியது; | ஜீவநாசம் நச்யதி | தன்னுடைவே மடிகின்றது; |
| யத் | ஏனென்றால், | பத ! | அந்தோ !, |

* * * [த்வத்ஸர்வசக்தே:] பெரிய பெருமாளே ! * पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते * என்றபடி தேவரீருடைய விலக்ஷண சக்தியோகம் ப்ரபல ப்ரமாண ஸித்தமா யிருந்தாலும் புழுப்போன்ற எம்போலியர்களின் சக்தியிற்காட்டிலும் தேவரீருடைய சக்தி மிகச் சிறிதென்றும் எமது சக்தியே வலிதென்றும் கருதவேண்டியிருக்கிறது ; ஏனெனில் ; இருகரையுமழியப் பெருகப்புக்க தேவரீருடைய கருணை வெள்ளத்தையும் மேலே பாயவொட்டாமல் விலக்கித் தள்ளுகின்றோமன்றோ அடியோம். எம்மைக்காட்டிலும் தேவரீர் சக்தராயிருந்தீராகில் கருணை வெள்ளத்தைத் தடையறப் பாய்ச்சி யிருக்கலாமே.

[கோசகாரந்யாயாத் அஸௌ நச்யதி ஜீவநாசம்.] கோசகார மென்பது ஒருக்ருமி விசேஷம் ; அது தன் வாயிலுண்டான நூல்களினால் தனக்குக் கூடு கட்டிக்கொண்டு வழியையும் அடைத்து வெளிப் புறப்படமாட்டாமல் உள்ளே கிடந்து நசிக்குமாம். அதுபோலே நான் நசிக்கிறேனென்று ஸ்வநாச விஷயத்தில் அதனை த்ருஷ்டாந்தீகரித்தபடி. ஸ்வயம்க்ருதாநர்த்த மென்றவாறு. जीवनाशं नश्यति—जीवन्नेव नश्यतीत्यर्थः। अति—अतिक्रम्येति यावत् । [அஸௌ]—வெறுப்பினாலே தம்மைப் பரோக்ஷ நிர்த்தேசம் பண்ணுகிறபடி. ... ... ... ... (93)

श्रीरङ्गेश ! त्वद्गुणानामिवास्मद्दोषाणां कः पारदृश्वा यतोऽहम् ।

ओघे मोघोदन्यवत्त्वद्गुणानां तृष्णापूरं वर्षतां नास्मि पात्रम् ॥ ९४ ॥

ஸ்ரீரங்கேச ! த்வத்குணாநாமிவாஸ்மத்தோஷாணாம் க: பாரத்ருச்வா யதோஹம்,

ஓகே மோகோதந்யவத் த்வத் குணாநாம் த்ருஷ்ணா பூரம் வர்ஷதாம் நாஸ்மி பாத்ரம். 94

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கேச | ஸ்ரீரங்கநாதரே ! | ஓகே மோகோதந்யவத் | பெருவெள்ளத்தில் பிரயோஜனமற்ற தாஹத்தோடு நீர்ப் பருகமாட்டாதது போலே, |
| த்வத்குணாநாம் இவ | தேவரீருடையகல்யாண குணங்களுக்குப்போல | த்ருஷ்ணா பூரம் வர்ஷதாம் | ஆசை நீர வர்ஷிக்கின்ற |
| அஸ்மத் தோஷாணாம் | எனது குற்றங்களுக்கும் | த்வத்குணாநாம் | தேவரீரது திருக்குணங்களுக்கு |
| பாரத்ருச்வா | கரைகண்டவர் | பாத்ரம் நாஸ்மி | பாத்திரமாக ஆகின்றேனில்லையே.! |
| க: | யாவர் ? | | |
| யத: | ஏனென்றால்; | | |

* * * [ஸ்ரீரங்கேச] பெரிய பெருமாளே ! தேவரீருடைய திருக்கல்யாண குணங்கள் எப்படி எண்ணிறந்தவையோ, அப்படி அடியேனுடைய தோஷங்களும் எண்ணிறந்தவையே ; ஆனது பற்றியே தேவரீர் திருக்குணங்களை எமது ஆசை தீர தாராளமாக வர்ஷித்தாலும் அதற்குப் பாத்திரமாக முடியாமலிருக்கிறேன்.

[ஓகே மோகோதந்யவத்] ப்ரஹ்மரக்ஷஸ்ஸு முதலானவை பெருவெள்ளத்தில் தமது தாஹசாந்தியைப் பண்ணிக் கொள்ளமாட்டா வென்பது ப்ரஸித்தம். ஆகவே, பெருவெள்ளமும் சிலவற்றுக்கு அப்ரயோஜநமாகிருப்போலே தேவரீருடைய கல்யாண குண வர்ஷமும் அடியேனுக்கு அப்ரயோஜநமாய்விடுகிறதென்று காட்டினபடி. உதந்யா என்று தாஹத்திற்குப் பெயர். मोघा उदन्या यस्येति बहुव्रीहिः। तृष्णां पूरयित्वा तृष्णापूरम्; यावन्मनोरथमित्यर्थः ॥ (94)

त्वं चेन्मनुष्यादिषु जायमानस्तत्कर्मपाकं कृपयोपभुङ्क्षे ।
श्रीरङ्गशायिन् कुशलेतराभ्यां भूयोऽभिभूयेमहि कस्य हेतोः ॥ ९५ ॥

த்வஞ்சேந்மநுஷ்யாதிஷு ஜாயமாந: தத்கர்மபாகம் க்ருபயோபபுங்க்ஷே,
ஸ்ரீரங்கசாயிந்! குசலேதராப்யாம் பூயோபிபூயேமஹி கஸ்ய ஹேதோ:. 95

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கசாயிந் | திருவரங்கத்தில் பள்ளிகொண்டருளும் பெருமானே! | க்ருபயா | க்ருபையடியாக |
| த்வம் | தேவரீர் | உபபுங்க்ஷே சேத் | அநுபவியா நிற்க, |
| மநுஷ்யஆதிஷு | மநுஷ்யாதி யோநிகளில் | (வயம்) | நாங்கள் |
| ஜாயமாந: | அவதரியா நின்றவராய் | குசல இதராப்யாம் | இன்பதுன்பங்களினால் |
| தத் கர்மபாகம் | அப்பிறவிக்குரிய கர்மபலி பாகத்தை | பூய: | பலகாலும் |
| | | கஸ்ய ஹேதோ: | எதற்காக |
| | | அபிபூயேமஹி | தொந்தரவுபடக்கடவோம்? |

* * * [த்வம் சேத்] "நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்காய்" என்கிறபடியே தேவரீர் இந்நிலவுலகில் மநுஷ்யாதி யோநிகளில் ஸ்ரீராமக்ருஷ்ணாதி ரூபேண அவதரித்து, பிறவிக்குரிய புண்யபாபரூப கர்மபலனாகிய ஸுகதுக்கங்களை தேவரீர் அநுபவித்திரான பின்பு நாங்களும் பிறந்து அந்த ஸுகதுக்கங்களை அநுபவிக்கும்படியானது என்னோவென்கிறார். ராமாவதார காலத்தில் நாங்களும் ஜநித்திருந்தோமாகில "அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றி" என்கிறபடியே வைகுந்தத்தில் ஏற்றப்பட்ட சராசரங்களில் யாமும் அந்தர்ப்பவித்திருப்போமேயாகில் இப்போது பிறந்து படவேண்டியிராதே எமக்கு என்று குறிப்பிடுகிறபடி.

உபபுங்க்ஷே சேத் என்கிற ப்ரயோகத்தைப் பார்த்தால் பவிஷ்யதர்த்த நிர்தேசம் (भविष्यदर्थनिर्देश) போல் தோற்றும்; பூதார்த்தநிர்தேச (भूतार्थनिर्देश) மே யென்று தெளிக. அபிபூயேமஹி என்று லிங்ருபமாக இருப்பதனால் அங்கும் பவிஷ்யதர்த்தநிர்தேசம் (भविष्यदर्थनिर्देश) போல் தோன்றும்; அந்தத் தோற்றமும் வேண்டா.

कुशलेतराभ्याम्—कुशलतदितराभ्यामिति यावत् ।

'நீரும் பிறந்து நாங்களும் பிறக்கவேணுமோ?' என்பது இந்த ச்லோகத்தின் பரம தாத்பரியம். ... ... ... (95)

क्षमा सापराधेऽनुतापिन्युपेया कथं सापराधेऽपि दृप्ते मयि स्यात् ।
तथाऽप्यत्र रङ्गाधिनाथानुतापव्यपायं क्षमेतातिवेला क्षमा ते ॥ ९६ ॥

க்ஷமா ஸாபராதேநுதாபிந்யுபேயா கதம் ஸாபராதேபி த்ருப்தே மயி ஸ்யாத்,
ததாப்யத்ர ரங்காதிநாதாநுதாபவ்யபாயம் க்ஷமேதாதிவேலா க்ஷமா தே. 96

| | | | |
|---|---|---|---|
| ரங்கநிர்த | ஸ்ரீரங்கநாதரே! | கதம் ஸ்யாத் | எப்படியுண்டாகும்? |
| க்ஷமா | பொறுமையானது | ததபி | ஆயினும் |
| ஸாபராதே அநுதாபிநி | அபராதியாயிருந்தாலும் அநுதாபமுள்ளவனிடத்தில் | அதிவேலா | கங்குகரையற்றதான |
| உபேயா | அணுகக்கூடியது; (அப்படியிருக்க) | தே க்ஷமா | தேவரீருடைய பொறுமையானது |
| ஸாபராதே அபி த்ருப்தே மயி | அபராதியாயிருந்தும் (கழிவிரக்கமின்றிக்கே) கொழுத்திருக்கின்ற என் விஷயத்தில் (அந்தப் பொறுமையானது) | அத்ர | இவ்வடியேன் திறத்தில் |
| | | அநுதாபவ்யபாயம் | அநுதாபமில்லாமையையும் |
| | | க்ஷமேத | க்ஷமிக்கும். |

* * * [க்ஷமா ஸாபராதே] எம்பெருமானுக்கு க்ஷமாகுணமென்பது இருந்தாலும் 'எல்லை கடந்த பாவங்களைச் செய்துவிட்டோமே!' என்கிற அநுதாபமுடையவர்கள் பக்கலில் அந்த க்ஷமாகுணம் ப்ரஸரிக்குமேயல்லது அநுதாபமின்றிக்கே யிருக்கும் த்ருப்த (ஜந்)ர் விஷயத்தில் ப்ரஸரிக்க ப்ரஸக்தியில்லை யென்பது நிர்விவாதமாதலால் தாம் எண்ணிறந்த அபராதங்களைச் செய்துவிட்டதாகவும், அதற்காக அநுதாப லேசமும் இல்லாதிருப்பதாகவும் சொல்லிக்கொண்டு, "இப்படிப்பட்ட என் விஷயத்தில் தேவரீருடைய க்ஷமாகுணமும் ஏறிப்பாய அவகாசமில்லையாயிற்றே" என்கிற நிர்வேதத்தைப் பூர்வார்த்தத்தில் வெளியிட்டு, உத்தரார்த்தத்தில் தாமே ஒருவாறு ஸமாஹிதராகிறார். அதாவது—க்ஷமைக்கு இன்னதுதான் விஷயம் என்கிற நியதியில்லை: அபராதங்களைப் பொறுப்பது போலவே, அநுதாபமில்லாமையாகிற குற்றத்தையும் பொறுக்க சக்தியுள்ளதாதலால் 'அநுதாபம் நமக்கு உண்டாகவில்லையே!' என்கிற கவலையும் எனக்கில்லை, எல்லைகடந்த உமது க்ஷமாகுணம் என்மீது ப்ரஸரித்தே தீரும்—என்றாராயிற்று. (96)

बलिभुजि शिशुपाले तादृगागस्करे वा गुणलवसहवासात्त्वत्क्षमा सङ्कुचन्ती ।
मयि गुणपरमाणूदन्तचिन्तानभिज्ञे विहरतु वरदासौ सर्वदा सार्वभौमी ॥ ९७ ॥

பலிபுஜி சிசுபாலே தாத்ருகாகஸ்கரே வா குணலவஸஹவாஸாத் த்வத்க்ஷமா ஸங்குசந்தீ,
மயி குணபரமாணூதந்தசிந்தாநபிஜ்ஞே விஹரது வரதாஸௌ ஸர்வதா ஸார்வபௌமீ. 97

| | | | |
|---|---|---|---|
| வரத! | வரந்தரும் பெருமானே! | த்வத் க்ஷமா | தேரீருடைய பொறுமையானது |
| தாத்ருக் ஆகஸ்கரே | வாசாமகோசரமான அபராதங்களைச் செய்த | குணபரமாணு உதந்த சிந்தா அநபிஜ்ஞே | ஸத்குண லவ லேச ப்ரஸக்தியுமற்ற |
| பலிபுஜி | காகாஸுரனிடத்திலும் | | |
| சிசுபாலே வா | சிசுபாலனிடத்திலும் | | |
| குணலவஸஹவாஸாத் | ஸ்வல்ப குணமும்கூட இருந்ததனால் | மயி | அடியேன் திறத்தில் |
| ஸங்குசந்தீ | ஸங்கோசமுடையதான | ஸர்வதா | எப்போதும் |
| அஸௌ | இந்த | ஸார்வபௌமீ ஸதீ | செங்கோல்செலுத்திக்கொண்டு |
| | | விஹரது | விளையாடட்டும். |

* * * [பலிபுஜி] குணமென்பது அடியோடு இல்லாமல் தோஷமே நிரம்பியுள்ள விடத்தில் விநியோகிக்கப்படுகிற க்ஷமாகுணம் பிரகாசிக்குமே யல்லது குண தோஷங்கள் கலசியுள்ள விடத்திலே காட்டும் க்ஷமாகுணம் நிறம் பெறமாட்டாது; நீரக்கழிய அபராதம் பண்ணினவர்களென்று ப்ரஸித்தர்களில் காகாஸுரன், சிசுபாலன் என்ற இரண்டு வ்யக்திகளை யெடுத்துக்கொண்டு, அவர்களிடத்தில் தேவரீருடைய க்ஷமாகுணம் நிஸ்ஸங்கோசமாக ப்ரவர்த்தித்ததா? என்று ஆராயுமளவில், காகாஸுரன் * पितृन् समेत्य संपरिक्रम्य तमेव शरणं गतः * என்கிற படியே எங்கும் புகலற்றுத் திருவடிவாரத்திலே வந்துவிழுந்தபடியாலும், * கேட்பார் செவிசுடுகீழ்மை வசவுகளை வையும் சேட்பால்

பழம் பகைவனான சிசுபாலன் வைகிறபோது பேர் சொல்லி வைய வேண்டியிருக்கை யாலே அதற்காகவாவது அடிக்கடி திருநாமங்களை உச்சரித்தபடியாலும் இவ்விருவர் திறத்திலும் இவ்விருவகையான குணலேசம் கிடக்கையாலே க்ஷமாகுணத்திற்கு இங்கு தாராளப்ரவ்ருத்தி இல்லையாயிற்று; அப்படிப்பட்ட குணலேசமும் தேடிப்பார்த்தாலும் அடியேன் பக்கலில் கிடைப்பதரிது; ஆகவே தேவரீருடைய க்ஷமாகுணம் அடியேன் திறத்தில்தான் நன்கு வீறுபெறும் என்றுராயிற்று. இதனால், காக சிசுபாலர்களிற் காட்டிலும் தாம் மிகக் கொடியவர் என்று நைச்யாநுஸந்தான காஷ்டையில் நின்றபடி. (97)

दया परव्यसनहरा भवव्यथा सुखायते मम तदहं दयातिग: ,

तथाऽप्यसौ सुखयति दु:खमित्यतो दयस्व मां गुणमय रङ्गमन्दिर ॥ ९८ ॥

தயா பரவ்யஸநஹரா பவவ்யதா ஸுகாயதே மம ததஹம் தயாதிக:,

ததாப்யஸௌ ஸுகயதி து:க்கமித்யதோ தயஸ்வ மாம் குணமய! ரங்கமந்திர. 98

| | | | |
|---|---|---|---|
| குணமய | கல்யாண குணங்களை வடிவெடுத்த | தத் | ஆதலால் |
| ரங்கமந்திர | ஸ்ரீரங்கநாதரே! | அஹம் | அடியேன் |
| தயா | (தேவரீருடைய) தயையானது | தயா அதிக: | தயைக்கு இலக்காகத் தகாதவனாவேன்; |
| பரவ்யஸநஹரா | பிறருடைய துன்பங்களைப் போக்குந்தன்மையது; | ததாபி | ஆயினும் |
| மம | எனக்கோவென்றால் | அஸௌ | இந்தப் பையல் |
| பவவ்யதா | ஸாம்ஸாரிக துக்கமானது | து:க்கம் | துன்பத்தை |
| ஸுகாயதே | (துன்பமாகவல்லாமல்) இன்பமாகவேயுளது; | ஸுகயதி | இன்பமாக நினைக்கிறான் |
| | | இதி அத: | என்று திருவுள்ளம்பற்றி |
| | | மாம் தயஸ்வ | என்மீது இரங்கியருளவேணும். |

*** [தயாபரேத்யாதி] பெரிய பெருமாளுடைய தயா குணமும் தம்மீது ப்ரஸரிக்க அவகாசமில்லை யென்று பூர்வார்த்தத்திலருளிச்செய்து உத்தரார்த்தத்தால் அதற்கு அவகாசமுண்டாக்கிக் கொள்ளவேணு மென்கிறார். உலகில் தயையானது பிறர்படும் துயரத்தைப் போக்கும்; அடியேன் துயருற்றிருந்தேனாகில் தேவரீருடைய தயைக்கு அடியேன் விஷயமாகலாம்; உண்மையில் அடியேன ஸாம்ஸாரிகதுக்கங்கள் பலவற்றையும் அடையாநின்றேனாயினும் அந்த துக்கங்களை யெல்லாம் ஸுகமாகவே அடியேன் பாவிக்கின்றமையால் துக்காபநோதநப்ரஸக்தி யில்லாமையால் தயைக்கு அடியேன் இலக்காவதற்கு வழியில்லை; ஆயினும், அஜ்ஞனாகிய அடியேன் துக்கத்தை ஸுகமாக ப்ரமித்து விட்டாலும் ஸர்வஜ்ஞரான தேவரீர் "இப்பையல் துக்கத்தையே ஸுகமாக ப்ரமித்துவிட்டான்; உண்மையில் இவன் துக்காநுபவமே பண்ணுகின்றான்" என்று தெளியவல்லீராதலால் உள்ளபடியே துக்கமான வதனைப் பரிஹரிக்க உமது தயாகுணம் அவசியம் ப்ரஸரிக்க வேணும் என்றுராயிற்று. .... .... (98)

गर्भजन्मजरामृतिक्लेशकर्मषडूर्मिभि: ।

श्वेव देववषट्कृतं त्वां श्रियोऽर्हमकामये ॥ ९९ ॥

கர்ப்பஜந்மஜராம்ருதிக்லேசகர்மஷடூர்மிபி:,

ச்வேவ தேவவஷட்க்ருதம் த்வாம் ச்ரியோர்ஹமகாமயே. 99

| | | | |
|---|---|---|---|
| | (ஸ்ரீரங்கநாதரே) | தேவ வஷட்க்ருதம் ச்வா இவ | தேவர்களுக்காக வகுக்கப்பட்ட ஹவிஸ்ஸை நாய் விரும்புவதுபோல |
| கர்ப்ப ஜந்ம ஜராம்ருதி க்லேச கர்மஷட் ஊர்மிபி: | கர்ப்பவாஸம் முதலாக சேருகின்ற ஷட்பாவ விகாரங்களாகிற அலைகளில் உழல்கின்ற அடியேன், | ச்ரிய: அர்ஹம் த்வாம் அகாமயே | பிராட்டிக்கே உரியரான தேவரீரை விரும்பினேன். |

* * * [கர்ப்பஜந்மேத்யாதி] ஆளவந்தார் *धिगशुचिमविनीतम्* என்கிற ச்லோகத்திலே அயோக்யதாநுஸந்தாநம் பண்ணினதுபோல இதில் தாம் பண்ணுகிறார். தேவர்களுக்கு உரிய புரோடாசத்தை நாய் விரும்புவதுபோல, பெரிய பிராட்டியார்க்கு நித்யாநுபாவ்யரான தேவரீரை மஹா நீசனான அடியேன் ஆசைப்பட்டேனே! இது என்ன ஸாஹஸம்! என்று நோகிறார்.

ஸம்ஸார ஸமுத்ரமானது ஊர்மி ஷட்க விசிஷ்டமென்று நூல்கள் கூறும். தேசிகனும் வரதராஜ பஞ்சாசத்தில் "तं वीक्ष्य सेतुमधुनाऽपि शरीरवन्तः सर्वे षडूर्मिबहुलं जलधिं तरन्ति" என்றார். கர்ப்பஜந்மஜராம்ருதி [गर्भजन्मजरामृति] கள் ப்ரஸித்தமானவை. அவித்யாஸ்மிதாராகத்வேஷாபிநிவேச [अविद्यास्मितारागद्वेषाभिनिवेश]ங்கள் க்லேசங்களெனப்படும். [वषट्कृतम] वषट्कारमन्त्रेण दत्तम्। என்றபடி. ச்ரியோர்ஹ மென்றவிடத்தில் * राघवोऽर्हति वैदेहीं तं चेयमसितेक्षणा * என்ற ஸ்ரீராமாயண ச்லோகம் அநுஸந்தேயம். (99)

अनुकृत्य पूर्वपुंसो रङ्गनिधे विनयडम्भतोऽमुष्मात्।
शुन इव मम वरमृद्धेरुपभोगस्त्वद्वितीर्णायाः ॥ १०० ॥

அநுக்ருத்ய பூர்வபும்ஸோ ரங்கநிதே! விநயடம்பதோமுஷ்மாத்,
சுந இவ மம வரம் ருத்தேருபபோகஸ் த்வத்விதீர்ணயா:. 100

| | | | |
|---|---|---|---|
| ரங்கநிதே | திருவரங்கச் செல்வரே! | சுந: இவ மம | நாய்போன்ற அடியேனுக்கு |
| பூர்வபும்ஸ: | முன்னோர்களை | த்வத் விதீர்ணயா: ருத்தே; உபபோக: | தேவரீரால் கொடுக்கப்பட்டிருக்கிற ஸம்ருத்தியை அநுபவிப்பது |
| அநுக்ருத்ய | அநுகரித்து (செய்யப்படுகின்ற) | | |
| அமுஷ்மாத் | இந்த | | |
| விநயடம்பத: | கள்ளக் குழைச்சலைவிட, | வரம் | நன்று. |

* * * [அநுக்ருத்ய.] கீழ் ச்லோகத்திற் பண்ணின நைச்யாநுஸந்தானமும் முன்னோர்களான ஆழ்வார்களும் ஆசாரியர்களும் செய்தருளியிருக்கின்ற நைச்யாநுஸந்தான ப்ரக்ரியைகளை அப்படியே அநுசரித்துப் பேசின தத்தனை போக்கி உள்கனிந்து இயற்கையாகப் பேசிற்றன்று; இப்படி பரோக்திவிடம்பநப்ரணாளியிலே டம்போக்திகளைப் பேசிக் கள்ளக் குழைச்சல் போடுவதைக் காட்டிலும், நாயினேனுக்கு தேவரீர் தந்தருளியுள்ள ஐஹிக ஸம்ருத்தியை யநுபவிப்பதே அமையும் என்கிறார். * நலமந்தமில்லதோர் நாட்டிலே அடியேனைக்கொண்டு சேர்க்கவேணுமென்று நான் பிரார்த்திப்பதானது ஹாஸ்யாஸ்பதமான விகடமான்று; ஏறக்னவே ஆழ்வார்களும் ஆசார்யர்களும் செய்தருளியிருக்கிற ப்ரார்த்தனைகளை அடியொற்றி அநுகாரரீதியிலே பிரார்த்திக்கிற தத்தனை; அந்தோ! இப்படி நான் ஏதுக்குக் கள்ளத்தனமான பேச்சுப் பேசவேண்டும்! உள்ளபடியே ஸாம்ஸாரிகபோகங்களையே உண்டு களித்துக் கிடப்பது நன்று என்று ஆத்ம கர்ஹை பண்ணிக்கொள்ளுகிறபடி.

அநுக்ருத்ய என்கிற ல்யபந்தம் ஒரு க்ரியையில் அந்வயித்துத் தீரவேண்டியதாதலால் க்ரியமாணாத் என்கிற ஒரு பதம் அத்யாஹார்யம். (100)

सकृत्प्रपन्नाय तवाहमस्मीत्यायाचते चाभयदीक्षमाणम्।
त्वामप्यपास्याहमहंभवामि रङ्गेश विस्रम्भविवेकरेकात् ॥ १०१ ॥

ஸக்ருத் ப்ரபந்நாய தவாஹமஸ்மீத்யாயாசதே சாபயதீக்ஷமாணம்,
த்வாமப்யபாஸ்யாஹமஹம்பவாமி ரங்கேச! விஸ்ரம்பவிவேகரேகாத். 101

| | | | |
|---|---|---|---|
| ரங்கேச | ஸ்ரீரங்கநாதரே! | த்வாம் அபி | தேவரீரையும் |
| ஸக்ருத் ப்ரபத்ஜாய | ஒருகால் சரணமடைந்தவன் பொருட்டும் | அபாஸ்ய | விட்டுவிட்டு |
| அஹம் தவ அஸ்மி இதி ஆயாசதே ச | 'அடியேன் உனக்கு உரியேனாக வேணும்' என்று கோருகிறவன் பொருட்டும் | விஸ்ரம்பவிஹீநசேதா: | நம்பிக்கையும் நல்லறிவு மில்லாமையினாலே |
| | | அஹம் | அடியேன் |
| அபயதீக்ஷமாணம் | அபயமளிப்பதில் தீக்ஷை கொண்டிருக்கின்ற | அஹம்பவாமி | அஹம்பாவத்தை யடைந்திருக்கின்றேன். |

* * * [ஸக்ருத்ப்ரபந்நாய.] கடற்கரையிலே விபீஷணாழ்வானை விஷயமாகக் கொண்டு அருளிச்செய்த * सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते। अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद्व्रतं मम ॥* என்கிற சரமச்லோகத்தின் அர்த்தத்தை இதில் பூர்வார்த்தத்தில் அமைத்துள்ளார். அந்த ச்லோகத்திற் கூறியபடி தேவரீர் அபயப்ரதாநதீக்ஷிதராயிருக்கச் செய்தேயும், தேவரீரையும் விலக்கி ஸ்வாதந்திரியமடித்துத் திரியாநின்றேன் — தேவரீருடைய எல்லையிலே புகமாட்டாதே இடக்கின்றேன் விச்வாஸஜ்ஞான மில்லாமையினாலே என்கிறார். ... ... ... ... (101)

तव भरोऽहमकारिषि धार्मिकैश्शरणमित्यपि वाचमुदैरिरम्।

इति ससाक्षिकयन्निदमद्य मां कुरु भरं तव रङ्गधुरंधर ॥ १०२ ॥

தவ பரோஹமகாரிஷி தார்மிகை: சரணமித்யபி வாசமுதைரிரம்,

இதி ஸஸாக்ஷிகயந்நிதமத்ய மாம் குரு பரம் தவ ரங்கதுரந்தர. 102

| | | | |
|---|---|---|---|
| ரங்கதுரந்தர | ஸ்ரீரங்கநாதரே! | வாசம் அபி | சொல்லையும் |
| அஹம் | அடியேன் | உதைரிரம் | வாய்விட்டுச் சொன்னேன்; |
| தார்மிகை: | தார்மிகர்களான ஆசாரியர்களினால் | இதி இதம் | என்கிற இதனை |
| | | ஸஸாக்ஷிகயந் | ஸாக்ஷியமாகக் கொண்டு |
| தவ | தேவரீருடைய | அத்ய | இன்று |
| பர: | பாரமாக | மாம் | அடியேனை |
| அகாரிஷி | செய்யப்பட்டேன்; | தவ பரம் | தேவரீருடைய பொறுப்பாக |
| சரணம் இதி | சரணம் என்கிற | குரு | செய்து கொள்ளவேணும். |

* * * [தவ பரோஹம்] ஆராய்ந்து பார்க்குமிடத்தில் தேவரீர் கைக்கொள்ளுகைக்கீடான கைம்முதல் என் பக்கலில் ஒன்றுமில்லையாகிலும், யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிகம் என்கிற சில ஸுக்ருத விசேஷங்களைக் கல்பித்துக்கொண்டாகிலும் ரக்ஷிப்பதிலே ஊற்றமுடையீரான தேவரீர்க்கு என் பக்கலிலும் ஒன்றிரண்டு பற்றாசுகள் உண்டு; அவை காரணமாக அடியேனை தேவரீருடைய பரமாகவே ஆக்கிக்கொள்ளவேணுமென்கிறார். [தார்மிகை: அஹம் தவ பர: அகாரிஷி] இங்கு தார்மிகசப்தத்தாலே எம்பெருமானார் விவக்ஷிதர். ஸ்வஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தாரணத்தையும் திருவுள்ளம் பற்றியன்றோ அவர் பங்குனி யுத்திரத்திருநாளில் இருவருமான சேர்த்தியில் சரணாகதி செய்தருளிற்று. * अस्तु ते ; तथैव सर्वं संपत्स्यते * என்ற விடத்திற்கு பாஷ்யமிட்டருளின ச்ருதப்ரகாசிகாசார்யரும் இதனை விளக்கியருளினர். தேசிகனும் ந்யாஸதிலகத்தில் * अन्योऽनन्यग्रहणवशगः * என்கிற ச்லோகத்தில்ஸாமாந்யமாகவும், * उक्त्या धनञ्जयविभीषणलक्ष्यया ते प्रत्याय्य लक्ष्मणमुनेर्भवता वितीर्णम्। श्रुत्वा वरं तदनुबन्धमदावलिप्ते नित्यं प्रसीद भगवन् मयि रङ्गनाथ ॥ * என்கிற ச்லோகத்தில் விசேஷித்தும் இவ்வர்த்தத்தை வெளியிட்டருளினர்.

[சரணமித்யபி வாசமுக்தைசிரம்] ஏதேனு மொருபடியாக சரணமென்கிற வாக்கும் என்நாவில் வெளிவந்ததாயிற்று. [இதிதம் ஸாக்ஷிகயந்] எம்பெருமானுடைய ப்ரபத்தியிலே நான் அந்தர்ப்பூதன் என்னுமிடத்தையும், என் வாக்கினாலும் சரணமென்று சொன்னேனென்னுமிடத்தையும் பிரமாணமாகக் கொண்டு என்றபடி. ஸாக்ஷிகமென்றும் ப்ராமாணிகமென்றும் பர்யாயம். [அத்ய மாம் தவ பரம் குரு] யத்கிஞ்சித் வ்யாஜமாத்ரப்ரதீக்ஷியான தேவரீர் இவ்வளவையே பற்றுசாகக் கொண்டு அடியேனை ரக்ஷ்யபூதனாகத் திருவுள்ளம்பற்றி யருளவேணும். (102)

अकारिषि—कर्मणि लुङुत्तमैकवचनरूपम्.

दयाऽन्येषां दुःखासहनमनन्योऽसि सकलैः दयालुस्त्वं नाथः प्रणमदपराधानविदुषः ।
क्षमा ते रङ्गेन्दो! भवति न तरां नाथ! न तमां तवौदार्यं यस्मात्तव विभवमर्थित्वममथाः ॥ १०३ ॥

தயா ந்யேஷாம் து:க்காப்ரஸஹநமநந்யோஸி ஸகலை:
தயாளுஸ் த்வம் நாத: ப்ராணமதபராதாநவிதுஷ:;
க்ஷமா தே ரங்கேந்தோ! பவதி ந தராம் நாத! ந தமாம்
தவௌதார்யம் யஸ்மாத் தவ விபவமர்த்திஸ்வமமதா:. 103

| | | | |
|---|---|---|---|
| ரங்க இந்தோ | ஸ்ரீரங்கசந்திரனே! | க்ஷமா | பொறுமையானது |
| தயா | தயையாவது | ந பவதிதராம் | இருக்க ப்ரஸக்தியில்லை; |
| அந்யேஷாம் | பிறருடைய | யஸ்மாத் | யாதொரு காரணத்தினால் |
| து:க்க அப்ரஸஹநம் | துயரத்தை ஸஹித்திருக்க மாட்டாமையாகும்; | தவ | தேவரீருடைய |
| த்வம் | தேவரீரோ வென்னில் | விபவம் | செல்வத்தை |
| ஸகலை: | எல்லாரோடும் | அர்த்திஸ்வம் | யாசகர்களான பக்தர்களின் சொத்தாக |
| அநந்ய: அஸி | வேறுபடாதவராக இராநின்றீர்; | அமதா: | எண்ணியிருக்கின்றீரோ (அதனால்) |
| அத: | ஆகையால் | | |
| தயாளு: ந | தயை யுடையீரல்லீர்; | தவ | தேவரீருக்கு |
| ப்ராணமத் அபராதாந் | பக்தர்களின் அபராதங்களை | ஔதார்யம் | உதாரத்வமானது |
| அவிதுஷ: | அறியாதிருக்கின்ற | ந பவதிதமாம் | இருப்பதற்குச்சிறிதும் ப்ரஸக்தியில்லை. |
| தே | தேவரீருக்கு | | |

* * * [தயா ந்யேஷாம்] பெரிய பெருமாளுடைய தயை, க்ஷமை, ஔதார்யம் என்கிற திருக்குணங்களை வ்யாஜஸ்துத்யலங்கார மர்யாதையாலே ஸ்தோத்ரம் பண்ணுகிறார். "व्यक्तिर्व्याजस्तुतिर्निन्दास्तुतिभ्यां स्तुतिनिन्दयोः" என்பது வ்யாஜஸ்துதியின் லக்ஷணம். ஆபாதப்ரதீதியில் நிந்தைபோல் தோற்றும்; அது ஸ்துதியாகவே பர்யவஸிக்குமென்க. [அந்யேஷாம் து:க்காப்ரஸஹநம் தயா; த்வம்து ஸகலை: அநந்யோஸி; அத: த்வம் ந தயாளு:.] பிறருடைய துக்கங்கண்டு பொறுக்கமாட்டாமை தயை எனப்படுகிறது; பிறர் என்று சொல்லுவதற்கே விஷயமில்லையே. * सर्वं खल्विदं ब्रह्म, ऐतदात्म्यमिदं सर्वम्, तत्त्वमसि * இத்யாதி ச்ருதிகளின்படியே எல்லாரோடும் தேவரீர் அபின்னராகவே யிருப்பதனால் அந்யபதார்த்தமே யில்லை; அத ஏவ அந்யேஷாம் து:க்காப்ரஸஹநமாகிற தயை தேவரீர் பக்கலில் இல்லையென்ன வேண்டியதாகிறது.

[ப்ரணமதபராதாந் அவிதுஷ: தே க்ஷமா நபவதிதராம்] அடியவர்களுடைய அபராதங்களைக் கண்டு தண்டிக்க நினைக்காமல் பொறுப்பது க்ஷமாகுண மெனப்படுகிறது. ஸஹஸ்ரநாமத்தில் "அவிஜ்ஞாதா" என்று சொன்னபடி ஆச்ரிதர்களின்

அபராதங்களைப்பற்றின உணர்ச்சியே யில்லாத தேவரீர்க்கு அபராதஜ்ஞாநாநந்தரபாவியான பொறுமைக்கு ப்ரஸக்தி தானுமில்லையிறே.

[யஸ்மாத் தவ விபவம் அர்த்திஸ்வம் அமதா: (தஸ்மாத்) தவ ஔதார்யம் ந பவிதமாம்] தன்னுடைய பொருள்களை யாசகர்களுக்குக் கொடுப்பது ஔதார்யமெனப்படுகிறது; வஸ்துதஃ தேவரீருடைய பொருளாக எதுவுமில்லையே; * उदारास्सर्वे एवैते * என்று சொன்னபோதே ஸகலமும் அர்த்திகளின் சொத்தாக ஆயிற்றே; ஆகவே, ஸ்வகீயத்ரவ்யஸ்ய பரஸ்வத்வாபாதநரூபமான ஔதார்யத்திற்கு ப்ரஸக்தியில்லையாயிற்றே.

ஆக இவற்றால் என்ன தேறிற்றென்னில்: எம்பெருமான் எல்லாரையும் தன் உடலாகக் கொண்டிருப்பவன் என்பதும், அடியவர்களின் குற்றங்களைக் காணக் கண்ணிட்டிருப்பவன் என்பதும், யாசகர்களையும் உதாரர்களாகத் திருவுளம்பற்றியுள்ளான் என்பதும் தெரிவிக்கப்பட்டன. ஆழ்வான் அருளிச்செய்த வரதராஜஸ்தவத்திலுள்ள * अनन्याधीनत्वं तव किल जगुः * இத்யாதி ச்லோகத்தின் ப்ரணாலி இங்கு ஸ்மரிக்கத்தக்கது. (103).

गुणतुङ्गतया तव रङ्गपते ! भृशनिम्नमिमं जनमुन्नमय ।
यदपेक्ष्यमपेक्षितुरस्य हि तत्परिपूरणमीशितुरीश्वरता ॥ १०४ ॥

குணதுங்கதயா தவ ரங்கபதே ! ப்ருசநிம்நமிமம் ஜநமுந்நமய,
யதபேக்ஷ்யமபேக்ஷிதுரஸ்யஹி தத்பரிபூரணமீசிதுரீச்வரதா. 104

| | | | |
|---|---|---|---|
| ஹேரங்கபதே | ஸ்ரீரங்கநாதரே ! | அபேக்ஷிது: | யாசகனுடைய |
| ப்ருசநிம்நம் | மிகவும் பள்ளமான | அஸ்ய | இவ்வடியேனுக்கு |
| இமம் ஜநம் | இவ்வடியேனை | யத் அபேக்ஷ்யம் | எது விருப்பமோ |
| தவ | தேவரீருடைய | தத்பரிபூரணம் ஹி | அதை நிறைவேற்றுவதன்றோ |
| குண துங்கதயா | திருக்குணங்களின் மேட்டினால் | ஈசிது: | ஈச்வரனுக்கு |
| உந்நமய | நிரவி யருளவேணும்; | ஈச்வரதா | ஈச்வரத்வமாகும். |

* * * [குணதுங்கதயா.] பெரிய பெருமாளே ! தேவரீரோ ஸகலவித குணங்களாலும் உத்துங்கராயிரா நின்றீர்; அடியேனோ பள்ளமடை. ஒரு மேட்டைக் கொண்டு பள்ளத்தை நிரப்பவேண்டுதலால் தேவரீருடைய திருக்குணங்களாலே அடியேனுடைய தாழ்வைப் போக்கி * தம்மையே யொக்க அருள் செய்யவேணும். அபேக்ஷகனுடைய அபேக்ஷிதங்களைத் தலைக்கட்டித் தந்தருளாதொழியில் தேவரீருடைய ஸர்வேச்வரபாவும் ஒக்குமோ? அது இங்கவேணடிவ, * நிகரின்றி நின்ற என்நீசதைக்கு நின் அருளின்கண் அன்றிப் புகலொன்றுமில்லை, அருட்கும் அஃதேபுகல்-என்று கொள்ளீர் என்றாராயிற்று. இவ்விடத்தில் * निषादानां नेता कपिकुलपतिः कापि शबरी कुचेलः कुब्जा सा व्रजयुवतयो माल्यकृदिति । अमीषां निम्नत्वं वृषगिरिपतेरुन्नतिमपि प्रभूतैः स्रोतोभिः प्रसभमनुकम्पे ! समयसि ॥ * என்கிற தயாசதக ச்லோகம் அநுஸந்தேயம். (104)

त्वं मीनपानीयनयेन कर्मधीभक्तिवैराग्यजुषो बिभर्षि ।
रङ्गेश ! मां पासि मितंपचं यत्पानीयशाले मरुभूषु तत्स्यात् ॥ १०५ ॥

த்வம் மீநபாநீயநயேந கர்மதீபக்திவைராக்யஜுஷோ பிபர்ஷி,
ரங்கேச! மாம் பாஸி நிதம்பசம் யத் பாநீயசாலம் மருபூஷு தத்ஸ்யாத். 105

| | | | |
|---|---|---|---|
| ஹேரங்கேச | ஸ்ரீரங்கநாதரே! | நிதம்பசம் மாம் | அகிஞ்சனனான அடியேனை |
| த்வம் | தேவரீர் | பாஸி யத் | காத்தருள்வீராகில் |
| மீந பாநீய நயேந | மீனுக்குத் தண்ணீர் வார்க்கிறாப் போலே | தத் | அவ்வருள் |
| கர்ம தீ பக்தி வைராக்ய ஜுஷ: பிபர்ஷி | கர்ம ஜ்ஞான பக்தி ப்ரபத்தி யோக நிஷ்டர்களைப் பரிபாலிக்கின்றீர்; | மருபூஷு | பாலைநிலங்களில் |
| | | பாநீய சாலம் ஸ்யாத் | தண்ணீர்ப்பந்தல்வைத்தபடியாகும். |

* * * [த்வம் மீநேத்யாதி.] பெரிய பெருமாளே! கர்ம ஜ்ஞாந பக்தி யோகாதி பரிதர்களை தேவரீர் ரக்ஷித்தருளுகிறீரென்பது வாஸ்தவம். அது மீனுக்குத் தண்ணீர் வார்த்தாற்போலே யிருப்பதொன்று. சக்தர்களை ரக்ஷிப்பதனால் உமக்கு என்ன புகழுண்டு? உண்மையில் அகிஞ்சனனை அடியேனைக் காத்தருள்வீராகில் அது, பாலைநிலத்திலே தண்ணீர்ப்பந்தல் வைப்பதோடொக்குங்காணீர் என்று ஸ்வரக்ஷ்யத்வாவச்யம்பாவத்தை ஸோபபத்திகமாக விண்ணப்பித்து ஸ்தவத்தையும் தலைக்கட்டினாராயிற்று. (105)

इति परवादिभयङ्करवंशीयाण्णङ्गराचार्यसंकलिता ।
श्रीरङ्गराट्स्तवस्य व्याख्या कृपया सतां समाप्तिमगात् ॥

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்
இயற்றிய
ஸ்ரீரங்கராஜஸ்தவவியாக்கியானம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

## உரைகாரர் விண்ணப்பம்.

गुरूणां लघूनां च सर्वस्तवानां विवृत्यां प्रवृत्तो जनोऽयं सुधन्यः ।
धुरि श्रीस्तवस्यैव टीकां व्यतानीत् समाप्तौ च लक्ष्म्यास्स्तवस्यैव साऽभूत् ॥

அன்பிற் சிறந்த ஆஸ்திகர்காள்! ஆழ்வார்களருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களுக்கும், ஆசாரியர்களருளிச்செய்த ஸ்தோத்ரங்களுக்கும் பூர்த்தியாக வியாக்யானமெழுதவேணுமென்கிற குதூஹலம் அடியேனுக்குப் பதினேட்டாவது ப்ராயத்தில் ஒரு நன்னாளில் தோன்றிற்று. தோன்றினவன்றே, திவ்யப்ரபந்தங்களில் இராமாநுச நூற்றந்தாதிக்கும், ஸ்தோத்ரங்களில் பஞ்சஸ்தவாந்தர்கதமான ஸ்ரீஸ்தவத்திற்கும் வியாக்யானமெழுதத் தொடங்கினேன். இடையிடையில் மற்றும் பல துறைகளிலும் பலவகை நூல்களும் வியாஸங்களும் பத்ரிகைகளும் ப்ரசுரிக்க நேர்ந்ததனால் முக்கியமாகக்கொண்ட திவ்ய ப்ரபந்தவ்யாக்யான ஸ்தோத்ரவ்யாக்யான லேகனமும் பூர்த்தியடைவதற்கு இத்தனை காலமாயிற்று. உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப்ரபந்தம், ஸப்த காதை, ஞானஸாரம், ப்ரமேயஸாரம் உட்பட தமிழ்ப் பிரபந்தங்களெல்லாவற்றிற்கும் தெளிவுரை யெழுதப்பட்டுப் பல பதிப்புகள் இதுகாறும் பிரசுரிக்கப்பட்டன. அவ்வண்ணமாகவே முகுந்தமாலாதி நக்ஷத்ரமாலாந்தமான ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் மிகத்தெளிவான வியாக்கியானம் எழுதப்பட்டு இவையும் பல பதிப்புகளேறின. இ[illegible] ஸ்ரீகுணரத்நகோச வியாக்கியான மொன்றுதான் இப்போது முதற்பதிப்பாக வெளிவருகின்றது. அடியேனுடைய ஸ்தோத்ரவியாக்கியானம் பிராட்டியின் ஸ்தோத்ரத்தில் உபக்ரமமாகி அதிலேயே ஸமாப்தமாகிறதென்று பெரிய பிராட்டியாருடைய கருணைத்திறத்திற்கு மிகவும் வியப்படைகின்றேன். [அதாவது, ஸ்ரீஸ்தவத்திலே ஆரம்பமாகி ஸ்ரீகுணரத்நகோசத்திலே முடிவடைந்தது.] இத்தோடு, பூர்வாசாரியர்களருளிச்செய்த ஸகலஸ்தோத்ரங்களுக்கும் நிச்சேஷமாக வியாக்கியானம் வெளியிடப்பட்டு முடிந்திட்டது. இனி ஸ்ரீமத் வேதாந்த தேசிக ஸ்தோத்ரங்களில் சேஷித்தவைகளுக்கு வியாக்கியானம் வெளியிடப்பட்டுவரும்.

*இதுவரை வியாக்கியானத்துடன் வெளியிடப்பட்டுள்ள ஸ்தோத்ரங்களாவன:—*

1. முகுந்தமாலை.
2. ஸ்தோத்ரரத்னம்.
3. சதுச்ச்லோகீ.
4. தேவராஜாஷ்டகம்.
5. சரணாகதிகத்யம்.
6. ஸ்ரீரங்ககத்யம்
7. ஸ்ரீவைகுண்டகத்யம்
8. ஸ்ரீவைகுண்டஸ்தவம்.
9. அதிமாநுஷஸ்தவம்.
10. ஸுந்தரபாஹுஸ்தவம்.
11. வரதராஜஸ்தவம்
12. ஸ்ரீஸ்தவம்
13. 14. ஸ்ரீரங்கராஜஸ்தவம் இரண்டு சதகங்களும்.
15. ஸ்ரீகுணரத்நகோசம்.
16. அஷ்டச்லோகீ.

17. ஸ்ரீரங்கநாதஸ்தோத்ரம்
18. ஸுதர்சநசதகம்.
19. க்ஷமாஷோடசீ.
20. ஸ்ரீவேங்கடேசஸ்தோத்ரம்
21. நரஸிம்ஹாஷ்டகம்
22. தாடீபஞ்சகம்
23. பராங்குசாஷ்டகம்
24. ராமாநுஜசதுச்ச்லோகீ
25. தேவராஜமங்களம்
26. யதிராஜவிம்சதி
27. பூர்வதிநசர்யா.
28. உத்தரதிநசர்யா
29. நக்ஷத்ர மாலிகை
30. கருடோத்ஸவபஞ்சகம்.
(தேசிக ஸ்தோத்ரங்களில்)
31. ஹயக்ரீவஸ்தோத்ரம்
32. வைராக்யபஞ்சகம்
33. கோதாஸ்துதி
34. பரமார்த்தஸ்துதி
(தேசிகமங்களம்)

ஆக இவ்வளவு ஸ்தோத்ரங்களுக்கு வியாக்கியானம் அச்சேறியுள்ளது. இவற்றுள் ஸுதர்சநசதக வியாக்கியானமொன்று மாத்திரமே புனர் முத்ரணத்திலிருப்பதால் இப்போது கிடைக்க அரிதாயிருக்கின்றது. மற்ற ஸ்தோத்ர வியாக்கியானங்கள் யாவும் கிடைக்கக்கூடியவை. இவற்றில் அநேகஸ்தோத்ரங்கள் தெலுங்கு பாஷையிலும் வியாக்கியானிக்கப்பட்டுத் தெலுங்குலிபியில் அச்சிடப்பட்டுள்ளன.

ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயக்ரந்த பர்யவேஷண குதூஹலமுள்ளவர்கள் எம்முடைய புஸ்தக ஸூசியை வரவழைத்துப்பார்த்து அபேக்ஷிதங்களைத்தெரிவிப்பது.

இங்ஙனம்;

19—3—1954 — ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர்,

விஜய-ௐ பங்குனியுத்தரம் — காஞ்சீபுரம்.

"வடநாடுந் தென்னாடும் ஆழ்வார்கடந்த
இடப்பொருளை யாரணநூ லாரமுதைப் பெற்றின்பம்
கண்டானந் தம்விஞ்சித் கூத்தாடச் செய்திட்டான்
அண்ணங் கராசா ரியன்

திருப்பாவை முப்பதையும் விண்மொழியாக்கி
கருத்துரையும் வானுலர நல்விரிவும் தன்கருணை
தண்ணளி யாலளித்திட் டானிமையோர் போற்றிடும்
அண்ணங் கராசா ரியன்

அண்ணங் கராசா ரியனென்றே ஞானந்தம்
கொண்டுரைத்தேன் வாழ்த்தினேன் வாயார—தாழ்த்தினேன்
சென்னிதனைச் சேவடிக்கீழ் கேட்டேனென் டிசையும்
மன்னியசீர் செவிகிறைய விங்கு

மூதன்முத லாச்செய்யுளிசைப்பான் விழையுமென்பா
அதனுடைய புன்மைதனை விசாயமெந்தன்
இதயத்தா ரேக்கிக்கா னென்றிறைஞ்சி யுந்தன்
பதப்போதிற் சூட்டுவனே யான்." R.P.